Bible Answers (TAMIL)

# பைபிள் பதில்கள்



அடிக்கடி கேட்கப்பட்டும் அபூர்வமாய்ப் பதிலளிக்கப்படும்
100 கேள்விகளுக்குத் தெளிவான பதில்கள்

R. ஸ்டான்லி

# பைபிள் பதில்கள்

**R. ஸ்டான்லி,** B.E., M.Tech.

*திருமறைப் போதகராய் மாறிய*
*ஒரு கட்டிடப் பொறியியலர்*

Blessing Youth Mission
Church Colony
Vellore 632 006 India
*Tel: 00 91 416 2242943, 22489043*
*<hq@bymonline.org> www.bymonline.org*

**BIBLE ANSWERS** (Tamil)
Formerly published as two volumes, titled *Frank Answers*



This Edition: January 2015

இப்புத்தகத்தில் திருமறையின்
பழையதும் புதியதுமான பல மொழியாக்கங்கள்
பயன்படுத்தப்பட்டுள்ளன.

Available in English also.

*Printed by*
Bapuji Printers,
Chennai

# துவக்கவுரை

பிரசங்கிமாராகிய நாம் பொதுவாக இரு தவறுகள் செய்கிறோம்: மக்கள் கேட்காத கேள்விகளுக்குப் பதில் தருகிறோம்; அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் தருவதில்லை. தவறாய்ப் புரிந்துகொள்ளப்படுவோமோ அல்லது நமது புகழ் போய்விடுமோ என்ற பயத்தில் பதில் தெரிந்தாலும் கடினமான கேள்விகளைக் கேட்டும் கேளாமலும் இருந்துவிடுகிறோம். ஆனால் மக்களுக்குப் பயனுள்ளவைகளில் ஒன்றையும் மறைத்து வைக்காமலிருப்பது பிரசங்கியின் உண்மைக்கும் உத்தமத்திற்கும் ஓர் அடையாளமாகும் (அப் 20:20,26).

பதில் கிடைக்காத கேள்விகள் நிறைந்திருப்பது அநேகக் கிறிஸ்தவரின் வளர்ச்சின்மைக்கு ஒரு காரணமாகும். தெளிவில்லையேல் திசைதெரியாது, வழிபிசகும். போதகர்கள் பேசுவதைக் ''கேட்டதாலும்'' அவர்களை ''வினவினதாலும்'' வாலிபன் இயேசு அறிவிலும் புத்தியிலும் விருத்தியடைந்தார் (லூக் 2:46,47,52).

ஆசீர்வாத இளைஞர் இயக்கத்தின் *''ஆசீர்வாதம்'' (Blessing)* எனும் மாதாந்திரப் பத்திரிகைக்கு 1972 முதல் 2003 வரை பொறுப்பாசிரியராயிருக்கும் சிலாக்கியம் எனக்குக் கிடைத்து. பல்வேறு தலைப்புகளில் கட்டுரைகள் எழுதியது தவிர்த்து, விசுவாசிகளால் அடிக்கடி கேட்கப்படும் கேள்விகளுக்கு அவ்வப்போது பதில் எழுதிவந்தேன். 50 கேள்விகள் கொண்ட முதல் தொகுப்பு 1994இலும் இன்னும் 50 கேள்விகள் கொண்ட இரண்டாம் தொகுப்பு 2000இலும் வெளிவந்தன. வாசகரிடமிருந்து இப்புத்தகங்களுக்கு வந்த அளவு சாட்சிகள் எனது வேறெந்த புத்தகத்திற்கும் வந்ததில்லை. இப்பதில்



கள் பலவற்றைத் தங்கள் பத்திரிகைகளில் சிலர் மறுபடி வெளியிட்டுள்ளனர். கிறிஸ்தவர் அநேகருக்கு இது ஒரு துணைக் கையேடாகிவிட்டது.

இவ்விரு தொகுப்புகளையும் இப்பொழுது சேர்த்து 100 கேள்வி-பதில்களாய் வெளியிடுவதில் பெரிதும் மகிழுகிறேன்.

நபர்களையல்ல, பொருளையே மனதிற்கொண்டு இக்கேள்விகளுக்குப் பதிலளித்திருந்தும் தாங்கள் விசுவாசிக்கும் அல்லது அப்பியாசிக்கும் சில காரியங்களை நான் ஆமோதிக்கவில்லையென எனது நண்பர்கள் சிலர் வருந்தலாம். சரியான பதில்கள் தரவேண்டுமானால் இது தவிர்க்கமுடியாத நிலையாகும். சத்தியம் பிரிக்கத்தான் செய்யும். ஆனால், உண்மையெதுவென உண்மையாய்த் தேடுவோருக்கு உதவுவதே எனது உண்மையான நோக்கமாகும்.

உங்கள் வாராந்திர வேதபாட வகுப்புகளில் வாரத்திற்கு ஒரு கேள்வி-பதிலைப் படித்தால் ஈராண்டுகளுக்குப் போதுமான பயனுள்ள சத்தியங்கள் இங்குண்டு. கடிதங்களுக்குத் தனிப்பட்ட முறையில் பதிலெழுத எனக்கு நேரமில்லை. நான் தொடர்ந்து சத்தியத்தை அன்பினால் பேசும்படி எனக்காக ஜெபியுங்கள்.

*—R. ஸ்டான்லி*
*ஏப்ரல் 2013*

# பொருளடக்கம்


*பகுதி ஒன்று: கிறிஸ்தவ வாழ்வு* *(பக்கங்கள் 9-38)*

1. இரட்சிக்கப்பட்டிருக்கிறேன் என்று அறியமுடியுமா? ... 10
2. சோதனைகளை மேற்கொள்வது எப்படி? ... 11
3. கர்த்தருடைய ஜெபத்தைச் சொல்லவேண்டுமா? ... 12
4. ஜெபத்தில் மனச்சிதறலைத் தவிர்ப்பது எப்படி? ... 14
5. யாரை நோக்கி ஜெபிக்கவேண்டும்? ... 16
6. முழங்கால்படியிடுதல் கட்டாயமா? ... 17
7. அமைதியாய் ஆராதிக்க முடியாதோ? ... 19
8. தண்ணீர் ஞானஸ்நானம் கட்டாயமா? ... 21
9. திருமுழுக்கின்போது பெயர் மாற்றம் அவசியமா? ... 22
10. அவிசுவாசிகளிடமிருந்து பிரிந்து வாழ்தலென்றால் என்ன?... 25
11. விசுவாசிகளுக்குத் தோல்வியே வராதா? ... 28
12. தேவ சித்தத்தைத் திட்டமாய் அறியமுடியுமா? ... 31
13. கடவுள் நமது வாழ்க்கைக்கு முழு வரைபடத்தையும் கொடுத்துவிடுகிறாரா? ... 33
14. புத்தாண்டுத் தீர்மானங்கள் பயனுள்ளவைதானா? ... 36

*பகுதி இரண்டு: கிறிஸ்தவ உபதேசம்* *(பக்கங்கள் 39-90)*

15. திரித்துவத்தை விளக்கமுடியுமா? ... 40
16. வேதாகம நவீன மொழியாக்கங்களைப் பற்றி...? ... 43
17. வேத வியாக்கியானங்களைப் படிக்கலாமா? ... 48
18. வேத வசன விளக்கங்கள் வேறுபடுவதேன்? ... 50
19. பழைய ஏற்பாடா, புதிய ஏற்பாடா? ... 53
20. சனிக்கிழமையா, ஞாயிற்றுக்கிழமையா? ... 54
21. குழந்தை ஞானஸ்நானம் வேதத்திற்குப் புறம்பானதா? ... 56





22. எந்த நாமத்தில் ஞானஸ்நானம்? ... 59
23. பூரண சுவிசேஷம் என்றால் என்ன? ... 60
24. தசமபாகம் கட்டாயமா? ... 63
25. விசுவாசிகள் மருந்து சாப்பிடக்கூடாதா? ... 64
26. நகையணிவது பாவமா? ... 66
27. படங்கள், சிலைகள் வைத்துக்கொள்ளலாமா? ... 69
28. விசுவாசிகள் பன்றியிறைச்சி சாப்பிடலாமா? ... 71
29. கிறிஸ்துமஸ் கொண்டாடலாமா? ... 73
30. சுகபோக உபதேசம் சரிதானா? ... 74
31. பூரணப்படுதல் என்றால் என்ன? ... 78
32. ''மரணத்துக்கேதுவான பாவம்'' எது? ... 79
33. நமது இரட்சிப்பை இழக்க முடியுமா? ... 82
34. சபை எடுத்துக்கொள்ளப்படுதல் உண்டா? ... 85
35. கிறிஸ்து எப்பொழுது திரும்ப வருவார்? ... 88

*பகுதி மூன்று: ஆவியானவரும் வரங்களும்* *(பக்கங்கள் 91-128)*

36. அன்னிய பாஷை ஒன்றுதான் அடையாளமா? ... 92
37. அன்னிய பாஷைகள் ஒழிந்துவிட்டனவா? ... 93
38. வரங்கள் ஒன்பதா, பத்தொன்பதா? ... 95
39. தேவன் இன்று எல்லாரையும் சுகமாக்குகிறாரா? ... 97
40. கைகளை வைக்குதல்பற்றி...? ... 98
41. ஜெப எண்ணெயைப்பற்றி...? ... 100
42. கண்கவரும் அற்புதங்கள் அபூர்வம் ஏன்? ... 102
43. பிரசங்கிமார் மக்கள்மீது ஊதலாமா? ... 107
44. ஆவியில் தரையில் விழுதலைப்பற்றி...? ... 109
45. பரிசுத்த சிரிப்பு என்றால் என்ன? ... 112
46. அக்கினி அபிஷேகம் என்றால் என்ன? ... 114
47. ஆவியானவருக்கு விரோதமான தூஷணம் யாது? ... 116
48. விசுவாசிகளுக்குப் பிசாசு பிடிக்குமா? ... 118
49. நாம் பிசாசைக் கட்ட முடியுமா? ... 120
50. கத்தோலிக்கர் அபிஷேகம் பெறுவதைப்பற்றி...? ... 122
51. இதுதான் எதிர்பார்த்திருந்த எழுப்புதலா? ... 126

***பகுதி நான்கு: திருச்சபை*** *(பக்கங்கள் 129-166)*

52. எந்தச் சபையில் சேருவது? ... 130
53. ஆவிக்குரிய சபை எது? ... 131
54. எதுதான் மணவாட்டி சபை? ... 135
55. இரண்டு சபைகளில் அங்கம் வகிக்கலாமா? ... 136
56. யார் ஞானஸ்நானம் கொடுக்கலாம்? ... 139
57. ஜெபப் புத்தக முறையா, சுயாதீன ஆராதனையா? ... 140
58. நடனமாடி ஆராதிக்கலாமா? ... 144
59. அவிசுவாசிகளுடன் விசுவாசிகள் அப்பம் பிட்கலாமா? ... 146
60. பாதம் கழுவுதல் ஒரு நியமமா (Ordinance)? ... 147
61. Reverand, Father போன்ற பட்டங்களைப் பயன்படுத்தலாமா? ... 149
62. பெண்கள் முக்காடிட்டுக்கொள்ள வேண்டுமா? ... 152
63. பெண்கள் கரங்களை உயர்த்தி ஆராதிக்கலாமா? ... 154
64. பெண்கள் பிரசங்கிக்கலாமா? ... 156
65. தசமபாகம் யாருக்கு? ... 158
66. பெருங்கூட்ட சபைகளைப்பற்றி...? ... 162

***பகுதி ஐந்து: கிறிஸ்தவ ஊழியம்*** *(பக்கங்கள் 167-205)*

67. முழுநேரக் கிறிஸ்தவப் பணிக்கு ''அழைப்பு'' கட்டாயம் தேவையா? ... 168
68. இறையியல் கல்லூரிப் படிப்பு கட்டாயமா? ... 171
69. பிறரது பிரசங்கங்களைப் பிரசங்கிக்கலாமா? ... 173
70. இன்றும் அப்போஸ்தலர் இருக்கிறார்களா? ... 175
71. விடுதலை ஊழியத்தை நான் பெற்றுக்கொள்வதெப்படி?... 177
72. சுகமளிக்கும் கூட்டங்களைப்பற்றி...? ... 181
73. ஜெப ஊர்வலம்பற்றி...? ... 182
74. ஊழியச் சங்கங்களை வேதம் ஆமோதிக்கிறதா? ... 186
75. சுயாதீன ஊழியங்கள் சரியா? ... 189
76. நிறுவனங்களிலிருந்து ஊழியர்கள் விலகுவதேன்? ... 191
77. ஒரு தலைவனைப் பின்பற்றலாமா? ... 196
78. கிறிஸ்தவத் தலைவர்கள் பின்வாங்குவதேன்? ... 198
79. காலத்திற்குமுன் தேவ ஊழியர் இறப்பதேன்? ... 201
80. சுவிசேஷத்தைக் கேள்விப்படாமலேயே இறப்போரின் நிலை? ... 203

***பகுதி ஆறு: பாலுறவும் திருமணமும்*** *(பக்கங்கள் 207-226)*

81. சுயமாய் விந்தெடுத்தல் பாவமா? ... 208
82. பாலுறவு பரிசுத்தமற்றதா? ... 209
83. அவிசுவாசியை விசுவாசி மணக்கலாமா? ... 211
84. மாற்றுக் கலாச்சாரத் திருமணங்களைப்பற்றி...? ... 213
85. பெற்றோர் ஒழுங்குபண்ணும் திருமணங்கள்தான் சிறந்தவையா? ... 216
86. மணமகள் மூத்தவளாயிருக்கலாமா? ... 218
87. திருமணங்களில் ரொக்கம் வாங்கலாமா? ... 220
88. குடும்பக்கட்டுப்பாடு தவறா? ... 222
89. குழந்தையின்மை சாபமா? ... 225

***பகுதி ஏழு: சமூக வாழ்வு*** *(பக்கங்கள் 227-252)*

90. என் விரோதிகளை நேசிப்பது எப்படி? ... 228
91. வைபவங்களில் கொஞ்சம் குடித்துக்கொள்ளலாமா? ... 229
92. விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைச் சாப்பிடலாமா? ... 230
93. விசுவாசிகள் திரைப்படம் பார்க்கலாமா? ... 233
94. விளையாட்டுப் போட்டிகள் நேர வீணடிப்பா? ... 235
95. கொடி வணக்கம் சரியா? ... 238
96. யாருக்கு ஓட்டு? ... 240
97. கிறிஸ்தவர்கள் லாட்டரிச் சீட்டு வாங்கலாமா? ... 243
98. கல்லூரிகளில் பணம் கொடுத்து இடம் வாங்கலாமா? ... 244
99. கல்லறைகளைப் பார்த்துவருவது தவறா? ... 247
100. கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்தை இந்திய மயமாக்கவேண்டுமோ? ... 249

**பகுதி ஒன்று**

# கிறிஸ்தவ வாழ்வு



## 1. இரட்சிக்கப்பட்டிருக்கிறேன் என்று அறியமுடியுமா?

ஆம், இரட்சிப்பு இன்றைய அனுபவமும் நாளைய நம்பிக்கையுமாகும். அப்போஸ்தலன் யோவான் இப்படி எழுதுகிறான்: நாம் மரணத்தை விட்டு நீங்கி ஜீவனுக்குட்பட்டிருக்கிறோமென்று ''அறிந்திருக்கிறோம்.'' நாம் தேவனால் உண்டாயிருக்கிறோமென்று ''அறிந்திருக்கிறோம்'' (1 யோ 3:14; 5:19).

நீங்கள் கிறிஸ்துவை விசுவாசித்து அவரை ஏற்றுக்கொள்ளும்போது தேவனது பிள்ளையாகும் உரிமை பெறுகிறீர்கள் (யோ 1:12). இரட்சிக்கப்படுகிறீர்கள் (அப் 16:31). உங்களது பாவங்கள் மன்னிக்கப்பட்டு கிறிஸ்துவின் இரத்தத்தால் கழுவப்படுகிறீர்கள் (வெளி 1:6). இந்த நிச்சயத்தை உங்களுக்குத் தருபவர் பரிசுத்த ஆவியானவர். நீங்கள் தேவனுடைய பிள்ளையென அவர் உங்கள் ஆவியுடன் சாட்சி கொடுக்கிறார் (ரோ 8:16). இதற்குப் பிரதானமாக எழுதப்பட்ட தேவ வார்த்தையை அவர் பயன்படுத்துகிறார் (யோ 20:31).

நீங்கள் இரட்சிக்கப்படும்போது தெளிவான சில அடையாளங்கள் தோன்றும். குற்றவுணர்வு அகன்று இரட்சிப்பின் மகிழ்ச்சியுண்டாகும். தேவன் மீதும் அவரது வார்த்தை மீதும் புதியதோர் நேசம் பிறக்கும். ஜெபம் இன்பமாகும். பரிசுத்தமாய் வாழ விருப்புண்டாகும். வாழ்க்கையின் நோக்கே மாறிவிடும். தேவப்பிள்ளைகளோடுள்ள ஐக்கியம் இனிதாகும். பிறரது இரட்சிப்பைக்குறித்த கரிசனை உண்டாகும். இவை யாவும் முழு அளவில் காணப்படாது; ஆனால் புதிதாய்ப் பிறந்த குழந்தைகளாய் இவைகளில் நீங்கள் வளரத் துவங்குவீர்கள்!

இரட்சிப்பு முக்காலத்திற்குமுரியது. கடந்த கால இரட்சிப்பு பாவத்தின் தண்டனையிலிருந்தும், நிகழ்கால இரட்சிப்பு பாவத்தின் வல்லமையிலிருந்தும் கிடைக்கும் விடுதலையாகும். எதிர்கால இரட்சிப்பு பாவத்தின் பிரசன்னத்திலிருந்தே கிடைக்கும் விடுதலையாம். நிகழ்கால இரட்சிப்பின் அனுபவத்தில் சோதனையில்லாதிராது. சோதனை பெருகுவதைக் கண்டு கலங்கிவிடாதீர்கள். சோதனையல்ல, அதற்கு இடங்கொடுப்பதுதான் பாவம்.

பிசாசு ஒரு பொய்யன். அவனுக்குச் செவிமடுக்காதீர்கள். ஏதோ ஒரு சோதனையில் நீங்கள் விழுந்துவிட்டால், இனி நீங்கள் தேவப் பிள்ளையில்லை என்று உங்கள் காதில் ஓதுவான். சோதனையில் விழுந்தால் பிள்ளை என்ற நிலையை நீங்கள் இழந்துவிடுவதில்லை. தேவனோடுள்ள ஐக்கியம்தான் பாதிக்கப்படுகிறது. அறிக்கையிட்டு உடனே கழுவப்படுங்கள் (1 யோ 1:7-9). நீங்கள் அவர் கையில் பத்திரமாய் இருப்பீர்கள். ஒருவரும் உங்களைப் பறித்துக்கொண்டு போக முடியாது (யோ 10:28,29). மகிழ் கொண்டாடுங்கள்!

## 2. சோதனைகளை மேற்கொள்ளுவது எப்படி?

இயேசுவை நோக்கிப் பாருங்கள். அவர்தான் பதில். ''எல்லா விதத்திலும்'' நம்மைப்போல் சோதிக்கப்பட்டும் வென்றவர் அவரே (எபி 4:15). அவர் சோதிக்கப்படுகிறவர்களுக்கு உதவி செய்ய வல்லவரா யிருக்கிறார் (எபி 2:18).

நாம் முதலாவது நமது உடலின் அங்கங்களை ஜீவபலியாக தேவனது பீடத்தில் படைக்கவேண்டும் (ரோ 12:1). நாம் நம்முடையவர்களல்ல. விலைக்கு வாங்கப்பட்டோம். நாம் அவருக்கே சொந்தம். எவரையும் இச்சையோடு இனி பார்ப்பதில்லை என்று உங்கள் கண்களோடு உடன்படிக்கை பண்ணுங்கள் (யோபு 31:1). விலக்கப்பட்டதைத் தொடக்கூடாதென்று உங்கள் கரங்களைக் கர்த்தருக்கு அர்ப்பணித்து விடுங்கள். கிறிஸ்து எங்கே போகமாட்டாரோ அங்கே உங்கள் கால்களும் செல்லக் கூடாது. இப்படி ஒவ்வொன்றாய் ஒப்புக்கொடுங்கள் (ரோ 6:13). காலைதோறும் இந்தச் சமர்ப்பணத்தை நினைவுபடுத்திக்கொள்ளுங்கள்.

உங்களுக்குள் வாசமாயிருக்கும் கிறிஸ்துவினாலே பாவத்திற்கு மறுப்புச்சொல்லும் வல்லமை பெறுவீர்கள். நீங்கள் கிறிஸ்துவோடு மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, எழுந்திருந்து, பரமேறியுள்ளீர்களே! (ரோ 6:3,4). கிறிஸ்துவோடு இவ்விதம் அடையாளப்படுத்திக்கொள்ளுதலை அடிக்கடி தியானியுங்கள். சோதனையை மேற்கொள்ள அவ்வப்போது பலம் பெற்றுக்கொள்ள கிறிஸ்து நமக்கு ஜெபிக்கப் போதித்துள்ளார். நமது பூவுடல் பலவீனமுள்ளது. நாம் விழித்திருந்து ஜெபித்தால்தான் சோதனையை மேற்கொள்ளுவதற்கான நமது விருப்பம் வினையாகும் (மத் 26:41).



கிறிஸ்து சோதிக்கப்பட்டபோது சாத்தானுக்கு எதிராக ஆவியின் பட்டயமாகிய தேவ வசனத்தைக் கையாடினார் (மத் 4:4,7,10; எபே 6:17). தவறாது வேதத்தைத் தியானியுங்கள். தேவனுக்கு விரோதமாகப் பாவம் செய்யாதபடி தாவீது அவரது வசனத்தைத் தன்னிதயத்தில் மறைத்து வைத்திருந்தான் (சங் 119:11). வசனத்தால் நிறைந்திருங்கள். சோதனையின்போது சரியான திருவசனத்தை ஆவியானவர் உங்களது நினைவுக்குக் கொண்டு வருவார்.

தனித்திராதீர்கள். உங்களுக்கு தேவப்பிள்ளைகளின் ஐக்கியம் தேவை. முப்புரிநூல் எளிதாய் அறாது (பிர 4:9-12).

சோதனையை மேற்கொள்ளும்போதெல்லாம் யுத்தம் வலுக்கத்தான் செய்யும். ''கர்ஜிக்கும் சிங்கம்'' போன்ற பிசாசு உங்களை விடமாட்டான் (1 பேது 5:8). ஆனால் ''உலகிலிருப்பவனிலும் உங்களிலிருப்பவர் பெரியவர்'' (1 யோ 4:4). அவரது இரத்தத்தில் அடைக்கலம் புகுந்துவிடுங்கள், அவரது கிருபையில் சார்ந்திடுங்கள். பாவம் உங்களை மேற்கொள்ளாது (ரோ 6:14).

## 3. கர்த்தருடைய ஜெபத்தைச் சொல்லவேண்டுமா?

ஒரு சில சபைகளில் மக்கள் கிளிப்பிள்ளைபோல் கர்த்தருடைய ஜெபத்தை அர்த்தமும் உணர்வுமின்றிச் சொல்லுகிறார்களென்று மற்ற சபையினர் கர்த்தருடைய ஜெபத்தைச் சொல்லுவதேயில்லை. இது குளிப்பாட்டிய நீரோடு குழந்தையையும் எறிந்துவிடுவது போன்றது! அர்த்தமற்ற பிரயோகத்திற்குப் பரிகாரம் அப்பிரயோகமல்ல. கிறிஸ்தவர்கள் பலர் அர்த்தமின்றி அல்லேலூயா போடுவதுண்டு. அப்படியானால், அழகான இப்பரலோகத் துதிச்சொல்லை நாமும் உச்சரிக்கக்கூடாதோ? குருட்டு எதிர்ச்செயல்கள் நிறைவான ஆசீர்வாதங்களை நம்மிடமிருந்து திருடிவிடும்.

''நாம் ஏற்றபடி வேண்டிக்கொள்ளவேண்டியதின்னதென்று அறியா மலிருப்பதே'' நம்மெல்லாருக்குமிருக்கும் பொதுவான பலவீனமாகும் (ரோ 8:26). மட்டுமல்ல, தவறாகக் கற்றவை பல நமது ஜெப வாழ்வி லிருந்து களையப்படவேண்டும். பலமுறை நாம் புறவினத்தார்போல் தான் ஜெபிக்கிறோம். கர்த்தருடைய ஜெபம் நமக்கு மாதிரி ஜெப மாகும். கிறிஸ்துவின் ஜெபப் பள்ளியில் நாம் கற்கவேண்டிய முதல் ஜெபம் அதுவே. வீண் அலப்பலுக்கும் தவறான முக்கியத்துவ வரி சைக்கும் புறவினத்தாரின் ஜெபங்கள் பேர்போனவை. ஆனால் கர்த்த ருடைய ஜெபத்திலுள்ள ஏழு வேண்டுதல்களில் ஒன்று மட்டுமே உடல் தேவையை அடுத்தது. நமது ஜெபங்கள் கர்த்தருடைய ஜெபத் தின் மாதிரியில் அமைந்தால் நமது ஜெப வாழ்வு என்னே புரட்சிய டையும் தெரியுமா? (மத் 6:7-13). ஜெபங்களிலெல்லாம் இரத்தினச் சுருக்க ஜெபமாகிய கர்த்தருடைய ஜெபத்தைப் புது விசுவாசிகளும் சிறுவர்களும் மனனம் செய்ய ஊக்குவிக்கப்படவேண்டும்.

தங்களது முதல் பயணத்திலிருந்து திரும்பி வந்த இயேசுவின் மிஷனரிச் சீடரில் ஒருவன் கேட்டுக்கொண்டதால் அவர் இந்த ஜெபத்தைக் கற்பித்தாரென லூக்கா எழுதியுள்ளான் (லூக் 10:1-5,17; 11:1-4). பணப்பையையோ வேறு எப்பையையோ எடுத்துச் செல்ல வேண்டாமென்று இயேசு அவர்களுக்குப் பணித்திருந்தார். எனவே ''அன்றன்றுள்ள'' அப்பத்திற்காகப் பிதாவிடம் ஜெபித்து நம்பிக்கை யாயிருக்கும்படி அவர்களுக்குப் போதித்தார்! ஆம், கர்த்தருடைய ஜெபம் உண்மையாகவே ஒரு மிஷனரி ஜெபமாகும். அதின் துவக்க மும் முடிவும் முறையே மிஷனரிப் பணியின் குறியும் முடிவுமாகும். ஆத்துமாதாயகர் ஒவ்வொருவரும் தினமும் அர்த்தத்தோடு இந்த ஜெபத்தைச் சொல்ல ஊக்குவிக்கிறேன். அப்பொழுதுதான் அவர்கள் தங்கள் சொந்தப் பெயர்ப்புகழ் நாடவும், சொந்த சாம்ராஜ்யங்கள் கட்டவும், சொந்த விருப்பங்கள் இச்சைகளை நிறைவேற்றவும் உண் டாகும் சோதனைகளை மேற்கொள்ள முடியும்.

இயேசுவும் அப்போஸ்தலரும் அடிக்கடி தங்கள் ஜெபங்களை வேத வசன வார்த்தைகளாலேயே ஏறெடுத்தனர் (மத் 27:46; சங் 22:1; அப் 4:24-26; சங் 2). யேகோவாவை ஆராதித்தோருக்குச் சங்கீதப் புத்தகம் ஜெபப் புத்தகமாகவும் தொழுகைப் புத்தகமாகவும் பயன் பட்டது. வசனங்களையே ஜெபமாய்ச் சொல்லுவதற்கும், பாடல்



களாகப் பாடுவதற்கும் இணையேது? தேவ வசனமே தேவ சித்தமாம். ''நாம் எதையாகிலும் அவரது சித்தத்தின்படிக் கேட்டால், அவர் நமக்குச் செவிகொடுக்கிறார்'' (1 யோ 5:14).

கர்த்தருடைய ஜெபம் குடும்ப ஜெபமென்றும் அழைக்கப்படும். எங்களது அனுதின தியானத்தில் என் மனைவியும் நானும் இந்த ஜெபத்தைச் சொல்லுகிறோம். ''பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே'' என்று நாளைத் துவக்குவது தினமும் புதிய தைரியத்தால் எங்களை நிரப்புகிறது!

## ௪. ஜெபத்தில் மனச்சிதறலைத் தவிர்ப்பது எப்பது?

தேவனது அனைத்துப் போராயுதங்களையும் பயன்படுத்துவதற் கான அடிப்படை வல்லமை ஜெபத்திலேயே உள்ளது (எபே 6:13-18). எனவே நமது முழங்கால்களை முடமாக்கவும், சிந்தையைச் சிதற டிக்கவும் சத்துரு தன்னாலான அத்தனையையும் செய்வான். அவனது மனத் தாக்குதல்களை இவ்விதம் மேற்கொள்ளலாம்—

''எப்பொழுதும் ... இடைவிடாமல்'' ஜெப ஆவியைக் காத்துக் கொள்வதோடு மிகுந்த புத்துணர்வோடிருக்கும் வேளையை ஜெபத் திற்காகத் தெரிந்துகொள்ளுங்கள். மனம், ஆவி, ஆத்துமா, அத்தனை யும் ஜெபத்தில் ஈடுபடுகின்றன. பிதாவோடு தனித்திருக்க இயேசு அடிக்கடி அதிகாலை வேளையைத் தெரிந்துகொண்டார் (மாற் 1:35). சூரியன் உதிக்குமுன் பல மணி நேரங்களை ஹட்சன் டெய்லர் (1832-1905) தனித் தியானத்தில் செலவிடுவாராம். உடலும் மனதும் களைத்திருக்கையில் ஜெபம் அவ்வளவு சுலபமல்ல.

ஜெபமென்றால் கிருபாசனத்திற்குச் செல்லுவதாம். கிறிஸ்துவின் இரத்தத்தினாலேயே அங்கு சேரும் சிலாக்கியம் நமக்குக் கிடைத்தது. அந்த இரத்தத்தின் அதிகாரத்தையும் வல்லமையையும் குறித்த தெளி வான நினைவு சத்துருவின் சதிகளைச் சங்கரிக்கும். இரத்தத்தின் ஆசீர்வாதங்களை வாயினால் அறிக்கையிடுகையில் அவன் நடுங்கு வான் (எபி 4:14-16; வெளி 12:11).

நமது ஜெபங்கள் துதியில் பொதிந்திருக்க வேண்டும். தேவன் துதிகளின் நடுவில் வாசம்பண்ணுகிறார் (சங் 22:3). இவ்விதம் தேவப் பிரசன்னத்தை அதிகமதிகமாய் உணரும்போது, ஜெப ஆவியில் திளைத்துவிடுவதால், மனச்சிதறல் மேற்கொள்ளப்படும் (பிலி 4:6). மனத்தாக்குதலின்போது நான் நவநாவுகளில் ஜெபிக்கத் துவங்கி விடுகிறேன். மன வரம்பைத் தாண்டிச் செல்லும் இவ்வனுபவம் பயனுள்ளதாயிருக்கிறது (1 கொரி 14:14).

ஜெபத்தில் குறி இல்லாதிருக்கும்போதும் மனம் சிதறும். தெளிவான குறிப்புகள் வைத்து ஜெபியுங்கள். ஒரு பட்டியல் வைத்துக் கொண்டு ஒவ்வொரு குறிப்புக்காய் ஜெபிப்பது நல்ல முறை.

ஜெபத்தில் கண்களை மூட வேதத்தில் எங்கும் கட்டளையில்லை! பக்தன் ஆஸ்வால்டு ஸ்மித் (1889-1986) தனது ஜெப அறையில் அங்குமிங்கும் நடந்துகொண்டு சத்தமாக ஜெபிப்பாராம். சத்தங்களும், சந்தடிகளும் இல்லாத ஓரிடத்தை ஜெபத்திற்காய்த் தெரிந்து கொள்ளவேண்டும். கதவைப் பூட்டி ஜெபிக்க இயேசு கற்பித்தார்! (மத் 6:6).

ஜெபம் ஓர் உரையாடல். திறந்த வேதத்தோடு ஜெபிப்பதைப் பயனுள்ளதாய்க் கண்டிருக்கிறேன். வாசித்து, ஜெபித்து... வாசித்து, ஜெபித்து... (தானி 9:1-3).

இத்தத்துவங்களையெல்லாம் பயிற்சித்தும் இன்னும் மனச்சிதறல் இருக்கலாம். ஆம், இது மாம்சத்தோடும் இரத்தத்தோடுமல்ல, சத்துருவின் ஆவிகளோடுள்ள போராட்டமல்லவா? சிந்தையைச் சிதறடிக்க வரும் எண்ணத்தை உடனே சிறைப்பிடியுங்கள். அதைச் சிந்திக்க நேரம் தரவேண்டாம். சத்துருவுக்கு எதிர்த்து நில்லுங்கள், ஓடிப் போவான். ''கிறிஸ்துவின் நாமத்தில்'' என்பது ஜெபத்தின் துவக்கத்திற்கும், முடிவிற்குமான வெறும் சொற்றொடர் அல்ல; அதுதான் ஜெபத்திற்கு அடித்தளமும் அதிகாரமுமாகும். இதை ஜெபநேர முழுவதிலும் மறக்க வேண்டாம்.

பிதாவின் வலது பக்கத்தில் நமக்காய் ஜெபிக்க இயேசுவானவரும், நமக்காய் மன்றாட நமக்குள்ளேயே ஆவியானவரும் இருக்கையில் வெற்றி நமக்குத்தான் (ரோ 8:26). நாம் விடாது உறுதியாயிருக்க வேண்டும்; மீதியை தேவன் பார்த்துக்கொள்வார்.



## 5. யாரை நோக்கி ஜெபிக்கவேண்டும்?

பரலோகிலிருக்கும் பிதாவானவரை நோக்கி ஜெபிக்கவேண்டும். அப்படித்தான் இயேசு போதித்தார்: ''உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு.'' ''நீங்கள் ஜெபம்பண்ணவேண்டிய விதமாவது: பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே!'' (மத் 6:6-9).

இயேசு இவ்வுலகிலிருந்த நாட்களில் சீடர்கள் எது வேண்டுமானாலும் அவரிடமே கேட்டுப் பெற்றுக்கொண்டனர். ஆனால் பெந்தெகொஸ்தேயில் துவங்கவிருந்த புதிய யுகத்தை இயேசு சுட்டிக்காட்டி, ''அந்த நாளிலே நீங்கள் என்னிடம் ஒன்றும் கேட்கமாட்டீர்கள்... என் நாமத்தினாலே பிதாவிடம் கேட்டுக்கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார். இதுவரை நீங்கள் என் நாமத்தினால் ஒன்றும் கேட்கவில்லை'' என்றார் (யோ 16:23,24).

ஆவியினால் நமக்கு ஞானஸ்நானம் கொடுப்பவர் இயேசுவே என்றாலும் ''பிதாவிடமே'' இந்த வரத்தைக் கேட்க வேண்டுமென்று இயேசு போதித்தாரல்லவா? (லூக் 11:13).

பிதாவை ''நோக்கி'' ஆதிக்கிறிஸ்தவர் ஜெபித்தனர் (அப் 4:24-30). ''ஒரே ஆவியினாலே பிதாவிடம் சேரும் சிலாக்கியத்தை அவர் (இயேசு) மூலம் பெற்றிருக்கிறோம்'' என்பது அப்போஸ்தலரின் தெளிவான உபதேசம் (எபே 2:18). ''இயேசு கிறிஸ்துவின் பிதாவை நோக்கி முழங்கால்படியிடுகிறேன்'' என்று பவுல் தனது ஜெப அனுபவத்தைக் குறிப்பிட்டான் (எபே 3:15).

சர்வ வல்ல தேவன் நமது பரம தந்தை. கிறிஸ்து இயேசு நமது மூத்த சகோதரன். பரிசுத்த ஆவியானவர் நம்மைத் தேற்றி உதவுபவர். (எபி 2:10-12; யோ 16:17). பிதாவை ''நோக்கி'' குமாரன் ''மூலம்'' ஆவியானவரின் ''உதவியோடு'' ஜெபிக்கிறோம். திரித்துவ தேவனை அருமையாய் அறிந்து அனுபவிப்பது ஜெபத்தில்தான்.

நமது ஜெபங்களைப் பரலோகிலிருக்கும் பிதாவானவருக்கு அனுப்பி வைக்கிறோம். அவரது வலது பக்கத்தில் அமர்ந்திருக்கும்

குமாரனானவர் நமது ஜெபங்களுக்குச் சிபார்சு செய்கிறார். இங்கு பூவுலகில் நமக்குள்ளிருக்கும் ஆவியானவர் ஜெபிக்க நமக்கு உதவுகிறார் (எபி 7:25; ரோ 8:26,34). என்னே சித்திரம்! என்னே சிலாக்கியம்!

அப்படியானால் நாம் இயேசுவிடம் ஜெபிக்கவே கூடாதா? இல்லை. அவரை நோக்கிய ஜெபங்கள் வேதத்தில் உண்டு (அப் 7:59; வெளி 22:20). அவர் தேவனல்லவா? ஆனால், பிதாவை ''நோக்கி'' இயேசுவின் ''மூலம்'' ஜெபிக்கவேண்டுமென்பதே வேதத்தின் தெளிவான ''போதனை'' ஆகும். பிரியமாயிருக்கும் நெடுங்காலப் பழக்கங்களையும் நாம் முழுக்க முழுக்க வசன மார்க்கத்தாராகும்படிக் களைந்துவிடத் தயங்கக்கூடாது.

இயேசுவைத் துதிக்கலாமா? நன்றாய்த் துதிக்கலாம்; துதிக்கவேண்டும். ஆனாலும் முடிவான ஆராதனை பிதாவுக்குத்தான். யோ 4:23; எபே 3:20,21; 5:20; பிலி 2:11; கொலோ 1:5,13 ஆகிய வசனங்களை வாசித்துப்பாருங்கள். இதோ, இறுதிக் காட்சி: ''சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது, தேவனே சகலத்திலும் சகலமுமாயிருப்பதற்கு, குமாரன் தாமும் தமக்குச் சகலத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்'' (1 கொரி 15:28).

## 6. முழங்கால்படியிடுதல் கட்டாயமா?

நாம் ஜெபிக்கும்போது நமது உடற்பாவனைகளைவிட உள்ளங்களையே தேவன் கவனிக்கிறார் (மத் 15:7-9). ஆனாலும், பழைய புதிய ஏற்பாடுகள் இரண்டிலும் உள்ளுணர்வுகளின் வெளிப்பாடுகளாக உடற்பாவனைகள் இருப்பதாகக் காண்கிறோம். ஜெபத்தில் முழங்காலிடுவது பயபக்தியையும் அடிபணிதலையும் குறிப்பிடுவதால் அதுவே மிகவும் பொதுவானதாகும்.

அரசன் சாலொமோன் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஆலயப் பிரதிஷ்டை ஜெபத்தை முழங்காலில் செய்தான். அவன் அவ்வளவு பெரிய அரசனாயிருந்தும் சபையார்முன் முழங்காற்படியிடத் தயங்க



வில்லை (1 இரா 8:54; 2 நாளா 6:13). எஸ்றா முழங்காலில் நின்று தேவ மக்களின் பாவங்களை அறிக்கையிட்டான் (எஸ்றா 9:5; 10:1). பாபிலோனில் மிகவுயர்ந்த அதிகாரியாயிருந்தபோதிலும் தானியேல் தனது சிறுவயதுப் பழக்கமாகிய முழங்கால் ஜெபத்தைக் கைவிடவில்லை. நாளொன்றுக்கு மூன்றுமுறை முழங்காலில் ஜெபித்தான் (தானி 6:10).

நமது ஆண்டவர் இயேசுவிற்கும் முழங்காலில் ஜெபிக்கும் பழக்கமிருந்தது. கெத்செமனே தோட்டத்தில் வியாகுலப்பட்டுக்கொண்டிருந்த வேளையிலும் முழங்காற்படியிட்டு ஜெபித்தார் (லூக் 22:41). சீடர்கள் உட்கார்ந்து தூங்கினர்! நேர்முழங்காலில் தூங்கிவிழுவது கடினம்! ஆலயங்களில் முழங்காலிட மெத்தைகள் கண்டுபிடித்தது அர்த்தமற்றது. இயேசுவிடம் உதவிக்கும் சுகம்பெறவும் வந்தோர் அவர் முன் முழங்காற்படியிட்டனர் (மத் 17:14; மாற் 1:40). ஸ்தேவான் முழங்காலில் ஜெபித்தவாறே மரித்தான் (அப் 7:60). தொற்காளை உயிரோடெழுப்பப் பேதுரு முழங்காலில் ஜெபித்தான் (அப் 9:40). பவுலுக்கும் முழங்காலில் ஜெபிப்பது அதிக விருப்பம். கடற்கரையிலும் முழங்காலிட்டு ஜெபித்தான் (அப் 20:36; 21:5). ''நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் பிதாவை நோக்கி முழங்காற்படியிடுகிறேன்'' என்று அவன் எபேசு சபைக்கு எழுதினான் (எபே 3:15).

முழங்கால் யாவும் நமது கர்த்தருக்குமுன் முடங்குமென்று அதிக உறுதியான தீர்க்கதரிசனம் நமக்குண்டு (ரோ 14:11; பிலி 2:10). இப்பகுதிக்கும் ஆன்மீக அர்த்தந்தான் உண்டெனச் சொல்லிவிடக்கூடாது. ''முழங்கால் யாவும் முடங்கும்'' என்பதற்கு ஆன்மீகக் கருத்துதான் உண்டெனச் சொல்லிவிட்டால் ''நாவுகள் யாவும் அறிக்கை பண்ணும்'' என்பதை எப்படி விளக்குவோமோ? முழங்காலிடுவது வெறுமனே கலாச்சாரத்தை அடுத்தது எனத் தள்ளிவிடவேண்டாம்.

தொழுகையில் எங்கும் ஏற்பட்டுள்ள எழுச்சியில் பாடல் நடத்துவோர் அடிக்கடி மக்களைக் கரங்கள் உயர்த்தித் துதிக்கும்படி ஊக்குவிக்கின்றனர். இது நன்று; திருவசனத்தின்படியானது. ஆனால் மிகப் பிரபலமான தொழுகைச் சங்கீதம், ''கர்த்தருக்கு முன்பாக நாம் பணிந்து குனிந்து முழங்காற்படியிடக் கடவோம்'' என்று அழைப்பதை மறந்துவிடக்கூடாது (சங் 95:6). துதியும் ஆராதனையும் நிறைந்துள்ள

பல கூடுகைகளில் இன்று அபூர்வமாகிவரும் பயபக்தியை முழங் காற்படியிடுதல் திரும்பக் கொண்டுவரும். ''பயத்துடனே கர்த்தரைச் சேவியுங்கள்; நடுக்கத்துடனே களிகூருங்கள்'' (சங் 2:11).

முழங்கால்களைத் திரும்ப மடக்குவோம்!

## 7. அமைதியாய் ஆராதிக்க முடியாதோ?

சத்தமாய் ஆராதிப்போரைப் பார்க்கும்போதெல்லாம் உயர் ஆங்கிலிக்கன் பாரம்பரியத்தில் வளர்க்கப்பட்ட எனது மனதில் இதே கேள்விதான் எழுந்தது. ஆனால் ஆவியின் அபிஷேகமும் ஆராதனை குறித்த வேதப் பகுதிகளின் ஆராய்ச்சியும் சத்தத்தை உயர்த்தி தேவனைத் துதிப்பது சரிதான் என்று எனக்குப் புரியவைத்துள்ளன.

''பலத்த காற்றில் கர்த்தர் இருக்கவில்லை... பூமியதிர்ச்சியிலும் கர்த்தர் இருக்கவில்லை... அக்கினியிலும் கர்த்தர் இருக்கவில்லை. அக்கினிக்குப்பின் மெல்லிய சத்தம் உண்டாயிற்று'' (1 இரா 19:11-13). உரத்த சத்தத்திற்கு எதிராகப் பொதுவாய்க் காட்டப்படும் வசனம் இதுவே. அப்படியானால், பெந்தெகொஸ்தேயன்று பலத்த காற் றோடும் அக்கினிமய நாவுகளோடும் ஆவியானவர் இறங்கினாரே அதற்கு விளக்கமென்ன? (அப் 2:2,3). அதற்குச் சில நாட்களுக்குப் பின் சீடர் ஜெபித்துக்கொண்டிருந்த இடமே அசைந்ததே! (அப் 4:31).

''அமர்ந்திருந்து நானே தேவனென்று அறிந்துகொள்ளுங்கள்'' என்று 46ஆம் சங்கீதம் சொல்லுகிறது (வச 10). ஆனால் தேவனுக்கு முன் ''கெம்பீர சத்தமாய் ஆர்ப்பரியுங்கள்'' என்று அடுத்த சங்கீதமே சொல்லுகிறது (47:1). ஆம், அமைதியாயிருக்க ஒரு காலமுண்டு; ஆர்ப்பரிக்க ஒரு காலமுண்டு! (பிர 3:7ஆ).

ஆர்ப்பரித்து ஆராதிப்பதைப் பிரமாணங்களும் சடங்குகளும் நிறைந் துள்ள சபைகளால் சகித்துக்கொள்ளமுடியாது. குருத்தோலை ஞாயி றன்று திரள் கூட்டமான சீடரெல்லாரும் ஆனந்தமாய் மிகுந்த சத்தத் தோடு தேவனைப் புகழ்ந்தபோது பரிசேயரில் சிலர் இயேசுவிடம்



சீடரை அதட்டச் சொன்னார்கள். ஆஹா, இயேசு அழகாய்ப் பதில் தந்தார்! இவர்கள் ''பேசாமலிருந்தால் கல்லுகளே கூப்பிடும்!'' என் றார் (லூக் 19:37-40). அமைதி எனப்படும் அபூர்வமான இடத்திலி ருந்து வந்தவராச்சுதே அவர்! (வெளி 8:1).

சங்கீதப் புத்தகம்தான் இஸ்ரவேலரின் கீதப்புத்தகமாகும். கம்பீர மாய்ப் பாடி தேவனை ஆர்ப்பரிக்க அது திரும்பத் திரும்ப மக்களை அழைக்கிறது (சங் 66:1; 81:1). ''கம்பீர சத்தத்தை அறியும் மக்கள் பாக்கியமுள்ளவர்கள்'' என்று அது குறிப்பிடுகிறது (சங் 89:15). இவ் விதமாய் ஆராதிப்பதெல்லாம் பழைய உடன்படிக்கையின் காலத் துக்குத்தான் உரியதென தள்ளிவிடாதிருப்போம். புதிய உடன்படிக் கையின் துவக்கமே ஆனந்த துதியொலிதான் தெரியுமா? பெந்தெ கொஸ்தேயன்று எவ்வளவு சத்தம்! (அப் 2:1-6).

சாலொமோன் முடிசூட்டப்பட்டபோது பூமி அவர்கள் சத்தத்தினால் அதிரத்தக்கதாக மக்கள் மகா பூரிப்பாய் ஆர்ப்பரித்தார்கள் (1 இரா 1:39,40). நாம் ஆராதிக்கும்போது சாலொமோனிலும் பெரியவரை யல்லவோ முடிசூட்டுகிறோம்?

அமைதி, ஆர்ப்பரிப்பு இவை இரண்டுமே நமது உணர்வுகளின் வெளிப்பாடுகளாகும். இரண்டிற்கும் அதினதின் இடமுண்டு. பொது வாகவே தயங்காமல் வாய்திறந்து பேசுகிறவர்களுக்குச் சத்தத்தை உயர்த்தித் துதிப்பது இலகுவான காரியம். அடுத்த வகையினருக்கோ அப்படிச் செய்வது கடினம். ஆனால் ஆவியினால் நிரப்பப்பட்டபோது துதிப்பதில் ஒரு விடுதலை அடைந்துள்ளதாக இரண்டாம் வகை யினரில் பலர் சாட்சியிட்டுள்ளனர். ஒருவரையொருவர் கண்டனம் பண்ணாமல் உற்சாகப்படுத்தவேண்டும்.

பெந்தெகொஸ்தேயினரும் பெந்தெகொஸ்தேயினரல்லாதோரும் கூடுமானவரை சேர்ந்து ஆராதிக்கவேண்டும். அது பெந்தெகொஸ்தே யினருக்குச் சமதளத்தில் நிற்கக் கால்களையும், பெந்தெகொஸ்தே யினரல்லாதோருக்கு வானத்தில் பறக்கச் செட்டைகளையும் கொடுக் கும்! இருவிதமாகவும் ஆராதிக்கக் கற்றுக்கொள்வது முதிர்ச்சியாகும். மட்டுமல்ல, மலட்டுக் கூச்சலுக்கும் மயான அமைதிக்கும் தப்ப முடியும்!

## 8. தண்ணீர் ஞானஸ்நானம் கட்டாயமா?

ஆம், வேதம் அப்படித்தான் போதிக்கிறது. ஞானஸ்நானம் அல்லது திருமுழுக்கு என்பது ஒரு மனிதனோ சபையோ கண்டுபிடித்ததல்ல. பிதாவாகிய தேவனே அதை நியமித்தார் (யோ 1:33). குமாரனாகிய தேவன் அதைக் கட்டளையாகத் தந்தார் (மத் 28:19). ஆவியான வராகிய தேவனால் ஏவப்பட்டு அப்போஸ்தலர் அதைப் போதித்தனர் (அப் 2:38). ஆதிச்சபை தவறாது அதை நிறைவேற்றிற்று (அப் 2:41; 8:12; 9:18; 10:47). ஞானஸ்நானம் பெறத் தேவையில்லாத ஒரு வருண்டானால் அது இயேசுதான். யோவான்கூட அவரைத் தடுத் தான். ஆனால் அது ''எல்லா நீதியையும் நிறைவேற்ற'' என்றார் இயேசு (மத் 3:15). தண்ணீரிலிருந்து அவர் வெளிவந்தபோது அவரில் பிரியமாயிருக்கிறேன் என்று பிதாவானவர் சாட்சியிட்டார் (லூக் 3:22). எனவே ஞானஸ்நானமானது ஓர் கீழ்ப்படிதல் என்பது தெளிவு.

ஆன்மீக அனுபவம் எதுவும் ஞானஸ்நானத்திற்குப் பதிலாகாது. கொர்நேலியுவின் ஜெபம் ஏற்கனவே கேட்கப்பட்டிருந்தது; அவனது தருமங்கள் அங்கீகரிக்கப்பட்டிருந்தன; அவன் ஆவியில் நிறைந்து அன்னிய பாஷையிலும் பேசினான். அவனும் ஞானஸ்நானம் பெற வேண்டுமென்று பேதுரு கட்டளையிட்டான் (அப் 10:1,2,45,46,48).

ஞானஸ்நானமானது உள்ளான அனுபவத்தின் வெளிப்படையான அறிக்கையாகும். அது கிறிஸ்துவின் மரணம், அடக்கம், உயிர்த்தெழு தலோடு நாம் இணைவதற்கானதோர் சாட்சியாகும் (ரோ 6:3-6). அதை வெறும் சடங்கு என்று எண்ணிவிடக்கூடாது. அது தேவனைப் பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாம் (1 பேது 3:21).

கிறிஸ்துவைச் சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்ட ''உடனே'' ஞானஸ்நானம் பெற வேண்டும். பெந்தெகொஸ்தேயன்று கிறிஸ் துவை ஏற்றுக்கொண்ட 3000 யூதரும் அன்றே திருமுழுக்கு பெற்ற னர் (அப் 2:41). பிலிப்பி நகர் சிறைச்சாலைக்காரனும் கிறிஸ்துவை விசுவாசித்த அன்றிரவே ஞானஸ்நானம் பெற்றான் (அப் 16:33). கீழ்ப்படியப் பிந்துவது கீழ்ப்படிய மறுப்பதற்குச் சமமாகும்.



மனந்திரும்புவதற்கு முன்னர் பெற்ற எந்த ஞானஸ்நானமும் செல் லாது. மரிக்குமுன் அடக்கமெங்கே? பெயர்க் கிறிஸ்தவரென்றாலும் கிறிஸ்தவரல்லாதவரென்றாலும் ''ஒரே பிதாவிடம்'' மனந்திரும்பி ''ஒரே கர்த்தரை'' ஏற்றுக்கொண்ட பின்னர், அந்த ''ஒரே விசுவாசத் திற்குச்'' சாட்சியாகப் பெறும் திருமுழுக்கைத்தான் வேதம் ''ஒரே ஞானஸ்நானம்'' என்றழைக்கிறது (எபே 4:5).

## 9. திருமுழுக்கின்போது பெயர் மாற்றம் அவசியமா?

கிறிஸ்தவமற்ற பின்னணிகளிலிருந்து மக்கள் மனந்திரும்பி ஞானஸ்நானம் பெறும்பொழுது அவர்களுடைய பெயர்களை மாற்ற வேண்டுமா என்ற கேள்வி எழுகிறது. இந்தியாவில், குறிப்பாக இந்துக் கள் நடுவில், பல பெயர்கள் தேவர்கள், தேவதைகளுக்கடுத்தவை. எனவே நற்செய்தி ஊழியர் சிலர் ஞானஸ்நானத்தின்போது பெயர் மாற்றம் அவசியம் என வலியுறுத்துகின்றனர். இது சரியா?

வேதத்திலுள்ள பல பெயர்கள் குணநலன்களைக் குறிப்பிடுபவை (1 சாமு 25:25; அப் 4:36). பிறந்த வேளையில் நடந்த ஒரு சம்பவத் தைக் குறிப்பிட்டும் பெயர்கள் தரப்பட்டன (ஆதி 29:32-35); சில வேளைகளில் ஓர் எதிர்பார்ப்பையோ தீர்க்கதரிசனத்தையோ பெயர்கள் சுட்டிக்காட்டின (ஏசா 8:1-4; ஓசி 1:4). கோத்திரப் பிதாக்களின் காலத் தில் குணங்கள், செயல்கள் அல்லது எதிர்காலத்தைக் குறிப்பவை யாய்ப் பெயர்கள் விளங்கின. நாளாவட்டத்தில் குறிப்பிட்டதொரு காரணமின்றி, வெறுமனே ஒரு நம்பிக்கையுடன், பெயர்கள் வைக்கப் படலாயின. பின்வருங்காலங்களில் பெயருக்கும் அந்நபரின் குணத் திற்கும் சம்மந்தமே இல்லாத நிலையும் தோன்றியது. (தகவல்: *The New International Dictionary of the Bible.)*

இந்தியக் கிறிஸ்தவராகிய நாம் இந்தியப் பெயர்களெல்லாம் இந்துப் பெயர்களென்றும் மேலைநாட்டுப் பெயர்களெல்லாம் கிறிஸ் தவப் பெயர்களென்றும் அடிக்கடி நினைக்கிறோம். மேலைநாட்டுப் பெயர்கள் இந்தியப் பெயர்களைவிட மேலானவை என்பது நமது

கருத்து. ''Miss Green'' அல்லது ''Mr. Black'' என்ற ஆங்கிலப் பெயர்கள் அவற்றின் தமிழாக்கமாகிய ''பச்சையம்மாள்'' அல்லது ''கருப்பையா'' என்பவற்றைவிட உயர்ந்தவையாக நமக்குத் தெரிகின்றன. ''முருகன்'' என்ற இந்து தெய்வத்தின் பெயரின் பொருள் ''அழகு'' என்பதாகும். இந்தப் பெயரை நாம் ஏற்றுக்கொள்ளமாட்டோம்; ஆனால் நமது மகனுக்கு ''அப்பொல்லோ'' என்றும் மகளுக்கு ''டயானா'' என்றும் பெயரிடத் தயங்கமாட்டோம். இவையிரண்டும் கிரேக்க தெய்வங்களின் பெயர்கள் என்றறியோம்! (அப் 19:27,28). ''அப்பொல்லோ'' என்றால் ''அழிக்கிறவன்'' என்று பொருள்; அது இசையின் இளம் தேவர்கள் ஒருவரின் பெயர். அப்போஸ்தலன் ஒருவனுக்கு இப்பெயர் இருந்தது; அவன் அதை மாற்றவில்லை! (அப் 19:1; 1 கொரி 1:12).

பெயர் மாற்றத்தை வலியுறுத்துவோர் அந்நிய தேவர்களின் பெயர்களை ''உச்சரிக்கவே'' கூடாது என்று கூறும் யாத்திராகமம் 23:13, யோசுவா 23:7 ஆகிய வசனங்களை மேற்கோள் காட்டுவார்கள். விக்கிரகாராதனைக்கு முற்றிலும் விலகியிருக்கவேண்டுமென்பதே இவ்வசனங்களின் போதனையாகும். எழுத்தின்படி இவ்வசனங்களுக்கு அர்த்தம் கொடுத்துவிட்டால் அஸ்தரோத், பாகால் போன்ற பெயர்கள் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டிருக்கும் சில வேதப் பகுதிகளை நாம் எப்படித்தான் வாசிக்கமுடியும்? மட்டுமல்ல, இவ்விதப் பெயர்களுள்ள நபர்களை எப்படிக் கூப்பிடமுடியும்? இந்தியக் குடியரசுத் தலைவர், பிரதமர் ஆகியோரின் பெயர்களைக்கூட உச்சரிக்க முடியாதே! அந்த மூன்று எபிரெய இளைஞருக்குப் பாபிலோனில் கொடுக்கப்பட்ட அஞ்ஞானப் பெயர்களை வேதம் தயங்காமல் பயன்படுத்துகிறது (தானி 1:7; 3:26-28). முதல் புறவின விசுவாசியாகிய கொர்நேலியுவின் பெயரையோ, முதல் ஐரோப்பிய விசுவாசியாகிய லீதியாளின் பெயரையோ அப்போஸ்தலர் மாற்றவில்லை.

சவுல் பவுலாக மாறிவிட்டான் என்று நாம் பொதுவாகச் சொல்லுவதுண்டு. இது சரியல்ல. அவனது பெற்றோர் ஏற்கனவே இவ்விரு பெயர்களையும் அவனுக்குக் கொடுத்திருந்தனர். ''சவுல்'' என்பது யூதப் பின்னணியில் ஒரு பொதுவான எபிரெயப் பெயர். அதின் பொருள் ''தேவனிடம் கேட்கப்பட்டது'' என்பதாகும். ''பவுல்'' என்பது



கிரேக்கப் பின்னணியிலுள்ள ரோமானியப் பெயராகும். அதின் பொருள் ''சிறியது'' என்பதாகும். ரோமக் குடிமகன் ஒருவனுக்கு பொதுவாக மூன்று பெயர்கள் இருந்தன (அப் 22:27,28). ஞானஸ்நானம், அபிஷேகம், ஊழிய அழைப்பிற்குப் பின்னரும் அப்போஸ்தலன் சவுல் என்றே அழைக்கப்பட்டான் (அப் 9:22,26; 13:1). ஆனால் அப்போஸ்தலர் 13:9இலிருந்து, ஒருவேளை அவன் புறவினத்தார் நடுவில் தீவிரமாய் ஊழியம் செய்ய இறங்கியதால், அவன் பவுல் என்று அழைக்கப்பட்டான். இது ஒரு பெயர் மாற்றமல்ல.

நாடார், பிள்ளை, முதலியார், ஆச்சாரி போன்ற இனப் பெயர்களை விட்டுவிடுவது நன்று. மற்றபடி பெயர்களை மாற்றுவது சமுதாயத்திலும் அரசு பதிவேடுகளிலும், குறிப்பாக கிராமப்புற மற்றும் ஆதிவாசிப் பகுதிகளில், தேவையில்லாத பிரச்னைகளைக் கிளப்புகின்றது. தங்கள் பிள்ளைகள் கிறிஸ்துவை விசுவாசித்து, அதனால் பெயர்களை மாற்றிவிடும்பொழுது, அவர்களது கிறிஸ்தவரல்லாத பெற்றோர் தாங்கள் அவ்வளவு பிரியமாய்க் கொடுத்திருந்த பெயர்களைப் பிள்ளைகள் தூக்கி எறிந்து தங்களை அவமரியாதைப்படுத்திவிட்டார்களே எனக் கருதுகின்றனர். இது தேவையில்லாத பிரிவினைக்கும், நற்செய்திப்பணி எதிர்ப்பிற்கும் வழிவகுக்கும். சுவிசேஷம் தொடர்ந்து முன் செல்வது தடைபடலாம்.

மனந்திரும்பும் நபர்களே பெயர் மாற்றத்தை வற்புறுத்திக் கேட்டால் நாம் ஒத்துக்கொள்ளலாம். இங்குங்கூட அந்தந்த பிராந்திய மொழி மற்றும் கலாச்சாரத்தை அடுத்த பெயர்களையே அவர்கள் தெரிந்து கொள்ள நாம் உதவவேண்டும். எபிரெய மொழிப் பெயர்களையும், கிரேக்க மொழிப் பெயர்களையும் தேடி வைக்கவேண்டிய அவசியமில்லை. புதிய உடன்படிக்கையின்கீழ் நமக்கு வாக்களிக்கப்பட்டிருப்பதெல்லாம் புதிய ''இருதயமும்'' புதிய ''ஆவியும்'' மட்டுமே (எரே 31:31-34; எசேக் 36:25-28). ஆனால் நாம் காத்திருந்தால் புதிய எருசலேமில் நம் எல்லாருக்கும் ஒரு புதிய ''பெயர்'' கொடுக்கப்படும் (வெளி 3:12).

# 10. அவிசுவாசிகளிடமிருந்து பிரிந்து வாழ்தல் என்றால் என்ன?

பிரிந்து வாழ்தல் என்பது திருமறையின் துவக்கமுதல் முடிவுவரை இழைபோல் ஓடும் ஓர் அடித்தளக் கிறிஸ்தவ உபதேசமாகும். கடவுள் ஒளியைப் படைத்ததோடல்லாமல் அதை இருளிலிருந்து ''பிரித்தார்'' (ஆதி 1:4). ''துன்மார்க்கர்... பாவிகள்... பரியாசக்காரர்'' ஆகியோரிட மிருந்து பிரிந்து வாழவேண்டிய அவசியத்தை வேதத்தின் மிக நீண்ட புத்தகத்தின் முதல் அத்தியாயமே கூறுகிறது (சங் 1:1). ''நெறிகெட்ட இத்தலைமுறையிலிருந்து உங்களைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள்'' என்று திருச்சபை பிறந்தநாளின் துவக்க செய்தி அதைக் கேட்டோ ரைக் கூவியழைத்தது (அப் 2:40). வேதத்தின் கடைசிப் புத்தகம் விண்ணக நகருக்கு உள்ளிருப்போரையும் வெளியிருப்போரையும் பிரித்துக்காட்டுகிறது (வெளி 22:14,15). எனவே பிரிந்து வாழ்தலின் உபதேசம் இருக்கிறதாவென்று வாக்குவாதமே கிடையாது. பிரச்னை யெல்லாம் அதை நடைமுறைப்படுத்துவதில்தான். மற்ற காரியங் களைப் போலவே, இதிலும் கிறிஸ்தவர்கள் ஓரங்களுக்குச் சென்று இளைய சமுதாயத்தைக் குழப்புகின்றனர். தேவ பக்தியற்றோரோடு நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டுமென்று வேதம் போதிக்கிறது?

படைப்பின்படி, எல்லா மனிதரும், நல்லவரோ தீயவரோ, கடவு ளுக்குச் சொந்தமானவர்கள். அவர் அவர்களெல்லாரையும் சமமாய் நேசித்து எந்தப் பாரபட்சமுமின்றி அவர்களுக்குச் சூரியவொளியை யும் மழையையும் அருளிச்செய்கிறார் (மத் 5:45). கடவுளுடைய சந்ததியார் அல்லது பிள்ளைகளாக மனுக்குலம் அனைத்தும் ''அவருக் குள் பிழைக்கிறது, அசைகிறது, இருக்கிறது'' (அப் 17:27,28). இச் சத்தியத்தைப் புரிந்துகொள்ளாமல் இயேசுவின் நாட்களிலிருந்த மத வாதிகள் மற்றவர்களை விட்டு ஒதுங்கி வாழ்ந்துகொண்டிருந்தனர். ஆனால் அவர் பக்தியற்றோர் மற்றும் பாவிகளோடு தாராளமாய்ப் பழ கியபோது அவருக்குப் ''பாவிகளின் நண்பன்'' என்று பட்டப்பெயர் சூட்டினர் (லூக் 7:34). ''பாவிகளோடு'' அவர்களது விருந்துகளிலும் கொண்டாட்டங்களிலும் கலந்துகொள்வதில் அவருக்குப் பிரச்னை யேயில்லை (மத் 9:10-12). நாமும்கூட மக்களோடு சுமூகமான சமூக



உறவு வைத்துக்கொள்ளவேண்டும். உண்மையான ஆன்மீகமென்பது சமூக மனப்பான்மைக்கு எதிரானதல்ல. உலகத்தின் ஊழல் நிறைந்த தும் பொல்லாததுமான வழிகளைமட்டும் கற்றுக்கொள்ளாதிருக்கக் கவனமாயிருக்கவோண்டும்.

மறுபடி பிறந்த வாலிபர், நங்கையர் தங்களது பெற்றோர் இன்னும் மனந்திரும்பாதவர்களாயிருந்தாலும் அவர்களை அலட்சியம் பண் ணக்கூடாது. அப்படியே, மணமான எவரும் அவிசுவாசியான வாழ்க் கைத் துணையோடு மணவாழ்வுக்கடுத்த உறவுகொள்வதில் எவ்விதத் தயக்கமும் கொள்ளக்கூடாது (1 பேது 3:1,2). நெறிக்கடுத்த தத்துவம் எதுவும் மீறப்படாதிருக்குமட்டும் கிறிஸ்தவர்கள் இதயபூர்வமாகத் தங்கள் உடன் பணியாட்களோடு ஒத்துழைக்கவேண்டும். பக்தியும் நேர்மையுமற்ற அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிவதும் மனப்பூர்வமாயிருக்க வேண்டும் (1 பேது 2:18). ஆனால் அவிசுவாசி ஒருவருடன் தொழில் செய்யப் பங்காளித்துவம் கொள்ளுமுன் நன்கு சிந்திக்கவேண்டும். ஆயினும், கிறிஸ்தவர்களைவிடக் கிறிஸ்தவரல்லாதோர் தொழிலிலும் வியாபாரத்திலும் நாம் நினைப்பதைவிட கூடுதல் கெட்டிக்காரராகவே இருக்கின்றனர். ''ஒளியின் மக்களைவிட இவ்வுலகின் மக்கள் தங்கள் தலைமுறையில் அதிகப் புத்திமான்களாயிருக்கிறார்கள்'' என்று இயேசு தாமே ஒத்துக்கொண்டார் (லூக் 16:8ஆ). எனவே சீர்கேடான செயல் முறைகள், ஊழல்கள், வரி ஏய்ப்பு போன்ற எதுவும் இல்லாதவரைக் கும் அவிசுவாசிகளைத் தொழில் மற்றும் வியாபாரத்தின் பங்காளி களாய் வைத்துக்கொள்வதில் தவறேதுமில்லை.

வாலிபர் நடுவில், அதிலும் குறிப்பாய்க் கல்லூரி வளாகங்களில், ஊழியம் செய்யும் சிலர் பிரிந்திருத்தல் எனும் பேரில் ஒதுங்கியிருத் தலை இளம் விசுவாசிகளுக்குப் போதித்துவிடுகின்றனர். இதைக் கடைபிடிக்க விரும்பும் மாணவ மாணவியர் அதற்குப்பிறகு கல்லூரி யிலுள்ள பொது வாசக அறைக்கோ, விளையாட்டு மைதானத்திற்கோ, பல்வகைப் பொழுதுபோக்குகளுக்கோ செல்வதை அடியோடு நிறுத் திவிடுவர். இது கிறிஸ்தவரல்லோதோர் மனதில் கிறிஸ்தவ சீடத்து வத்தைக் குறித்துத் தவறான, எதிர்மறையான கருத்தை வைத்துவிடு கிறது. வளாக மற்றும் அயலக நற்செய்திப்பணிக்கு முதற்படியே நட்பை ஏற்படுத்துவதுதான். நமது நண்பர் வட்டாரத்திலிருந்துதான் பொதுவாக திருச்சபையின் ஐக்கிய வட்டத்திற்குள் நாம் நபர்களைக்

கொண்டுவருகிறோம். மனிதரைப் பிடிப்போருக்கு மனிதர் பிடிக்க வேண்டும். பாவத்தை வெறுக்க வேண்டும், பாவியை அல்ல.

பதினாறு வயதில் (1962) ஒரு கல்லூரி மாணவனாக நான் இரட் சிக்கப்பட்டபோது எனது பழைய நண்பர்களை உதறித் தள்ளிவிட வில்லை. நான் தொடர்ந்து அவர்களை நேசித்தேன், சந்தித்தேன். எனது புதிய அர்ப்பணத்தையும் வாழ்க்கையின் விந்தை மாற்றத்தை யும் அவர்களுக்குத் தெளிவாக்கினேன். அதற்குப் பின்னர் நான் அவர் களோடிருக்கும்போது அவர்கள் கெட்ட வார்த்தைகளோ தீய நகைச் சுவையோ பேசமாட்டார்கள். ஒதுங்கிக் கூட்டுக்குள்ளிருக்கும் சபை யானது சமுதாயத்தைப் பாதிக்கவே முடியாது. ஆராதிப்பதில் தீவிர மாயிருந்ததோடு, ஆதிச்சபையினர் ''எல்லா மனிதரிடத்திலும் தயவு'' பெற்றிருந்தார்கள். அதுவே அவர்களது அனுதின வளர்ச்சிக்கு இரக சியம் (அப் 2:47).

எந்தவோர் உள்ளூர்ச் சபையும் 100 சதவீதம் விசுவாசிகள் அல்லது 100 சதவீதம் அவிசுவாசிகள் என்று சொல்ல முடியாது. இருதிறத்தாரும் கலந்தே இருப்பர்; சதவீதம்தான் வேறுபடும்! கண்டிப்பாய்ச் சொன் னால், கர்த்தரின் நாமத்தைத் தொழுதுகொள்ளுதலும் அவரது பந்தி யில் பங்கேற்பதும், பங்குபெறுவோர் யாவரும் மறுபடி பிறந்தோரா யிருந்தால்தான் அர்த்தமுள்ளதாயிருக்கும் (2 தீமோ 2:22ஆ; 1 கொரி 10:16,17). கர்த்தரின் பந்தியை வேண்டுமானால் விசுவாசிகளுக்கு மட்டுமென்று சொல்லிவிடலாம். ஆனால் ஆராதனையில் கலந்து கொள்வதிலிருந்து அவிசுவாசிகளை யார் தடுக்கமுடியும்? (1 கொரி 14:24,25). திருமுழுக்கு பெற்றோரெல்லாரையும் கோதுமை மணி களென்றோ, திருமுழுக்கு பெறாதவரெல்லாரும் களைகளென்றோ சொல்லமுடியாது. திட்டவட்டமாக வரையறுப்பது கடினம் (மத் 13: 24-30). எனவே கோடுபோட்டுக்கொண்டிருக்காது மக்களுக்குக் கரி சனையுடன் பணி செய்யும் சமுதாயமாய்த் திகழ்வோம்.

பிரிந்திருத்தலை அளவுக்குமீறி வலியுறுத்துவோர் பொதுவாய்க் கையாளும் சில திருவசனங்களைக் கவனிப்போம்—

''உலக சிநேகம் தேவனுக்கு விரோதமான பகை'' (யாக் 4:4). இது ''இச்சை... கொலை.. பொருளாசை... சண்டை... பாவச் சிற்றின் பம்'' ஆகியவைகளைக் குறிக்கிறது (வச 1-3).



''நீங்கள்அவர்கள் நடுவிலிருந்து புறப்பட்டுப் பிரிந்து போங்கள்'' (2 கொரி 6:17). இது விக்கிரகாராதனையை விட்டு முழுவதுமாய் விலகுவதற்கு வந்த அழைப்பு (வச 16).

''ஆகாத சகவாசம் நல்லொழுக்கங்களைக் கெடுக்கும்'' (1 கொரி 15:33). இது உலகப்பொருள்மீது பற்று மற்றும் உயிர்த்தெழுதலை மறுதலிக்கும் விவாதங்களுக்கு எதிரான எச்சரிப்பு (வச 32).

இவையெல்லாவற்றையும் சேர்த்து முடிவான கருத்தைச் சொல் லும் கிறிஸ்துவின் ஜெபத்தைக் கவனியுங்கள்: ''பரிசுத்த பிதாவே, நீர் இவர்களை உலகத்திலிருந்து எடுத்துக்கொள்ளும்படி நான் வேண் டாமல், நீர் இவர்களைத் தீமையினின்று காக்கும்படி வேண்டுகிறேன்'' (யோ 17:15).

## 11. விசுவாசிகளுக்குத் தோல்வியே வராதா?

''கிறிஸ்துவுக்குள் *எப்பொழுதும்* எங்களை வெற்றிசிறக்கப்பண்ணு கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்'' (2 கொரி 2:14).

''இவை *எல்லாவற்றிலும்* நாம் நம்மில் அன்புகூருகிறவரால் முற்றும் ஜெயங்கொள்ளுகிறவர்களாயிருக்கிறோம்'' (ரோ 8:37).

இவை போன்ற திருவசனங்களை மேலெழுந்தவாறு வாசிப்பது சராசரியான கிறிஸ்தவன் எவனையும் தன் வாழ்வில் தோல்வி என் பதே வராது என்று எண்ணச்செய்யும். தமது பிள்ளைகள் தோல்வி யிலேயே வாழவேண்டுமென்பது கடவுளின் சித்தமில்லையெனினும் அவர்களது நலனுக்காகவே அவர்கள் வாழ்வில் அவர் தோல்விகளை அனுமதிக்கிறார். தோல்வியெனும் பாடசாலைக்கு எவரும் தப்பிய தில்லை என்பதே வேதத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள தேவ மனிதர் யாவரது வாழ்க்கைச் சரிதைகளிலும் தெளிவு. விசுவாசிகளின் தந்தை யெனப்படும் ஆபிரகாம், பன்னிரு அப்போஸ்தலரின் முக்கிய தலை வனான பேதுரு, சபைச் சத்தியங்களின் பிரதான உபதேசியாகிய பவுல், இப்படி யாரென்றாலும் சரி, அவர்கள் தோல்விகளைத் தழுவா மலில்லை. எனது சொந்த வாழ்விலும் பணியிலும் வெற்றிகள்

ஏராளம், தோல்விகள் குறைவு. ஆனால் கிறிஸ்துவோடு நான் நடந்துள்ள 51 ஆண்டுகளில் (கி.பி. 2013) எனது வெற்றிகளைவிட தோல்விகளிலிருந்தே அதிகம் கற்றிருக்கிறேனென்று உண்மையாய்ச் சொல்ல முடியும். இதைப் பகுத்துப் பார்க்குங்கால் கடவுள் நமது வாழ்வில் தோல்விகளை அனுமதிப்பதற்குக் குறைந்தது ஐந்து காரணங்களாவது எனக்குத் தோன்றுகின்றன—

□ *நம்மை இன்னும் தாழ்மைப்படுத்த*

''அழிவுக்கு முந்தியது அகந்தை; வீழ்ச்சிக்கு முந்தியது மனமேட்டிமை'' (நீதி 16:18). நமக்கு எல்லாம் நலமாகவும் வெற்றியாகவும் நடக்கும்போது பெருமையால் நிறைவது இயல்பு. கடவுளின் கிருபை மனிதனின் பெருமைக்கு எதிரானது (1 பேது 5:5ஆ). தமது கிருபையை நமக்கு அருளாது இருக்க முடியாத அளவு அவர் கிருபையுள்ளவர். நம்மைப் பணியச்செய்து அவர்முன் தாழ்மையுடன் நடக்க வைக்க தோல்வி ஒன்றுதான் வழியென்றால் அதை நமது வாழ்வில் அனுமதிக்க அவர் தயங்கமாட்டார். தேவ கிருபையை இழப்பதைவிட விழுந்து மறுபடி எழுந்திருப்பது மேல்.

□ *நம்மை இன்னும் ஞானமுள்ளவர்களாக்க*

நமது வாழ்க்கையில் தோல்வியென்பதே இல்லாதிருக்குமானால் நமது கில்லாடித்தனமும் அறிவுமே நமது வெற்றிகளுக்குக் காரணமென்று எண்ணத் துவங்கிவிடுகிறோம். ''தன் பார்வைக்கு ஞானியாயிருப்பவனைக் கண்டாயானால், அவனைவிட மூடனைக் குறித்து அதிக நம்பிக்கையாயிருக்கலாம்'' என்கிறது திருமறை (நீதி 26:12). ''உங்களையே புத்திமான்களென்று எண்ணாதிருங்கள்'' என்றும் அது அறிவுறுத்துகிறது (ரோ 12:16). தோல்விகள் நம்மை நமது வழிகளை ஆராய்ந்துபார்க்கச் செய்து, நாம் அறியாததைவிட நாம் அறிந்தது சொற்பம் என்று நம்மை அறியச் செய்கின்றன.

□ *நம்மை இன்னும் கருணையுள்ளவர்களாக்க*

பிறர்மீது கொடூரமாகவும் தங்கள்மீது கனிவாகவும் நடந்து கொள்பவரைத் தேவன் கண்டிப்பாய் நடத்துகிறார். ''சகோதரரே, ஒருவன் ஏதேனும் குற்றத்தில் அகப்பட்டுக்கொண்டால், ஆவிக்குரியவர்களாகிய நீங்கள் கனிந்த உள்ளத்தோடு அவனைத் திருத்துங்கள்; நீங்களும் சோதனைக்கு உள்ளாகாதவாறு கவனமாயிருங்



கள்'' என்று திருமறை நம்மை எச்சரிக்கிறது (கலா 6:1). ஒருவிதத்தில் சொன்னால் பேதுரு தவறியதாலேயே தனது சகோதரருக்கு ஆசீர்வாதமாயிருக்கும் தகுதிபெற்றான் (லூக் 22:32). சர்வவல்லவர் சகல ''ஆறுதலின்'' தேவன்; அவர் ''இரக்கங்களின்'' பிதா. நமது சோதனைகளிலும் உபத்திரவங்களிலும் அவர் நம்மைக் கனிவாய் நடத்துகிறார். அவரது கனிவிரக்கத்தை நாம் ருசிபார்க்கும்போதுதான் நம்மைப்போல் தத்தளிக்கும் உடன் சகோதர சகோதரிகளை எப்படி நடத்தவேண்டுமென்று நமக்குப் புரிகிறது (2 கொரி 1:3,4). இயேசுதாமே எல்லாப் பகுதிகளிலும் நம்மைப்போல் சோதிக்கப்பட்டதால் நமது பலவீனங்களைக் குறித்து அவர் மனதுருக்கத்துடன் ''பரிதபிக்கிறார்'' (எபி 4:15).

□ *நம்மை இன்னும் பரிசுத்தப்படுத்த*

''நீதிமான் ஏழுதரம் விழுந்தாலும் திரும்பவும் எழுந்திருப்பான்'' (நீதி 24:16அ). அவன் நீதிமானாயிருப்பதால் ''ஏன் விழுந்தேன்?'' என்று ஒவ்வொரு முறையும் அலசிப் பார்த்து அதற்கான காரணங்களைத் தவிர்க்கிறான். இப்படிச் செய்வதால் நடைமுறை வாழ்வில் அதிகமதிகமாய்ப் புனிதமடைகிறான். உண்மையான ஆன்மீகத் துக்கமானது நம்மிலே ''கவனத்தையும், வெறுப்பையும், பயத்தையும், ஆவலையும், பக்தி வைராக்கியத்தையும், கண்டிப்பையும்'' உருவாக்குகிறது (2 கொரி 7:10,11). தோல்விகளிலிருந்து நாம் கற்கும் பாடங்கள் எதிரியின் தாக்குதல்களுக்கு எதிராக விழிப்பாயிருக்க நமக்குப் போதிக்கின்றன.

□ *நம்மை இன்னும் சகச்சார்புள்ளவர்களாக்க*

நாம் தனியாகவே எல்லாவற்றையும் சாதித்துவிடமுடியாது; பிறரது உதவி நமக்குத் தேவை என்பதைப் பயங்கரமான தோல்விகளைச் சந்திக்கும்வரை நாம் உணர்வதில்லை. கிறிஸ்துவின் உடலில் எந்த உறுப்பும் தனியாக தன்னில் தானே நிறைவானதல்ல. ஒவ்வொரு உறுப்பிற்கும் பிற உறுப்புகளின் உதவி தேவை (எபே 4:15,16). சோதனையின் வேளையில் இயேசு தமது சீடரின் ஐக்கியத்தை நாடினார். பேதுருவோ அனைவரும் இயேசுவை விட்டோடினாலும் தான் மட்டும் அவரை விடுவதேயில்லையென பெருமையடித்துக்கொண்டான். சோதனையில் வெற்றியாய் வெளிவந்தது யாரென நாமறிவோம்!

நண்பரே, வாழ்க்கையின் தோல்வி எதுவும் உங்களைத் தீர்ப்புணர்வுக்குள் நடத்தவேண்டாம் (ரோ 8:1). தோல்வி என்பது முடிவானதல்ல. தோல்வியானது சுமக்க முடியாத பளுவாகலாம்; அல்லது உங்களுக்குப் பறக்க செட்டைகளைத் தரலாம். ஹென்றி போர்டு என்பவரின் வார்த்தைகளில் சொன்னால், ''கூடுதல் தெளிவோடு திரும்பவும் துவங்குவதற்கு தோல்வி ஒரு வாய்ப்பேயன்றி வேறல்ல!''

## 12. தேவ சித்தத்தைத் திட்டமாய் அறிய முடியுமா?

தேவ சித்தம் குறித்துப் பேசுகையில் நாம் இரு பகுதிகளை அறிய வேண்டும். ஒன்று பொதுவான தேவ சித்தம், மற்றது தனிப்பட்ட தேவ சித்தம். பொதுவான தேவசித்தம் அடிப்படையானதும் நம்மெல்லாருக்கும் ஒன்று போலவும் இருப்பதாகும். அடுத்ததோ நபருக்கு நபர் வேறுபட்டதாகும். பரிசுத்தம், தொழுகை, தீமைக்கு நன்மை செய்தல் போன்றவை முதல் வகையைச் சேரும் (1 தெச 4:3; 5:18; 1 பேது 2:15). இப்பகுதியை உத்தமமாய் நெடுகவே நிறைவேற்றி வந்தால், தனிப்பட்ட வாழ்விற்கான குறிப்பான தேவ சித்தத்தை அறிந்து செயல்படுத்துவது இலகுவாகும்.

தேவனது தனிப்பட்ட, குறிப்பான சித்தத்தை அறியப் பொதுவாக நான்கு உதவிகள் உண்டு. ☐ முதலாவது, வேத போதனை. வாழ்விற்கும் நடத்தைக்கும் முடிவான அதிகாரம் தேவ வசனமே. எந்தவொரு செயலும் திருவசன அடிப்படையில் முழுமையாக அங்கீகரிக்கப்பட முடியாததானால் அடுத்து அதைக் குறித்துச் சிந்திக்கத் தேவையேயில்லை. ☐ இரண்டாவது, நமது உள்ளத்தில் தூயாவியானவரின் சத்தம். நமக்குள்ளிருக்கும் ஆவியானவர் நமது இருதயத்திலும் மனதிலும் சில உணர்வுகளைப் பதிக்கிறார். நம்மை நடத்தும் தேவனவர். ☐ மூன்றாவது, தேவபக்திக்கேதுவான ஆலோசனைகள். முதிர்ச்சியுள்ள விசுவாசிகளும் தலைவர்களும் தங்கள் அறிவு, அனுபவம், வரங்கள் மூலமாக நமக்கு ஆலோசனைகள் தரமுடியும். ☐ முடிவாக, நாம் கவனிக்கவேண்டியது சூழ்நிலைகள். பொதுவாக இது தீர்மானத்தை நிச்சயப்படுத்திக்கொள்ள உதவும். ஏனெனில், நமது



வாழ்க்கையின் காரியங்களைக் கட்டளையிடுபவர் தேவன்தானே. நம்மைத் தமது உள்ளங்கைகளில் அவர் வரைந்து வைத்திருக்கிறாராம் (ஏசா 49:16). மேற்குறிப்பிட்ட இந்நான்கு காரியங்களும் ஒரே வரிசையில் அமையுமானால் அத்திசையில் தைரியமாக முன் செல்லலாம். அத்தீர்மானத்தைக் குறித்த மனச் சமாதானமும் கூடுதல் உறுதியளிக்கும்.

ஆனால், இவ்விதப் படிகள் வழியாகச் சென்றாலும் சில சமயங்களில் தேவ சித்தத்தைத் திட்டமாகச் சொல்லமுடியாதிருக்கலாம். அதற்குப் பல காரணங்கள் இருக்கலாம்—

அ) அக்காரியத்தில் தேவன் தமது சித்தத்தை வெளிப்படுத்தினால் அதை நிறைவேற்றக்கூடிய பக்குவம் நமது மனதிலும், ஆன்மாவிலும், உடலிலும் இல்லையென தேவன் அறியலாம். ''இன்னும் அநேகக் காரியங்களை நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதாயிருக்கிறது. அவைகளை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள்'' என்று ஒருமுறை இயேசு தமது சீடரிடம் சொன்னார்! (யோ 16:12). அப்படியானால் நாம் ஜெபத்திலும் தியானத்திலும் கூடுதல் நேரம் செலவழித்துக் கொண்டேயிருந்து தெளிவாக நமக்குத் தெரிந்த காரியங்களை விறுவிறுப்பாகச் செய்துகொண்டிருக்கவேண்டும்.

ஆ) திருமறைத் தத்துவங்களுக்குக் கீழ்ப்படியாத சில பகுதிகள் நமது வாழ்வில் இருக்கலாம். நமக்குக் கூடுதலாகத் தேவையானது கீழ்ப்படிதலானால் தேவன் கூடுதலாக வெளிப்பாடு தரமாட்டார். நாம் நம்மை நன்கு ஆராய்ந்து பார்த்துக் காரியங்களைச் சரிசெய்யவே அவர் எதிர்பார்ப்பார். ''தன் வழியைச் சரிசெய்கிறவனுக்குத் தேவனது இரட்சிப்பை வெளிப்படுத்துவேன்'' (சங் 50:23ஆ). பள்ளங்கள் நிரப்பப்பட்டு, மலைகள் தகர்க்கப்பட்டு, கோணலானவைகள் நேராக்கப்பட்டு, கரடு முரடானவைகள் சமமாகும்போது நாம் தேவனது வழியைத் தெளிவாகப் பார்க்கமுடியும் (லூக் 3:4-6).

இ) நமது விசுவாசத்தைப் பலப்படுத்த தேவன் சற்று நிச்சயமின்மையை (uncertainty) விட்டுவைக்கிறார். கிறிஸ்தவ வாழ்வைச் சவாலாக்குவதே அதுதான். கட்டிட வரைபடம் (blueprint) போன்றதொன்றை நமது வாழ்விற்காக தேவன் தருவதில்லை. ஒரு திசைமானியை (compass) மட்டும் கையில் கொடுக்கிறார். நாம் விசுவாசத்தோடு அடியெடுத்து வைக்கவேண்டும். முன்செல்லும் வேளை

யில் இடது வலதுபுறம் வழிவிலகினால், ''வழி இதுவே; இதிலே நடவுங்கள்'' எனும் அவரது சத்தம் பின்னாலே கேட்கும் (ஏசா 30:21). எங்கே என்று தெரியாது முன்செல்வதுதான் விசுவாசம் (எபி 11:8).

## 13. கடவுள் நமது வாழ்க்கைக்கு முழு வரைபடத்தையும் கொடுத்துவிடுகிறாரா?

வெளிப்பாட்டு வரங்களாகிய தீர்க்கதரிசனம், ஞானத்தைப் போதிக்கும் வசனம், அறிவை உணர்த்தும் வசனம் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள மறுமலர்ச்சி தேவன் இன்றும் பேசுகிறாரென்பதைப் புதுப் பொலிவுடன் நிச்சயப்படுத்துகிறது. ஆனால் இவ்வரங்களைக் கொண்டுள்ளதாகக் கூறும் சில பிரசங்கிமார் விசுவாசிகளின் வாழ்க்கைக்கு முழுக் கட்டிட வரைபடத்தையும் (blueprint) வாக்களிக்கையில் இவ்வரங்கள் துர்ப்பிரயோகம் செய்யப்படுகின்றன என்றுதான் சொல்லவேண்டும். இவ்விதம் அவர்கள் வாக்களிப்பது பரவசமூட்டுவதாயிருந்தாலும் அது புதிய ஏற்பாட்டு உபதேசத்திற்கு உகந்ததல்ல.

தேவன் நமக்குக் கட்டிட வரைபடத்தையல்ல, தேசப் படத்தையும் திசைமானியையும் (map & compass) மட்டுமே கொடுக்கிறார். கட்டிட வரைபடம் கொடுக்கப்பட்டுவிட்டால் தெரிந்தெடுப்புகளுக்கு இடமில்லாதுபோகிறது. வரைபடத்திலுள்ள விபரங்களாலன்றி கர்த்தரின் ஆவியினால் நாம் நடத்தப்படமாட்டோம். வாழ்க்கையே ''சப்'' என்றிருக்கும். திட்டமாய்த் தெரியாத நிலைதான் வாழ்க்கையை சுவாரஸ்யமாக்கி விசுவாசத்தைப் பலப்படுத்தும். விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாமைக் குறித்து, ''தான் போகுமிடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப் போனான்'' என்றெழுதப்பட்டிருக்கிறது (எபி 11:8). இதுதான் விசுவாசித்து நடப்பதாம். எதிர்காலம் நமக்கு ''எதை'' வைத்திருக்கிறதென்று நாம் அறியத் தேவையில்லை; எதிர்காலத்தை நமக்காய் வைத்திருப்பது ''யார்'' என்ற நிச்சயம் நமக்கிருந்தால் போதும்.

மனந்திரும்பிய வேளையில், ''ஆண்டவரே, நான் என்ன செய்ய நீர் சித்தமாயிருக்கிறீர்?'' என்று பவுல் கேட்டபோது, அவனது எஞ்சிய வாழ்க்கைக்கு ஒட்டுமொத்தமான வரைபடம் அவனுக்குக் கொடுக்கப்படவில்லை. மாறாக, ''நீ எழுந்து நகருக்குள்ளே போ; நீ செய்ய



வேண்டியது அங்கே உனக்குச் சொல்லப்படும்'' என்று ஆண்டவர் பதிலளித்தார் (அப் 9:6). ஞானியான பவுலுக்கு இது மட்டந்தட்டுவது போலிருந்திருக்கும். ஆனாலும், ஒவ்வொரு அடியாய்த்தான் தேவன் நம்மை நடத்துகிறாரென்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. ஹென்றி நியூமேன் (1801-1890) இவ்விதம் பாடினார்—

*காரிருளில் என் நேச தீபமே, நடத்துமேன்;*
*வேறொளியில்லை, வீடும் தூரமே, நடத்துமேன்.*
*நீர் தாங்கின், தூர காட்சி ஆசியேன்;*
*ஓர் அடிமட்டும் என்முன் காட்டுமேன்.*

எதிர்காலத்தைக் குறித்த முழு வரைபடத்தைத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லுகிறேன் எனும் பிரசங்கிமாரைக் குறித்துக் கவனமாயிருங்கள்; அது உங்கள் வாழ்க்கையையே நாசமாக்கிவிட வாய்ப்புண்டு. வெளிப்பாடு வெளிப்பாடு என்று பிரசங்கிமாரைத் தரிசனம் காணச் செல்லாதீர்கள். பரிசுத்த ஆவியானவரின் எளிய, நேரடி வழிநடத்துதல் தேவப்பிள்ளைகள் ஒவ்வொருவரின் பிறப்புரிமையாகும் (ரோ 8:14). உங்கள் வாழ்க்கையில் தேவ நடத்துதல் உத்திரவாதமாய்க் கிடைக்கவேண்டுமானால் நான்கு ஒழுங்குமுறைகள் கைக்கொள்ளப்படவேண்டும். (அ) அனுதின ஜெப தியானத்தில் கிரமமாயிருங்கள். ஜெபம் நம்மைத் திருச்சிந்தையோடு இணைக்கும். வேதம் நமது கால்களுக்குத் தீபம்; பாதைக்கு வெளிச்சம் (சங் 119:105). (ஆ) உங்கள் வேலையில் சுறுசுறுப்பாயிருங்கள். ''உன் கைக்கு நேரிடுகிறது எதுவோ அதை உன் முழு பலத்தோடே செய்'' (பிர 9:10அ). சோம்பேறிகள்மீது ஆண்டவர் தமது வழிநடத்துதலை வீணடிக்கிறதில்லை. (இ) திருப்பணியில் உற்சாகமாயிருங்கள். முழு மனதுடன் கடவுளைச் சேவிப்போர் அவர் சித்தமறியத் தவறுவதரிது. இறையரசிற்காய் உச்ச அளவு உழைக்கப்போகிறேனென்று அர்ப்பணிப்பது அவரது இதயத்தை மகிழ்விக்கும். (ஈ) தேவ மக்களின் ஐக்கியத்தில் களிகூறுங்கள். ஒருவரிடமிருந்து ஒருவர் கற்றுக்கொள்வது உங்களுக்குப் புதுக் கருத்துகளைத் தரும். அது உங்கள் இருதயம் கடினப்பட்டுப்போகாமலும் பார்த்துக்கொள்ளும் (எபே 5:17,19; எபி 3:13).

தவறிழைத்துவிடுவோமோ என்ற பயத்திலேயே மக்கள் முழு வரைபடம் தேடியலைகின்றனர். விழாமல் குழந்தை நடக்கப் பழகுமோ? எல்லாவற்றைக் குறித்தும் தீர்க்கமாய்த் தெரிந்திருக்கவேண்டுமென

விரும்புவது நம்மை முடமாக்கும். வேதத்தின் அடிப்படைத் தத்துவங்களை மனதில் வைத்துக்கொண்டு, உங்களுக்குக் கிடைத்த வெளிச்சத்திற்கேற்றபடி நடந்துகொள்ளுங்கள். நீங்கள் வழி விலகினால் ''பின்னாலே'' இருந்து சத்தங்கொடுத்து ஆண்டவர் உங்களைத் திருத்துவார் (ஏசா 30:21). ஒருவேளை தவறு செய்துவிட்டாலும், பதறத் தேவையில்லை. தவறுகளிலிருந்து எவ்வளவோ படிக்கிறோமே! நமது இருதயம் தேவனை நோக்கி உறுதியாயிருக்குமானால் அவர் எல்லாவற்றையும் நன்மையாக்கிவிடுவார். ஆண்டவர் முதலிலேயே அப்போஸ்தலரை மக்கெதோனியாவிற்குப் போகச் சொல்லவில்லை. அவர்கள் ஆசியாவுக்குச் சென்றபோது, அங்கு பிரசங்கியாதபடி ஆவியானவரால் தடுக்கப்பட்டனர். அவர்கள் பித்தினியாவுக்குப் போக முயற்சித்தபோது அங்கும் ஆவியானவரால் தடைபண்ணப்பட்டனர். பித்தினியாவிலிருக்கும்போதுதான் கர்த்தரிடமிருந்து மக்கெதோனியா செல்லும்படியான அழைப்பு வந்தது (அப் 16:6-10).

நமது வாழ்வில் இருட்டான காலங்களைத் தேவன் அனுமதிக்கத்தான் செய்கிறார். நாம் அவரை அப்படியே விசுவாசித்துத் தரித்திருக்க வேண்டும் (ஏசா 50:10). ''துன்பத்தின் அப்பத்தையும் உபத்திரவத்தின் தண்ணீரையும்'' கண்டு மிரண்டுவிடக்கூடாது (ஏசா 30:20). அங்குமிங்கும் ஓடித்திரிவது நம்மை எங்கும் கொண்டு செல்லாது (வச 15,16,18). தாவீதோடு சேர்ந்து, ''தேவன் எனக்குப் பலத்த அரணானவர்; அவர் என் வழியைச் செவ்வை பண்ணுவார்'' எனப் பாடுவோம் (2 சாமு 22:33).

நாம் வளர வளரத்தான் கடவுளுடைய வழிகளை அதிகமதிகமாய்ப் புரிய முடிகிறது. வயதுவந்தவன் மட்டுமே புரிந்துகொள்ளமுடிவதை எந்தத் தந்தையாவது சிறு குழந்தையிடம் சொல்வானா? இயேசு தமது சீடரிடம் அவர்களது மூன்றாண்டு பயிற்சியின்போது எல்லாவற்றையும் சொல்லிவிடவில்லை. ஒருமுறை அவர் அவர்களிடம், ''இன்னும் அநேகக் காரியங்களை நான் உங்களுக்குச் சொல்லவேண்டும்; அவைகளை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள்'' என்றார் (யோ 16:12). கடவுளோடுள்ள நமது ஐக்கிய வாழ்வின் துவக்கத்திலோ பின்னர் எந்தக் கட்டத்திலோ நமது எதிர்காலத்தைக் குறித்த முழு விபரப்படத்தையும் அவர் தருவாரானால் அது அவரது சொந்த ஞானத்திற்கே எதிரிடையானதாகும்.



## 14. புத்தாண்டுத் தீர்மானங்கள் பயனுள்ளவைதானா?

புத்தாண்டு அல்லது பிறந்தநாள் அல்லது நிறைவாண்டு தீர்மானங்களைத் தங்கள் வாழ்நாளில் எடுக்காதவர் எவருமிலர் எனலாம். ஆனால் அவைகளைக் கடைப்பிடிக்க முடியவில்லையேயென ஏறத்தாழ அனைவருமே வருந்துகின்றனர். தோல்வி மேல் தோல்வி வரும்போது இவ்விதம் தீர்மானங்கள் எடுப்பதில் அர்த்தமேயில்லையென்று நாளாவட்டத்தில் முடிவு கட்டிவிடுகிறோம். இத்தகைய முடிவு நமக்குத்தான் இழப்பென்றும் அது நமது ஆன்மீக வாழ்வின் வளர்ச்சியைக் குன்றச் செய்யுமென்றும் நாம் உணருவதில்லை.

நமக்குள் ''விருப்பத்தையும்'' அதே வேளையில் ''செய்கையையும்'' உண்டாக்குகிறவர் தேவனே (பிலி 2:13). தெளிவாய்க் கூறினால், தீர்மானங்களெடுக்கக் கடவுளின் பிள்ளைகளுக்குண்டாகும் விருப்பமெதுவும் அவர்களுக்குள்ளேயே தோன்றுவதல்ல. பரம பிதாவின் வழிநடத்தும் கரம் அவர்களுக்குப் பின்னிருந்து செயல்படுகிறது. நல்ல தீர்மானங்களினால் நல்ல வளர்ச்சியுண்டாகும். தீர்மானங்களைக் குறிகள் எனலாம். உயரங்களுக்கும் ஆழங்களுக்கும் செல்ல அவை நமக்குதவும். இக்கருத்தை மனதிற்கொண்டுதான் அப்போஸ்தலனாகிய பவுல், ''ஒன்று செய்கிறேன்; பின்னானவைகளை மறந்து முன்னானவைகளை நாடி, கிறிஸ்து இயேசுவுக்குள் தேவன் அழைத்த பரம அழைப்பின் பந்தயப் பொருளுக்காக இலக்கை நோக்கித் தொடருகிறேன்'' என்று சாட்சியிட்டான் (பிலி 3:13,14). இலக்கை வடிவாய்க் குறி வைக்கவும், மனச்சிதறல்களைத் தவிர்க்கவும் தீர்மானங்கள் உதவுகின்றன.

நமது தீர்மானங்கள் பலவற்றைக் கைக்கொள்ள முடியவில்லையே என்பதுதான் நமது ஏக்கம். அதைத் தொடர்ந்து வரும் குற்றவுணர்வு நாம் திரும்பவும் முயற்சிப்பதைத் தடைசெய்துவிடுகிறது. ஆனால் கடவுளுடைய பிள்ளைகளுக்குத் தோல்வியென்பது முடிவானதல்ல என்பதை நாம் நினைவிற்கொள்ளவேண்டும். ''நல்ல மனிதனுடைய காலடிகள் கர்த்தரால் உறுதிப்படும்; அவனது வழியின்மேல் அவர் பிரியமாயிருக்கிறார். அவன் விழுந்தாலும் வீழ்ந்துபோவதில்லை''

(சங் 37:23,24). திரும்பத் திரும்ப தோல்வியடைந்தாலும் மறுபடி முயற்சிக்கத் தயங்கக்கூடாது. ‘‘நீதிமான் ஏழுதரம் விழுந்தாலும் திரும்பவும் எழுந்திருப்பான்’’ (நீதி 24:16).

தீர்மானங்களில் பேராசை கூடாது. அவை செயலாற்றக்கூடியதா யிருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, நீங்கள் ஜெபமே பண்ணாத வராயிருந்தால், இனி தினமும் இரண்டு மணிநேரம் ஜெபிப்பே னென்று தீர்மானித்துவிடாதீர்கள். மாறாக, பதினைந்து அல்லது முப் பது நிமிடமென்று துவங்குங்கள். அந்த அளவில் நிலைப்பட்ட பின் னர் படிப்படியாக நேரத்தைக் கூட்டுங்கள். பெரிய காரியங்களின் துவக்கம் சிறியதே (சக 4:10). ‘‘விண்ணரசு ஒரு கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கிறது!’’ (மத் 13:31).

அவ்வாறே, ஒரே வேளையில் நிறைய தீர்மானங்களை எடுத்து விடாதீர்கள். ஆண்டின் துவக்கத்தில் பன்னிரண்டு தீர்மானங்களை மொத்தமாய் எடுப்பதற்குப் பதிலாக, ஒவ்வொரு மாதத் துவக்கத் திலும் ஒன்றை எடுக்கலாம். கிறிஸ்தவ வாழ்க்கை என்பது நடத்தல்; அது குதித்தல் அல்ல! கர்த்தருக்குக் காத்திருக்கும்போது கழுகு களைப்போல் செட்டைகளையடித்து எழும்புவோமென்பது உண் மைதான். ஆனால் கழுகுகள் எடுத்தவுடன் உச்சிக்குச் சென்றுவிடுவ தில்லை (ஏசா 40:31). உறுதிப்படுத்தக்கூடிய அளவிற்கே நீளப் படுத்தவேண்டுமென்பது கிறிஸ்தவ வாழ்வின் வளர்ச்சிக்கு முக்கிய மானதொரு தத்துவமாகும் (ஏசா 54:2).

உங்களுக்கு நெருங்கிய ஜெபத்தோழனுடன் அல்லது உங்கள் வாழ்க்கைத் துணையுடன் உங்கள் தீர்மானங்களைப் பகிர்ந்துகொள் ளலாம். இவ்விதப் பொறுப்பான மேற்பார்வை பெரும் பயனளிக்கும். ஆனால் தனிப்பட்ட தீர்மானங்களை எல்லாருக்கும் சொல்லத் தேவை யில்லை. இது தேவையற்ற அழுத்தத்திற்குள் உங்களைக் கொண்டு வரும். தீர்மானங்கள் பொருத்தனைகளல்ல. அவைகள் தேவனோடும் மனிதருக்கு முன்பாகவும் உங்கள் நடக்கையை மேம்படுத்த நீங்கள் தனிப்பட்ட முறையில் தன்னார்வமாய் எடுக்கும் முயற்சியேயன்றி வேறல்ல. உங்கள் இருதயத்தின் விருப்பங்களைக் கடவுளிடம் சொல் லிவிட்டு அவற்றின் நிறைவேறுதலுக்குதவ அவரை நம்பியிருங்கள் (சங் 37:5). உங்களாலான அத்தனையையும் செய்துவிட்டு மீதியை



அவர் கரத்தில் விட்டுவிடுங்கள். ‘‘விரும்புகிறவனாலும் அல்ல, ஓடு கிறவனாலும் அல்ல, இரங்குகிற தேவனாலேயே ஆகும்’’ (ரோ 9:16).

ஆண்டின் முடிவில், எந்த அளவு உங்கள் தீர்மானங்களை நிறை வேற்றியிருக்கிறீர்களெனக் கணித்து உங்களை நீங்களே பாராட்டிக் கொள்ள புத்தாடை ஒன்று வாங்கிக்கொள்ளுங்கள்; அல்லது நல்ல விருந்து ஒன்று சாப்பிட்டு மகிழுங்கள் (பிர 9:7,8). ‘‘பிரயாசப்பட்டுப் பயிரிடுகிறவனே விளைச்சலில் முதற்பங்கு பெறவேண்டும்’’ (2 தீமோ 2:6).

பகுதி இரண்டு

# கிறிஸ்தவ உபதேசம்



## 15. திரித்துவத்தை விளக்க முடியுமா?

நமக்கு ஒரே தேவன் உண்டு. அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்று மூன்று நபர்களாகத் தம்மை வெளிப்படுத்தியுள்ளார். இம்மூன்று தெய்வீக நபர்கள் ஒரே தேவனுக்குள் மகிமையானதோர் இரகசியமாக அன்பின் ஐசுவரியத்தினால் ஐக்கியப்பட்டுள்ளனர். தெய்வத்துவத்தில் இவர்கள் இவ்விதம் இணைக்கப்பட்டிருந்தாலும் ஆள்தத்துவத்திலும் செயலிலும் தனித்திருக்கிறார்கள்.

தேவனின் திரியேகத்துவத்தை விளக்கும் எடுத்துக்காட்டுகள் வேதத்தில் ஏராளம் உண்டு.

■ முதலாவது கிறிஸ்துவின் வாழ்க்கையை நோக்குவோம்—

மரியாள் மீது ''ஆவியானவர்'' வந்து, உன்னத ''தேவனுடைய'' பலம் நிழலிட்டதால் ''இயேசு'' பிறந்தார் (லூக் 1:35).

திருமுழுக்கு பெற்று ''இயேசு'' வெளிவந்தபோது, ''பரிசுத்த ஆவி யானவர்'' புறாவைப்போல் அவர்மீது வந்திறங்கினார்; இவர் என் நேச குமாரன் என்று ''பிதாவானவர்'' சாட்சியிட்டார் (மத் 3:16,17).

''பிதாவானவர்'' தமது ''குமாரனுக்கு'' தமது ''ஆவியை'' அளவில் லாமல் கொடுத்தார் (யோ 3:34-36).

எழுபது பேர் உற்சாகமாய்த் திரும்பி வந்தபோது ''இயேசு'' ''பரிசுத்த ஆவியில்'' களிகூர்ந்து ''பிதாவை'' ஸ்தோத்திரித்தார் (லூக் 10:21).

''நித்திய ஆவியினாலே'' ''இயேசு'' தம்மைப் ''பிதாவாகிய தேவ னுக்கு'' ஒப்புக்கொடுத்தார் (எபி 9:14).

''தேவனுடைய'' வலது பாரிசத்திற்கு ''இயேசு'' உயர்த்தப்பட்ட போது, ''பிதாவிடமிருந்து'' வாக்குத்தத்தின்படி ''பரிசுத்த ஆவியைப்'' பெற்றுத் தமது சீடர்மீது பொழிந்தருளினார் (அப் 2:33; 1:4,5; யோ 15:26).

■ அப்படியே, திரித்துவத்தின் மூன்று நபர்களும் ஒவ்வொரு கிறிஸ்தவனின் வாழ்க்கையிலும் தீவிர ஈடுபாடு கொண்டுள்ளனர்—

''பிதாவாகிய'' தேவன் மறு ஜென்ம முழுக்கினாலும் ''இயேசு கிறிஸ்து'' மூலமாய்ச் சம்பூரணமாய்ப் பொழிந்தருளிய ''பரிசுத்த ஆவியினுடைய'' புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்தார் (தீத் 3:5-7).

நாம் ''பிதாவாகிய'' தேவனுடைய முன்னறிவின்படியே, ''ஆவியானவரின்'' பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்படிதலுக்கும், ''இயேசு கிறிஸ்துவின்'' இரத்தம் தெளிக்கப்படுதலுக்கும் தெரிந்துகொள்ளப் பட்டோம் (1 பேது 1:2).

நாம் ''பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே'' ஞானஸ் நானம் பெற்றிருக்கிறோம் (மத் 28:19).

''ஒரே பிதா'' ''ஒரே கர்த்தர்'' மற்றும் ''ஒரே ஆவி'' என்று வெளிப் படுத்தப்பட்டுள்ள ''ஒரே தேவன்'' மீதுதான் நமது ''ஒரே விசுவாசம்'' இருக்கிறது (எபே 4:4-6).

ஒரே ''ஆவியினாலே'' ''பிதாவினிடத்தில்'' சேரும் சிலாக்கியத்தைக் ''கிறிஸ்து'' மூலமாய்ப் பெற்றிருக்கிறோம் (எபே 2:18). ''பிதாவை'' நோக்கி, ''கிறிஸ்துவின்'' நாமத்தில், ''ஆவியானவரின்'' உதவியோடு நாம் ஜெபிக்கிறோம். ஆவியானவராகிய தேவன் நமது ஜெபங்களை எழுதுகிறார்; குமாரனாகிய தேவன் நமது ஜெபங்களைச் சமர்ப்பிக்கிறார்; பிதாவாகிய தேவன் நமது ஜெபங்களை ஏற்றுக் கொள்ளுகிறார் என்றார் C.H. ஸ்பர்ஜன்.

நமக்குக் ''கிறிஸ்துவின்'' சிந்தை உண்டாயிருக்கும்போது ''தேவன்'' தமது ''ஆவியின்'' மூலமாக தமது ஆழங்களை நமக்கு வெளிப் படுத்துகிறார் (1 கொரி 2:10,16).

■ அப்படியே ஊழியத்திலும் திரித்துவத்தின் மூன்று நபர்களின் ஈடுபாட்டையும் தெளிவாக அறியலாம்—

''வரங்களில் வித்தியாசங்கள் உண்டு; ஆவியானவர் ஒருவரே. ஊழியங்களிலேயும் வித்தியாசங்கள் உண்டு; கர்த்தர் ஒருவரே. கிரியைகளிலேயும் வித்தியாசங்கள் உண்டு; எல்லாருக்குள்ளும் எல்லாவற்றையும் நடப்பிக்கிற தேவன் ஒருவரே'' (1 கொரி 12:4-6).



''தேவன்'' தமது ''ஆவியினாலே'' வாசம்பண்ணுகிறதும், ''இயேசு கிறிஸ்துவை'' மூலைக்கல்லாகக் கொண்டதுமான பரிசுத்த ஆலயமே சபையாகும் (எபே 2:19-22).

''பிதாவிடமிருந்து'' தாம் பெற்ற ஆளும் அதிகாரத்தையும், சிங் காசனத்தில் உட்காரும் உரிமையையும் ஜெயங்கொள்ளுகிறவர் களுக்குக் ''கிறிஸ்து'' கொடுப்பார் என்று ''ஆவியானவர்'' சபை களுக்குச் சொல்லுகிறார் (வெளி 2:27-29; 3:21,22).

■ தெய்வீகத் தன்மையில் திரித்துவத்தின் மூவரும் சமமென்றாலும் முடிவான அதிகாரமானது பிதாவாகிய தேவனிடமே உண்டு. இதோ சில எடுத்துக்காட்டுகள்—

''என் வலது பக்கத்திலும், என் இடது பக்கத்திலும் உட்கார்ந்திருக் கும்படி என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தம்பண்ணப்பட்டிருக் கிறதோ அவர்களுக்கேயல்லாமல், மற்றொருவருக்கும் அதை அருளு வது என் காரியமல்ல'' (மத் 20:23).

''பிதாவானவர் தமது ஆதீனத்திலே வைத்திருக்கிற காலங் களையும் வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு அடுத்ததல்ல'' (அப் 1:7).

முடிவில் குமாரனானவர் ''தேவனும் பிதாவுமாயிருக்கிறவருக்கு இராஜ்யத்தை ஒப்புக்கொடுப்பார்... சகலமும் அவருக்குக் கீழ்ப் பட்டிருக்கும்போது, தேவனே சகலத்திலும் சகலமுமாயிருப்பதற்கு, குமாரன் தாமும் தமக்குச் சகலத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்'' (1 கொரி 15:24,28).

திரித்துவத்தின் உபதேசத்தை முற்றிலும் விளங்கிக்கொள்ளமுடி யாத நிலையில் பக்தன் அகஸ்டின் கடற்கரையோரமாய் ஒருநாள் நடந்துகொண்டிருந்தாராம். சிறுவனொருவன் ஒரு பாத்திரத்தில் கடலி லிருந்து தண்ணீர் மொண்டுவந்து ஒரு சிறிய குழியில் திரும்பத் திரும்ப ஊற்றிக்கொண்டிருந்ததைப் பார்த்தார். ''தம்பி, என்ன செய்கிறாய்?'' என்று வினவினார். ''கடல் முழுவதையும் இந்தக் குழிக்குள் ஊற்றிவிடப்போகிறேன்'' என்றான் சிறுவன். அளக்கமுடியா தேவனை குறுகிய தனது மூளையறிவுக்குள் அடக்கிவிட முயன்ற தனது தவறு அப்பொழுதுதான் அவருக்கும் புரிந்ததாம்!

# 16. வேதாகம நவீன மொழியாக்கங்களைப்பற்றி...?

கடந்த 125 ஆண்டுகளாக நாம் பயன்படுத்தி வரும் தமிழ் வேதாகமம் 1871இல் சென்னை வேதாகமச் சங்கத்தினரால் ஐக்கியப் பதிப்பு என வெளியிடப்பட்டதாகும். இத்தனை ஆண்டுகள் இம்மொழிபெயர்ப்பு கிறிஸ்தவ உலகிற்குப் பேராசீர்வாதமாயிருந்துள்ளதென்பதை எவரும் மறுக்கவியலாது. அதே வேளையில் கடவுள் இந்த ஐக்கியப் பதிப்பின் மொழிநடையிலேயே பேசினார் என்றெண்ணுவது தவறு.

ஒரு புது மொழியாக்கத்தைக் குறித்துப் பேசியதும் அநேக கிறிஸ்தவர்கள் நினைப்பதெல்லாம் வேத வசனத்தோடு ஒன்றையும் கூட்டவும் கூடாது, அதிலிருந்து ஒன்றையும் குறைக்கவும் கூடாது என்ற தேவக் கட்டளையையே (உபா 12:32; வெளி 22:18,19). வேதத்தின் தவறற்ற இறைத்தூண்டலை இவ்வளவு பயபக்தியாய் விசுவாசிப்பதைப் பாராட்டும் அதே வேளையில், மேற்குறிப்பிட்ட கட்டளை வேதத்தின் மூல எழுத்துப் பிரதிகளுக்கே (original autographs) பொருந்தும் என்பதையும் சுட்டிக்காட்டவேண்டியதிருக்கிறது. தேவனது வார்த்தை முதன் முதலில் எழுதப்பட்டது தமிழிலோ ஆங்கிலத்திலோ அல்ல. அது எபிரெய மொழியிலும், அரேமேய மொழியிலும், கிரேக்க மொழியிலுந்தான் எழுதப்பட்டது. அப்படியே நமது ஐக்கியப் பதிப்பும் முதலாம் தமிழாக்கம் அல்ல.

தமிழில் முதலில் வேதத்தை மொழிபெயர்த்து வெளியிட்டவர் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த பர்த்தலோமேயு சீகன்பால்க் என்பவர். தனது 24 வயதில் தரங்கம்பாடிக்கு மிஷனரியாக வந்த இவர் 1708இல் புதிய ஏற்பாட்டைத் தமிழாக்கம் செய்யத் தொடங்கினார். முழு வேதத்தையும் முடிக்குமுன்னரே 1719இல் இவ்வேதம் வெளியிடப்பட்டது. God என்ற சொல் இவ்வேதத்தில் ''சருவேசுவரன்'' என்று மொழியாக்கப்பட்டிருந்தது. கிறிஸ்தவர்கள் 40 ஆண்டுகள் இப்பதிப்பைப் பயன்படுத்தினர். சீகன் பால்கின் மொழியாக்கம் திருப்திகரமற்றதென 1740இல் கடலூருக்கு மிஷனரியாக வந்த ஜெர்மன் நாட்டவரான ஜோஹான் பிலிம் பெப்ரீஷியஸ் என்பவர் 1752இல் இன்னொரு



மொழிபெயர்ப்பைத் தொடங்கினார். சீகன் பால்கின் மொழிநடையை விடச் சிறப்பாக இருந்த இவ்வேதம் 1813இல் வில்லியம் கேரியினால் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இவ்வேதத்தில் ''சருவேசுவரன்'' என்பதற்குப் பதிலாகப் ''பராபரன்'' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருந்தது. 19ஆம் நூற்றாண்டின் நடுவில் தென்னிந்தியாவில் பணியாற்றிய மிஷனரிச் சங்கங்கள் ஒவ்வொன்றும் இம்மொழிபெயர்ப்பைச் சற்றுத் திருத்திப் பயன்படுத்தின. பெப்ரீஷியசின் மொழிபெயர்ப்பு வெளிவந்து ஏறத்தாழ 50 ஆண்டுகளாவிட்டதால் அதின் மொழிநடை மாற்றப்படவேண்டியதின் அவசியத்தைச் சென்னை வேதாகமச் சங்கம் உணர்ந்து இன்னொரு ஜெர்மானிய மிஷனரி சார்லஸ் ரேனியஸ் தலைமையில் முந்திய மொழிபெயர்ப்பைத் திருத்தி 1840இல் வெளியிட்டது. முந்திய மொழிபெயர்ப்பின் சில இலக்கணப் பிழைகளை ரேனியஸ் திருத்தியிருந்தார்.

ரேனியசினுடைய மொழிபெயர்ப்பைச் சிலர் ஏற்றுக்கொண்டனர்; பலர் ஏற்க மறுத்தனர். எனவே இரண்டிற்கும் பொதுவானதொரு மொழியாக்கம் தேவைப்பட்டது. இதைச் செய்ய வட இலங்கையிலுள்ள யாழ்ப்பாண மிஷனரிகள் மெதடிஸ்ட் மிஷனரி பீட்டர் பேர்சிவெல் தலைமையில் முன் வந்தனர். 1848இல் யாழ்ப்பாண மொழியாக்கம் நிறைவடைந்தது. இதில் ''தேவன்'' எனும் பதம் அறிமுகப்படுத்தப்பட்டது. தேவன் எனும் பதம் அக்காலத்தில் பன்மையில் இந்து சமயத் தெய்வங்களைக் குறிக்கும் பதமாயிருந்தது. முழுமுதற்கடவுள்களுக்குக் கீழானவர்களாயுள்ள தேவர்களே தேவன் என்றழைக்கப்பட்டனர். இதனால் கிறிஸ்தவக் கடவுளை இப்பதத்தால் அழைப்பது முறையல்ல என்பது ஒரு கருத்து. யாழ்ப்பாண மிஷனரிகளுக்கு மொழிபெயர்ப்பில் உதவிய ஆறுமுக நாவலர் என்பவரே தந்திரமாக ''தேவன்'' என்ற இச்சொல்லை வேதாகமத்தில் புகுத்திவிட்டதாகவும் கூறப்படுகின்றது.

யாழ்ப்பாண மொழிபெயர்ப்பு இந்தியாவில் ஏற்றுக்கொள்ளப்படாததால் லண்டன் மிஷனரிச் சங்க மிஷனரி ஹென்றி பவர் தலைமையில் 1863இல் புதிய ஏற்பாடும் 1868இல் பழைய ஏற்பாடும் இன்னொரு மொழியாக்கமாய் வெளிவந்தன. இம்மொழியாக்கம் 1611இல் இங்கிலாந்தில் வெளிவந்த ஜேம்ஸ் அரசனது பதிப்பு வேதாகமத்தையே (King James Version) அடிப்படையாகக் கொண்டிருந்தது. இதிலுள்ள

தவறுகளை யாழ்ப்பாண மிஷனரிகள் சுட்டிக்காட்டவே இரு நாட்டின் மிஷனரிகளும் 1869இல் கூடி ஹென்றி பவரின் மொழிபெயர்ப்பைத் திருத்தி 1871இல் சென்னையில் திருத்திய ஐக்கிய மொழிபெயர்ப் பாய் வெளியிட்டனர். இதுதான் நாம் இன்று பெரும்பாலும் பயன் படுத்தும் ''பரிசுத்த வேதாகமம்'' என்பது. தமிழ் வேதம் 1714இலிருந்து 1871வரை இத்தனை தடவை திருத்தப்பட்ட சரித்திரம் இருக்கும் போது இவ்வேத மொழிபெயர்ப்பை இனி திருத்தவே கூடாது; அது தான் முடிவானது என்று எப்படிச் சொல்ல முடியும்?

உலகில் உயிருள்ள மொழிகள் யாவும் தீவிரமாய் மாற்றமடைந்து கொண்டே இருக்கின்றன. மோசேயும் மத்தேயுவும் இன்று இருந்தி ருந்தால், அவர்கள் கி.மு. 4000 அல்லது கி.பி. 100 ஆண்டுகளின் மொழிநடையிலா பேசுவார்கள், அல்லது எழுதுவார்கள்? அப்படிப் பேசினால் அது இன்று யாருக்குப் புரியும்? அப்படியே வேத ஆக்கி யோன்கள் தங்கள் காலத்தில் சந்திகளிலும் சந்தைகளிலும் பேசப்பட்ட மொழி நடையிலேயே எழுதினார்கள். அவர்கள் வேதத்தை ஒரு நினை வுச்சின்னமாக படைக்கவில்லை; மாறாக, ஒரு செய்தியை மக்க ளுக்குப் பகிர்ந்தளிக்கவே இறைத்தூண்டல் பெற்றனர். வேதத்தைப் பூசை செய்யக்கூடாது; அதை வாழ்க்கையில் பயிற்சிக்க வேண்டும்.

மொழிநடையைக் காலத்திற்கேற்ப மாற்றுவதே நவீன மொழியாக் கங்களின் நோக்கமாகும். 1871இன் ஐக்கியப் பதிப்பிலுள்ள (OV) சொற்கள் பல இன்று பழக்கத்திலில்லை. இன்றையச் சமுதாயத்திற்கு அப்பழங்கால வார்த்தைகள் புரிவதேயில்லை. கிறிஸ்தவருக்கே இப் பிரச்னை என்றால், வேதத்தை வாசிக்க விரும்பும் கிறிஸ்தவரல்லா தோர் கதி? புதிய ஏற்பாடும் எபிரேய மொழியில் எழுதப்பட்டிருந்தால் அதின் செய்தி யூதரல்லாதோருக்கு எட்டியே இருக்காது. ஆனால் தமது மிஷனரிச் சிந்தையின் ஞானத்தின்படி இறைவன் புதிய ஏற் பாட்டைப் புறவினத்தாரின் முக்கிய மொழியாகிய கிரேக்க மொழியில் எழுதச் செய்தார்! அல்லேலூயா! கிறிஸ்தவராகிய நமக்கு என்றுதான் கண் திறக்குமோ?

மொழித் தொண்டில் ஆர்வங்காட்டிய மன்னர்கள் காலங்களில் தான் அந்தந்த மொழிகள் வளர்ந்துள்ளன. தமிழகத்தைப் பொறுத்த வரை கழக ஆட்சியில் தமிழ் மாபெரும் மறுமலர்ச்சியடைந்துள்ளது. இதைச் சாதகமாக வேத மொழியாக்கத்தில் நாம் பயன்படுத்திக்



கொண்டால் இளைய தலைமுறைக்கும் இனிவரும் தலைமுறை களுக்கும் பெருந்தொண்டாயிருக்கும். சரியான திருத்தங்களையும் முறையான மாற்றங்களையும் ஏற்பதே கிறிஸ்தவ மரபு. இன்னும் எத்தனைக் காலம் ''Apostle'' போன்ற கிரேக்கச் சொற்களுக்குத் தமிழ்ப்பதம் கண்டுபிடிக்கமுடியாமல் ''அப்போஸ்தலன்'' என்றே எழுதிக்கொண்டிருப்போம்? ''Zealot'' என்பதற்குத் தமிழ் ''செலாத்தே'' என்றெழுதுகிறோமே? அதற்குத் தமிழ் ''வெறியன்'' அல்லது ''தீவிரவாதி'' அல்லவா? பழைமையான பழகிப்போன சொற் களெல்லாம் புனிதமானவை என்றெண்ணுவது அறியாமை. ''கடவுள்'' போன்ற நல்ல காரணப்பெயர்களைப் பயன்படுத்தப் பயப்படக் கூடாது. (நமது தேவன் சகலத்தையும் ''கட''ந்தவர்; அதே வேளை யில் நமக்கு ''உள்'' இருப்பவர்!)

புதிய மொழியாக்கங்களுக்கு இன்னொரு காரணம் முந்திய மொழி யாக்கத்தின் காலம் வரை பயன்படுத்தப்பட்ட மூலமொழிப் பிரதி களைவிடப் பழமையானதும் நம்பகமானதுமான வேதப்பிரதிகள் கண்டுபிடிக்கப்பட்டதே ஆகும். எபிரெய மொழியின் அறிவும் கணிச மாகக் கூடிக்கொண்டிருக்கிறது. வேத மொழிபெயர்ப்பாளர் எவருக்கும் என்றும் மூலப்பிரதி (original) எதுவும் கிடைத்ததில்லை என்பது அநேகக் கிறிஸ்தவருக்கு அதிர்ச்சியூட்டும் தகவலாயிருக்கும். காலா காலமாக வேத மொழியாக்கங்களெல்லாம் எபிரெய, கிரேக்க ''நகல் களை'' (copies) வைத்தே செய்யப்பட்டன. புதிய ஏற்பாட்டு நகல் களில்மட்டும் ஏறத்தாழ 2,00,000 வேறுபாடுகளிலிருப்பது நமக்கு ஆச்சரியமாயிருக்கலாம். இங்குதான் நமது விசுவாசத்திற்கு வேலை!

ஹென்றி பவரின் மொழிபெயர்ப்பு 1936இல் டென்மார்க் மிஷனரி லார்சன் தலைமையிலான குழுவினரால் திருத்தி வெளியிடப்பட்டது. இவர் 1889இல் இந்தியாவுக்கு வந்து மாணவர் நடுவில் ஊழியம் செய்தவர். அடுத்த மொழிபெயர்ப்பு 1949இல் அயர்லாந்து மிஷனரி மோனஹன் தலைமையிலான குழுவினரால் வெளியிடப்பட்டது. 1977இல் இந்தியச் சுவிசேஷ ஊழிய நூல் நிலையத்தினர் ''ஜீவ னுள்ள மீட்பின் செய்தி—ஒரு தெளிவுரை'' எனும் தலைப்பில் புதிய ஏற்பாட்டின் எளிய மொழிநடையிலான மொழிபெயர்ப்பை வெளியிட் டனர். இது *Living Bible*இன் தமிழாக்கமாகும். 1995இல் சென்னை India Bible Literature நிறுவனத்தினர் ஒரு புது மொழியாக்கத்தை

குடும்பத் தியான ஆய்வு வேதாகமாக வெளியிட்டனர். அதே ஆண்டு திண்டிவனத்திலிருந்து ரோமன் கத்தோலிக்க வேதப் பண்டிதர் குழுவொன்றும் புராட்டஸ்டன்ட் வேதப் பண்டிதர் குழுவொன்றும் இணைந்து *''திருவிவிலியம்''* என்று ''பொது மொழிபெயர்ப்பு'' ஒன்றை வெளியிட்டுள்ளது. இது நேர்த்தியானதொரு மொழியாக்கம். தமிழில் இவைகளையும் ஆங்கிலத்தில் 50க்கும் மேற்பட்ட மொழி யாக்கங்களையும் நான் பயன்படுத்துகிறேன். எபிரெய அல்லது கிரேக்க மொழி பயிலும் வாய்ப்பு கிட்டாத எனக்கு எவ்வளவு முடி யுமோ அவ்வளவு நெருக்கமாக இம்மூல மொழிகளின் கருத்துக்குச் செல்ல இப்பல்வேறு மொழியாக்கங்கள் எனக்கு உதவுகின்றன.

சமீபத்தில் திரு. J. D. பால் ஜெயராஜ் அவர்கள் தயாரித்துள்ள *''வேதாகமத் துணை நூல்''* என்ற புத்தகத்தை சென்னை சுவிசேஷ ஊழிய நிலையத்தார் (ELS) வெளியிட்டுள்ளனர். பெரும்பாலும் தமிழ் வேதம் மட்டுமே வாசிப்போருக்கு இது பேருதவியாயிருக்கும்.

எந்த மொழியாக்கமும் பூரணமானதல்ல. எதைவிட எதுமேல் என்று வீணாக விவாதிப்பதைவிட இத்தனை மொழியாக்கங்களுக் காகத் கடவுளைத் துதிப்போம். புதிய ஏற்பாட்டு நான்கு சுவிசேஷங் களும் ஒரே சம்பவத்தை வெவ்வேறு விதமாக விவரிக்கின்றன. இத னால் அச்சம்பவத்தை முழுமையாக நாம் புரிந்துகொள்ள முடிகிற தல்லவா? அதேபோல்தான் பல்வேறு மொழியாக்கங்களும் எபிரெய, கிரேக்க வாசகங்களின் நிறைவையும், வேகத்தையும், தெளிவையும் நமக்குக் கொண்டுவருகின்றன.

லத்தீன் மொழியில் மட்டும் வேதம் இருந்த காலத்தில் அதைச் சாதாரண மக்களும் வாசிக்கும்படி மொழியாக்கம் செய்யத் துணிந்த பக்தர் பலரைச் சபைத் துரோகிகளென அக்கால மார்க்கத் தலைவர்கள் சித்திரவதை செய்து கொன்றார்கள். அப்படியே இன்றையத் தலை முறையினர் வாசித்துப் புரிந்துகொள்வதற்கு எளிய முறையில் மொழி யாக்கம் செய்ய முயற்சிப்போருக்குத் தலை போகலாம், ஆனால் தலைமுறைகள் அவர்களைப் போற்றும். போதாதா?

மாற்றத்தை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் எல்லாருக்கும் இருக் காது. இளைய தலைமுறையினர் முதியவர்களை அவர்களது பாரம் பரிய நோக்குக்காக அவமதிக்கக்கூடாது; அப்படியே முதியவர்கள்



இளைஞர்களை அவர்களது இசைவிணக்கப் பாவனைக்காக அலட் சியப்படுத்தக் கூடாது. இவ்விரு கூட்டத்தாருக்கும் நடுவில் பாலம் அமைத்து சமநிலையையும் ஒருமனதையும் காத்துக்கொள்வது நடு வயதுப் பிரசங்கிமார், போதகர்களின் கடமையாகும்.

வேதத்திற்குப் பல தமிழாக்கங்கள் வந்துகொண்டிருப்பதற்காகத் தேவனைத் துதிக்கும் அதே வேளையில், வேதமே இல்லாத 1600 மொழிகளுக்காக ஜெபித்து ஆவன செய்வது நம் ஒவ்வொருவருக்கும் காலம் தரும் அழைப்பு!

## 17. *வேத வியாக்கியானங்களைப் படிக்கலாமா?*

மேய்ப்பர்களும் போதகர்களும் நமக்குத் தேவையா என்று யாரும் கேட்பதில்லை. ஏனெனில் இவர்கள் நமது வளர்ச்சிக்கும் பாதுகாப்புக் காகவும் தேவன்தாமே தந்த ஊழியரென்று நாம் அறிந்திருக்கிறோம் (எபே 4:11-16). இவ்வூழியர் பேசுவதைக் கேட்கலாமென்றால் அவர் கள் எழுதுவதை வாசிக்கக்கூடாதோ? மட்டுமல்ல, தேவன் தமது இன் றைய ஊழியர் மூலம் நம்மோடு பேசக்கூடுமானால், தமது அன்றைய ஊழியர் மூலம் பேசமுடியாதோ? ஊழியப்பளு மிகுந்திருந்த தங்கள் காலத்திலும் நேரமெடுத்து தேவ வசன விளக்கவுரைகளை (Commentaries) நமக்கு எழுதிவைத்துள்ள வேதப் பண்டிதர்களுக் காகத் தேவனைத் துதிப்போம். அவைகளை நாம் பயன்படுத்தத் தவறினால் நமக்குத்தான் பேரிழப்பு.

பழைய ஏற்பாட்டு வேதம் சீடர்களுக்கு நன்கு தெரிந்திருந்தும், கிறிஸ்து அதை அவர்களுக்கு விளக்கிச் சொல்லும்வரை அது அவர் களுக்குப் புரியவில்லை (லூக் 24:25-27). பாலைவனச் சாலை வழியே இரதத்தில் பயணமாகிக்கொண்டிருந்த வேளையிலும் வாசிக் குமளவு அந்த எத்தியோப்பிய மந்திரி விவிலியத்தில் விருப்பங் கொண்டிருந்தான். ஆனாலும், ''ஒருவன் எனக்கு விளக்காவிட்டால் அது எனக்கு எப்படிப் புரியும்?'' என்பதே பிலிப்புவிடம் அவன் கேட்ட கேள்வி (அப் 8:26-35).

‘‘என்னால் பிரசங்கிக்கப்பட்ட சுவிசேஷம் மனிதருடைய யோசனையின்படியானதல்ல... நான் அதை ஒரு மனிதனால் பெற்றதுமில்லை, மனிதனால் கற்றதுமில்லை, இயேசு கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தினார்’’ என்று கலாத்திய விசுவாசிகளுக்குப் பவுல் எழுதினான் (கலா 1:11,12). இவ்வசனத்தை மேற்கோள் காட்டி விசுவாசிகள் சில வேளைகளில் வேத விளக்கவுரைகளையும் ஆராய்ச்சி நூல்களையும் பயன்படுத்த மறுக்கின்றனர். ஆனால், அந்தக் கலாத்தியர் யாரிடமிருந்து தேவ செய்தியைப் பெற்றனர் தெரியுமா? பவுல் எனப்படும் ஒரு மனிதனிடமிருந்துதானே! (வச 11). தேவ கிருபையின் சுவிசேஷத்தை யூதருக்கும் புறவினத்தாருக்கும் ஒன்றுபோல் பிரசங்கிக்கும்படி தேவன் பவுலைப் பிரத்யேகமாகத் தெரிந்தெடுத்து அவனுக்கு முக்கியமான வெளிப்பாட்டைத் தந்தார். எல்லாருக்கும் இவ்விதத் தனிப்பட்ட, நேரடி வெளிப்பாடு தரப்படுவதில்லை. தன்னிடம் கற்றதையே மற்றவர்களுக்குத் தலைமுறை தலைமுறையாய்க் கடத்தும்படித் தீமோத்தேயுவுக்குப் பவுல் கட்டளையிட்டான் (2 தீமோ 2:2).

தவறாக மேற்கோள் காட்டப்படும் இன்னொரு வசனம் 1 யோவான் 2:27, ‘‘ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டியதில்லை.’’ ஆனால், 26ஆம் வசனத்தை நோக்குங்கால் நல்ல போதகர்களைக் குறித்தல்ல, வஞ்சிக்கிற போதகர்களைக் குறித்தே அப்போஸ்தலன் இங்கு எழுதுகிறான் என்பது தெளிவாகிறது.

தாங்கள் பிரசங்கிப்பதும் போதிப்பதும் யாவுமே தங்கள் சொந்த சரக்கு என மக்கள் எண்ணும் வகையில் சில சபை மேய்ப்பர்களும் போதகர்களும் பேசிவிடுகின்றனர். இது சுத்த மாய்மாலம். ‘‘மற்றவர்கள் பிரயாசப்பட்டார்கள், அவர்களது பிரயாசத்தின் பலனை நீங்கள் பெற்றீர்கள்’’ (யோ 4:38ஆ). நாம் பயன்படுத்தும் விளக்கவுரைகள், ஆராய்ச்சி நூல்களைப்பற்றித் தயக்கமின்றி நமது சபையினருக்கு நாம் சொல்லவேண்டும். காலம் போற்றும் உதவி நூல்களை அவர்களுக்கு அறிமுகம் செய்து அவர்களும் பலமுள்ளவர்களாக வளர உதவிசெய்யவேண்டும். தன்னைவிடத் தனது மகன் அறிவிலும் வளர்த்தியிலும் கூடிவிட்டானென்று உண்மையான தகப்பன் எவனும் அச்சங்கொள்ளுவானா? பள்ளி மாணவன் பெரும்பாலும் வகுப்பறையில் ஆசிரியர் கற்றுக்கொடுப்பதையே சார்ந்திருப்பான். கல்லூரிக்கு



வரும்போதோ அவன் பல மணிநேரங்கள் நூலகத்தில் ஆராய்ச்சிப் புத்தகங்களை வாசிப்பதில் செலவிட வேண்டுமல்லவா?

*Matthew Henry, Jamieson-Fausset-Brown, Adam Clarke* ஆகியோரது விளக்கவுரைகள் மிகச் சிறந்தவை. கூடுதல் ஆராய்ச்சித் தகவல்களை உள்ளடக்கிய நவீன கால விளக்கவுரைகள் பலவுமுண்டு. விளக்கவுரைகள் பெரும்பாலானவை பெந்தெகொஸ்தேயல்லாத போதகர்கள் எழுதியவையே. தலைமுறை தலைமுறையாய் ஆசீர்வாதமாயிருக்கும் இவ்வித எழுத்து ஊழியத்திற்குத் தங்களை அர்ப்பணிக்கப் பெந்தெகொஸ்தே பிரசங்கிமாரும் போதகர்களும் இப்பொழுதுதான் விழித்திருக்கிறார்கள். வேத ஆராய்ச்சி நூல்களைத் தெரிந்தெடுப்பதற்கான ஆலோசனைகளடங்கிய *Unless Someone Guides Me...* என்று ஆங்கிலத்திலுள்ள எனது சிறிய நூலை வாங்கி வாசியுங்கள்.

விளக்கவுரைகள் வைத்திருப்போரும் அதைக் கிரமமாகப் பயன்படுத்துவதில்லை என்பது இன்னொரு துக்கமான காரியம். வேதத்தை நீங்கள் தனித்துத் தியானிப்பதையடுத்து, தினமும் உங்கள் வியாக்கியானப் புத்தகத்தில் இரண்டு அல்லது மூன்று பக்கங்கள் முதலிலிருந்து வாசிக்கும்படி உங்களுக்கு ஆலோசனை கூறுகிறேன். அவ்விதம் செய்வது சத்தியம் வெகுவாய்ப் புரட்டப்படும் இந்நாட்களில் உங்கள் வசன அறிவையும் பிடிப்பையும் பலப்படுத்தும்.

## 18. வேத வசன விளக்கங்கள் வேறுபடுவதேன்?

வேதத்திலுள்ள ஒரே வசனப் பகுதிக்கு இரண்டு பிரசங்கிமார் வெவ்வேறு விளக்கங்களைக் கொடுக்கும்போது ஒரே வசனத்திற்கு இரு அர்த்தங்கள் உண்டா அல்லது இதில் எது சரி என்று சராசரிக் கிறிஸ்தவர்களுக்குக் குழப்பமுண்டாகிறது. விளக்கங்களில் ஏதோ சிறு வித்தியாசங்கள் இருந்தால் பரவாயில்லை; ஆனால் ஒன்றுக்கொன்று முரண்பாடாயிருக்குமானால் எளிய மனத்தோருக்கு ஒன்றும் புரிவதில்லை. விளக்கங்களின் வேறுபாட்டிற்கு இதோ சில காரணங்கள்—

சத்திய வேதம் மிகப் புராதனமான புத்தகம். அதின் முதல் ஐந்து புத்தகங்கள் கி.மு. 1400இலும் கடைசிப் புத்தகம் கி.பி. 90இலும் எழுதப்பட்டன. அப்படியானால், இன்றையக் கணக்கில், சில புத்தகங் கள் 3400 ஆண்டுகட்கு முன்னரும் கடைசிப் புத்தகம் 1900 ஆண்டு கட்கு முன்னரும் எழுதப்பட்டிருக்கின்றன. அவை எழுதப்பட்ட காலத் திற்கும் விளக்கப்படும் இன்றைக்கும் இடைப்பட்டது ஏறத்தாழ மூன்றாயிரமாண்டுகள்! இந்த பூகோள, மொழிநடை மற்றும் கலாச்சார ரீதிகளிலுள்ள இடைவெளியானது வசன வியாக்கியானத் தைக் கடினமாக்குகிறது. இந்த இடைவெளிகளைக் கவனியாது கொடுக்கப்படும் விளக்கங்கள் நம்மைத் தவறாகவே நடத்தும்.

சத்திய வேதம் வாக்குத்தத்தங்களின் புத்தகம். ஆனால் எல்லா வாக்குகளையும் எழுத்தின்படி நாம் இன்று உரிமைபாராட்ட முடியாது. □ இஸ்ரவேல் மக்களுக்காகவே கொடுக்கப்பட்ட தேசிய வாக்குகள் உண்டு. அவைகளில் பெரும்பாலானவை உடல் மற்றும் பொருளா தார ஆசீர்வாதங்களை அடுத்தவை (உ-ம்: உபா 28:1-14). ஆனால் புதிய உடன்படிக்கையின்கீழ் வாக்களிக்கப்பட்ட ஆசீர்வாதங்களோ பிரதானமாக ஆன்மீகமானவை (எபே 1:3). □ அப்படியே, மேசியா வானவருக்கே உரிய வாக்குகளை நாம் யாவரும் இன்று உரிமை பாராட்ட முடியாது. எடுத்துக்காட்டாக, சங்கீதம் 34:20, ''அவனுடைய எலும்புகளையெல்லாம் காப்பாற்றுகிறார்; அவைகளில் ஒன்றும் முறிக்கப்படுவதில்லை'' (யோ 19:36). ஆனால் இயேசுவின் நேரடி ஊழியத்தின் மூலம் இரட்சிக்கப்பட்ட கள்ளனின் எலும்புகளும் முறிக் கப்பட்டனவே! (வச 32). தூதர்கள் நம்மைக் காக்கும்படி ஜெபிக் கலாம்; ஆனால் நமக்கு ஒருபோதும் எலும்பு முறிவு ஏற்படாது என்று உத்திரவாதமாய்க் கூறமுடியாது. □ யுகங்களைச் சார்ந்த வாக்குத் தத்தங்களையும் கவனமாய்க் கையாளவேண்டும். இன்று ஒரு சிங்க மும் வைக்கோல் தின்னாது; சிறு குழந்தை எதுவும் பாம்புப் புற்றில் விளையாட முடியாது! (ஏசா 11:7,8). □ தனிப்பட்டவர்களுக்குக் குறிப்பட்ட சூழல்களில் கொடுக்கப்பட்ட வாக்குகளையும் பொது வாக்கிவிட முடியாது. ஆபிரகாமுக்கு ஆண்டவர் வாக்களித்ததுபோல் நம்மைச் சபிக்கிறவர்களை அவர் சபிக்க எதிர்பார்க்கக்கூடாது (ஆதி 12:3). நம்மைச் சபிக்கிறவர்களை நாம் ஆசீர்வதிக்கத்தான் வேண்டும் (மத் 5:44).



சத்திய வேதம் ஒரு கடினமான புத்தகம். அது தெய்வீக, அதே வேளையில் மானிட நூலாயிருப்பதால் அதிலுள்ள அநேக பகுதிகளை எளிதில் வியாக்கியானிக்க முடியாது. நமது அறிவும் குறைவுள்ளது. கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின்போதுதான் நாம் யாவற்றையும் அறிந்துகொள்ளவேண்டியபடி அறிந்துகொள்வோம் (1 கொரி 13:9-12). அநேகப் பிரசங்கிமாரும் மக்களும் இவ்வுண்மையை ஒத்துக் கொண்டதாய்த் தெரியவில்லை. எல்லாம் தனக்குத் தெரியுமென ஒரு காலத்தில் நினைத்திருந்த பேதுரு முதிர்ச்சியடைந்தபோதோ, ''நமக்குப் பிரியமான சகோதரனாகிய பவுல் தனக்கு அருளப்பட்ட ஞானத்தினாலே... எல்லா நிருபங்களிலும்... பேசியிருக்கிறான்; அவன் சொன்னவைகளில் சில காரியங்கள் அறிகிறதற்கு அரிதாயிருக்கின் றன; கல்லாதவர்களும் உறுதியில்லாதவர்களும் மற்ற வேத வாக்கி யங்களைப் புரட்டுகிறதுபோலத் தங்களுக்குக் கேடு வரத்தக்கதாக இவைகளையும் புரட்டுகிறார்கள்'' என்று அறிக்கையிட்டான் (2 பேது 3:15,16). பேதுரு முறைப்படி படியாதவனும் பயிற்சி பெறாதவனு மாயிருந்தாலும் வசனத்தைப் பிரசங்கிக்கிறவர்களும் போதிக்கிறவர் களும் கிரமமாய் அதைக் கற்று அதில் உறுதியாயிருக்கிறவர்களா யிருக்கவேண்டுமென வற்புறுத்துகிறான். சரியான அமைப்புகளுக் குட்படாத பிரசங்கிமார் பலர் இறையியல் கல்லூரியில் படித்ததோ, கிரமமாய்ச் சொந்த முயற்சியில் படிப்பதோ கிடையாது. எனவேதான் பிரசங்க பீடங்களில் இத்தனை குழப்பம். பிரசங்க பீடத்திற்கு வந்த பிறகு தோன்றியபடி பேசுவது, கடினமாய் உழைத்துப் படித்து ஆயத்தம் செய்து பிரசங்கிப்பதைவிட உன்னதமானதென்ற வஞ்சகமும் இன்று தலைவிரித்தாடுகிறது. ஆராய்ச்சி நூல்கள் எதையும் தாங்கள் பயன் படுத்துவதில்லை; நேரே ஆண்டவரே தங்களுக்கு எல்லாவற்றையும் கொடுத்துவிடுகிறாரென்று வறட்டுத் தம்பட்டம் அடித்துக்கொள்ளும் பிரசங்கிமாருமுண்டு. பவுலுக்குத்தான் யாவும் நேரடி வெளிப்பாடாய் வந்தது; தீமோத்தேயுவும் தீத்துவுமோ பவுலிடமிருந்துதான் கற்று மற்றவர்களுக்குக் கடத்தவேண்டும் (கலா 1:12; 2 தீமோ 2:2).

கடினமான வேதப் பகுதிகளுக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட உதவி களை நாடி விளக்கம் பெற்றுக்கொள்ள தேவ மக்களை அறிவுறுத்து கிறேன். ''அப்போஸ்தலர்கள்'' வேதத்தை முன்னோடித் தரிசனத்துடன் விளக்குவர். ''தீர்க்கதரிசிகள்'' அதைத் தேவனது இதய பாரத்துடன் வியாக்கியானிப்பர். ''சுவிசேஷகர்கள்'' அதின் மூலம் கடவுளின்

சமாதானத்தையும் ஆறுதலையும் எடுத்துக் கூறுவர். ''மேய்ப்பர்கள்'' பரிசுத்தவான்களின் வளர்ச்சியை மனதிற்கொண்டு வேதத்தை விளக்குவர். ''போதகர்கள்'' தேவ மக்கள் தேவ சத்தியங்களை சமநிலையில் புரிந்துகொள்ளும்படி வசனத்தை வியாக்கியானிப்பர். எந்தவொரு தனி உள்ளூர்ச் சபையிலும் இந்த ஐவகை ஊழிய வரங்களும் இருப்பதரிது (எபே 4:11). எனவே உள்ளூர்ச் சபையொன்றில் வைராக்கியமாயிருப்பது நம்மை வீட்டுக்குள்ளிருக்கும் செடிகளாக்கிவிடக்கூடாது. கனிதர வேண்டுமானால் சூரியவொளியும் வெளிக்காற்றும் அவசியம்!

## 19. பழைய ஏற்பாடா, புதிய ஏற்பாடா?

இரு ஏற்பாடுகளும் தேவனது இரு உதடுகளாம். பழையதில் புதியது மறைந்துள்ளது; புதியதில் பழையது மலர்ந்துள்ளது. ஒன்றில்லாது அடுத்ததைப் புரிந்துகொள்ள முடியாது.

ஆனால் இரு ஏற்பாடுகளுக்குமிடையேயுள்ள வேறுபாட்டைப் புரிந்திருத்தல் அவசியம். பழையதில் நிழல்; புதியதிலோ பொருள் (எபி 10:1). பழையது எழுத்து; புதியதோ ஆவிக்குரியது (2 கொரி 3:6; ரோ 7:6). பழையதில் பிரமாணமானது கற்பலகைகளில் எழுதப்பட்டிருந்தது; ஆனால் இப்போது தேவன் அதை நமது சதையான இருதயங்களில் எழுதுகிறார் (எரே 31:31-33; எபி 8:8-10; 2 கொரி 3:3). பிரமாணத்திலுள்ள சடங்குகளுக்கடுத்த காரியங்கள் புதிய ஏற்பாட்டில் ஆவிக்குரிய அர்த்தம் பெறுகின்றன. எடுத்துக்காட்டுகள்: இங்கும் பின்பு நித்தியத்திலும் கிறிஸ்து தமது மக்களுக்குத் தரும் இளைப்பாறுதலை ஓய்வுநாள் குறிப்பிடுகிறது (மத் 11:28; எபி 4:4-10). ''விலக்கப்பட்ட'' ஆகாரத்தையும் தேவன் பேதுருவைப் புசிக்கச் சொன்னது தாம் எவ்விதம் புறவினத்தாரையும் பரிசுத்தப்படுத்த முடியும் என்பதற்கு அடையாளம் (அப் 10:10-16,44,45). பழைய ஏற்பாட்டு ஆலயம் புதியதில் தேவ மக்களையும் அவர்கள் உடல்களையும் குறிக்கும் (எபே 2:19-22; 1 கொரி 6:19). புதிய உடன்படிக்கை ''மேலான'' உடன்படிக்கையாம் (எபி 7:22; 8:6).



நாம் இன்று பிரமாணத்திற்கல்ல, கிருபைக்குக் கீழிருக்கிறோம், அதற்காய்த் தேவனைத் துதிப்போம் (ரோ 6:14). ''மறுபடி அடிமைத்தனத்தின் நுகத்துக்குட்படாமல்... சுயாதீன நிலையில்'' நிலைகொண்டிருப்போம் (கலா 5:1). பிரமாணத்தினால் நீதிமான்களாக்கப்பட விரும்புகிறவர்கள் ஏற்கனவே கிருபையிலிருந்து விழுந்துவிட்டனர் (வச 4). பிரமாணமும் கிருபையும் இணைந்திருக்கமுடியாது. இஸ்மவேலும் ஈசாக்கும் சேர்ந்து குடியிருக்க முடியாது. பழைய துணியைப் புதியதோடு சேர்த்துத் தைக்கக்கூடாது. புது ரசத்தைப் பழந்துருத்திகளில் வைக்கமுடியாது (மத் 9:17).

இப்படிச் சொல்வதால், இன்று நமக்குப் பழைய ஏற்பாடே தேவையில்லை என்று பொருளல்ல. பழைய ஏற்பாட்டில் பிரமாணம் தவிர்த்து, தீர்க்கதரிசனம், சரித்திரம், ஞான வசனம் எல்லாம் உண்டு. ''இவைகளெல்லாம் உலகத்தின் முடிவு காலத்திலுள்ள நமக்கு எச்சரிப்புண்டாகும்படி எழுதப்பட்டிருக்கின்றன'' (1 கொரி 10:11). பழைய ஏற்பாட்டிலுள்ள யாவற்றையும் கிறிஸ்தவர்கள் கவனமாகப் படிக்கவேண்டும்; ஆனால் அதற்குரிய விளக்கத்தைப் புதிய ஏற்பாட்டு வெளிச்சத்தில்தான் கொடுக்கவேண்டும். முழு வேதத்திற்காய்த் தேவனைத் துதிப்போம்!

## 20. சனிக்கிழமையா, ஞாயிற்றுக்கிழமையா?

படைப்பை முடித்ததும் தேவன் ஏழாம் நாளில் ஓய்ந்திருந்து அதைப் பரிசுத்தமாக்கினார் (ஆதி 2:2,3). ஆபிரகாமோ, மோசேக்குமுன் எந்தக் கோத்திரப் பிதாவோ ஓய்வுநாள் ஆசரித்ததாகச் சொல்லப்படவில்லை. அவர்கள் காலங்களில் அவ்விதக் கட்டளையேதுமில்லை. ஆனால் தேவன் இதைப் பத்துக்கட்டளைகளில் சேர்த்தார் (யாத் 20:8-11). ஓய்வுநாளை ஆசரிக்கவேண்டிய முறை நியாயப்பிரமாணத்தில் கொடுக்கப்பட்டுள்ளது (யாத் 23:10-13). இயேசு ''நியாயப்பிரமாணத்தின் குமாரனாய்'' வந்ததால் ஓய்வுநாளை ஆசரித்தார் (மாற் 6:1,2). இது ஏழாம் நாளான சனிக்கிழமைதான்.

புதிய உடன்படிக்கையானது கிறிஸ்துவின் மரணத்திலிருந்து துவங்குகிறது (மத் 26:28). அவரது மரணமானது நியாயப்பிரமாணத்

தின் அனைத்து சடங்காச்சாரங்களிலிருந்தும் நம்மை விடுதலையாக்கிற்று. ''நமக்கு எதிரிடையாகவும் கட்டளைகளால் நமக்கு விரோதமாகவும் இருந்த கையெழுத்தைக் குலைத்து, அதை நடுவிலிராதபடி எடுத்து, சிலுவையின்மேல் ஆணியடித்தார்'' (கொலோ 2:14). கிறிஸ்தவனுக்கு இன்று ஓய்வுநாள் பிரமாணம் கிடையாது. ''ஆகையால், போஜனத்தையும் பானத்தையும் குறித்தாவது, பண்டிகை நாளையும் மாதப்பிறப்பையும் ஓய்வு நாட்களையும் குறித்தாவது ஒருவனும் உங்களைக் குற்றப்படுத்தாதிருப்பானாக. அவைகள் வருங்காரியங்களுக்கு நிழலாயிருக்கின்றன; அவைகளின் பொருள் கிறிஸ்துவைப்பற்றினது'' (கொலோ 2:16,17).

அப்படியானால் இன்றையச் சட்டம் என்ன? விடை மிகத்தெளிவாக ரோமர் 14:5,6இல் உள்ளது: ''ஒருவன் ஒரு நாளை மற்றொரு நாளிலும் விசேஷமாக எண்ணுகிறான்; வேறொருவன் எல்லா நாட்களையும் சரியாக (சமமாக) எண்ணுகிறான்; அவனவன் தன்தன் மனதில் முழுநிச்சயத்தை உடையவனாயிருக்கக்கடவன்.'' எனவே இதில் முழுச் சுதந்திரம் தரப்படுகிறது. அவரவர் தங்கள் தங்கள் விருப்பம் போல் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆதிச்சபையினர் வாரத்தின் முதல் நாள் கூடிவந்தார்கள் என்று பல இடங்களில் வாசிக்கிறோம் (அப் 20:7; 1 கொரி 16:1,2). கர்த்தர் வாரத்தின் முதல்நாளில் உயிர்த்தெழுந்தது இதற்குக் காரணமாயிருக்கலாம். ஆனாலும் இதை ஓர் ஓய்வு நாளாக ஆசரிக்கக் ''கட்டளை'' இல்லை.

வழக்கமான வேலைகளிலிருந்து ஓய்வுபெற்றுப் புத்துணர்வு பெற வாரத்தில் ஒரு நாளைப் பிரித்துவைப்பது நல்லது. தேவனே ஓய்வெடுத்தாரே! இப்பழக்கம் உடலுக்கும், மனதுக்கும், குடும்பத்திற்கும் நன்மையளிக்கிறது. (அரபு நாடுகளில் வாராந்திர விடுமுறை வெள்ளிக்கிழமை). ஓய்வுக்காய்ப் பிரித்துவைக்கும் இந்நாளை ஆராதனை, சபை ஐக்கியம், ஜெபம், வேத ஆராய்ச்சி, தற்பரிசோதனை போன்றவற்றிற்காய்ப் பயன்படுத்துவது பேராசீர்வாதம். வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் இவ்வுலகில் இது நமக்கு எவ்வளவாய்த் தேவை! நன்மை செய்யவும் ஜீவனைக் காக்கவும், கழுதையையோ எருதையோ குழியிலிருந்து தூக்கவும் இந்நாளைப் பயன்படுத்தலாம்



என்று பிரமாணக் காலத்திலும் இயேசு போதித்தார் (மாற் 3:4; லூக் 14:5). அப்படியானால் தீவிர நற்செய்திப்பணிக்கு இது எவ்வளவு பொருத்தமான நாள்!

தேவனது ஏழாம் நாள் மனிதனது முதல் நாள். தேவன் வேலை செய்துவிட்டு ஓய்ந்தார்; ஆதாமோ ஓய்வெடுத்துவிட்டு வேலை துவங்கினான். சனிக்கிழமையா, ஞாயிற்றுக்கிழமையா என்பதல்ல, ''கர்த்தரில் மகிழ்ந்திருக்க'' ஒரு நாளைப் பிரித்து வைக்க விரும்புகிறோமா இல்லையா என்பதே காரியம் (ஏசா 58:13,14). ''அவனவன் தன்தன் மனதில் முழு நிச்சயத்தை உடையவனாயிருக்கக்கடவன்!''

## 21. குழந்தை ஞானஸ்நானம் வேதத்திற்குப் புறம்பானதா?

கிறிஸ்தவர்களுக்குள் பிரிவினையுண்டாக்கி அவர்களை ஒருவருக்கொருவர் எதிரிகளாக்கிய காரியங்களில் ஒன்று ஞானஸ்நானமாகும். குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கலாமா கூடாதா என்பது தான் பிரச்னை. இக்கேள்விக்குத் திருப்திகரமான பதிலைக் கண்டுபிடிக்க ஆர்வமுள்ள ஒருவர் கிறிஸ்தவப் புத்தகக் கடையொன்றில் தகுந்த புத்தகங்களைத் தேடிக்கொண்டிருந்தாராம். *குழந்தை ஞானஸ்நானத்தைக் குறித்து வேதம் போதிப்பது என்ன?* என்றவொரு நூலைக் கண்டதும் பரபரப்படைந்த அவர் புத்தகத்தைத் திறந்துகூட பார்க்காமல் வீட்டிற்கு வாங்கிச்சென்றார். ஆனால் அப்புத்தகத்தின் பக்கங்கள் அச்சு எதுவுமில்லாமல் வெறுமையாயிருந்ததைக் கண்ட அவர் இப்படி ஏமாற்றப்பட்டுவிட்டோமே என்ற கோபத்துடன் சென்று கடைக்காரரைத் திட்டினார். கடைக்காரரோ, ''ஆம் ஐயா, குழந்தை ஞானஸ்நானத்தைக் குறித்து வேதம் ஒன்றுமே போதிக்கவில்லை'' என்று அமைதியாய்ப் பதிலளித்தார்!

யூதர்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்காமல் ஆண் பிள்ளைகளுக்கு விருத்தசேதனம் மட்டுமே பண்ணிவந்ததால் நமது கேள்விக்கு நேரடியான பதிலை வேதத்தில் கண்டுபிடிக்க முடியாது. குழந்தை ஞானஸ்நானமானது கிறிஸ்தவ விசுவாசிகளின் பிள்ளைகளைக் கிறிஸ்தவர்களாக்க பிற்காலங்களில் சபையில்

சேர்க்கப்பட்ட ஒரு சடங்காகும். ஆனால் வேதமோ, குழந்தைகளின் பெற்றோர் கிறிஸ்தவராயிருந்தாலும் இல்லாவிட்டாலும் ''பரலோக ராஜ்யம் அவர்களுடையது'' என்றே போதிக்கிறது (மத் 19:14). கிறிஸ்துவின் சீடர்களால்கூட இச்சத்தியத்தைப் புரிந்துகொள்ள முடியாதிருந்தது பரிதாபம் (வச 13). ''பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன்'' (சங் 127:4). பெற்றோர் யாராயிருந்தாலும் இக்கூற்று எல்லாப் பிள்ளைகளுக்கும் உண்மையானது. நன்மை தீமையறிந்து கணக்கொப்புவிக்கும் வயது வருமுன் அவர்கள் இறந்தால் பரலோகம் சென்றுவிடுவர். அவர்கள் சார்பில் தூதர்கள் எப்பொழுதும் பிதாவானவரைப் பரலோகத்தில் ஆரா தித்துக்கொண்டிருக்கிறார்களே (மத் 18:10). ''நான் துர்க்குணத்தில் உருவானேன்; என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்பந்தரித்தாள்'' என்று தாவீது அறிக்கையிட்டபோது மனிதனின் விழுந்த நிலையைக் குறிப்பிட்டான், அவ்வளவுதான் (சங் 51:5).

தந்தையரின் பாவங்களுக்காய்ப் பிள்ளைகளையும் தண்டிப் பேனென்று பழைய உடன்படிக்கையில் தேவன் சொல்லியிருந்தார் (யாத் 20:5). அதற்கேற்றாற்போல், ''பிதாக்கள் திராட்சைக்காய் களைத் தின்றார்கள்; பிள்ளைகளின் பற்கள் கூசிப்போயின'' என்றொரு யூதப் பழமொழியும் சொல்லப்பட்டு வந்தது (எசேக் 18:1). ஆனால் இத்தத்துவத்தைத் தேவன் புதிய உடன்படிக்கையில் மாற்றிவிட்டார். ''இனி இந்தப் பழமொழியைச் சொல்வதில்லை'' என்றார் அவர் (வச 3). ஒவ்வொருவனும் தன் சொந்தப் பாவங்களுக்கு மட்டுமே பொறுப்பு (வச 4; எரே 31:29-31). பழைய ஏற்பாட்டில் தேவன் பிரதானமாக ''தேசீய அளவில்'' அல்லது ''சமுதாயத்தில் மொத்த மாகப்'' பிரதிபலிப்பையும் கீழ்ப்படிதலையும் எதிர்பார்த்தார். புதிய உடன்படிக்கையிலோ அது ஒவ்வொரு நபரிடமிருந்தும் ''தனிப் பட்டு'' இருக்கவேண்டுமென விரும்புகிறார். நம்மில் ''ஒவ்வொரு வனும்'' ''தன்னைக் குறித்துத்'' தேவனுக்குக் கணக்கொப்புவிப்பான் (ரோ 14:12). ஒரு சபைக்கு எழுதும்போதுகூட கிறிஸ்து அங்குள்ள நபர்களின் ''தனிப்பட்ட'' பதில்களையே எதிர்பார்த்தார் (வெளி 3:20).

பிள்ளைகளைக் கர்த்தருக்கேற்ற பயத்தில் வளர்க்கவேண்டு மென்பது மட்டுமே ஆண்டவர் பெற்றோருக்குக் கொடுத்துள்ள கட் டளை (எபே 6:4). பெற்றோரின் பயபக்தி பிள்ளைகளைப் பாதிப்பதை



அளவிடமுடியாது. லோவிசாளின் விசுவாசம் அவளது மகள் ஐனிக்கேயாளிடம் புகுந்தது; ஐனிக்கேயாளின் விசுவாசம் அவளது மகன் தீமோத்தேயுவைப் பாதித்தது. சிறுவயது முதல் அவன் வேத எழுத்துக்களை அறிந்திருந்தது அவன் திருப்பணியில் நுழைகையில் எவ்வளவாய்க் கைகொடுத்தது! (2 தீமோ 1:5; 3:15).

விருத்தசேதனம் எனும் யூதப் பழக்கத்திற்கு இணையாகக் கிறிஸ்தவப் பெற்றோரும் தங்கள் பிள்ளைகள் தேவ ஊழியரால் ஆசீர் வதிக்கப்பட்டு அர்ப்பணிக்கப்பட திருச்சபைக்குக் கொண்டுவரலாம். தம்மிடம் கொண்டுவரப்பட்ட பிள்ளைகளை இயேசு அப்படித்தானே ஆசீர்வதித்தார்? ஆனால் ஞானஸ்நானமோ தனி நபர்கள் மனந் திரும்பிக் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட பின்னரே கொடுக்கப்படும் படி தள்ளிவைக்கப்படவேண்டும். இயேசுவும் பவுலும் பாலகராய் விருத்தசேதனம்பண்ணப்பட்டவர்கள்; அவர்கள் ஞானஸ்நானம் பண் ணப்பட்டது பின்னரே (லூக் 2:21; 3:21-23; பிலி 3:5; அப் 9:18). வேதத்தில் திருமுழுக்கு என்பது எப்பொழுதுமே பாவ அறிக்கை, மனந்திரும்புதல், கிறிஸ்துமேல் விசுவாசம் ஆகியவற்றிற்குப் ''பின்னரே'' வருகிறது (மத் 3:6; அப் 2:38; மாற் 16:16; எபி 6:1,2). தண்ணீர் ஞானஸ்நானமானது மரணத்திற்கும் அடக்கத்திற்கும் அடை யாளமாயிருப்பதால், கிறிஸ்துவோடு தானும் மரித்து அடக்கம்பண் ணப்பட்டதாகத் தனிப்பட்ட முறையில் அடையாளப்படுத்திக்கொள் ளாத எவருக்கும் ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாது (ரோ 6:1-11).

குழந்தைகளை ஆசீர்வதிப்பதற்காக அவர்கள்மீது கொஞ்சம் தண் ணீர் தெளித்து அவர்களுக்குப் பெயர் வைப்பது தவறில்லாமலிருக் கலாம். ஆனால் இதை ஞானஸ்நானம் என்றழைப்பது வேதத்திற்குப் புறம்பான பழக்கமாகிப் பின்னர் நபர்களைக் குழப்பிவிடுகிறது. ஒரு பாரம்பரியம் எவ்வளவு பழமையானதாயிருந்தாலும், திருவசனத்தின் முடிவான அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்காக, அதை விட்டுவிட நாம் தயங்கக்கூடாது. இல்லையேல் நமது பாரம்பரியங்களினால் தேவனுடைய வார்த்தையை அவமாக்கும் பாவத்தைச் செய்கிறவர் களாவோம் (மாற் 7:13). அறியாமையின் காலங்களைத் தேவன் ''காணாதவர்போல்'' இருந்தார் (அப் 17:30). அக்காலங்களில் நாம் செய்தவற்றை அவர் ''அங்கீகரித்து''விட்டார் என்று நாம் நினைத்து விடக்கூடாது. குழந்தை ஞானஸ்நானம் கொடுப்பதை நிறுத்தி

விட்டால் அநேக சபைகளில் பெரும் பிரச்னை உண்டாகும். கட்டிடமே ஆடிவிடுவது போலிருக்கும். ஆனால் இதுதானே சீர்திருத்தம் என்பது? அசைக்கப்பட முடியாதவைகள் மட்டுமே நிலைத்திருக்கும்படி அசைக்கப்படக் கூடியவைகள் யாவும் அசைக்கப்படட்டும் (எபி 12:27).

''ஒரே கர்த்தர்'' என்று வேதம் கூறும்போது, அது அநேக கர்த்தர்கள் இருந்தாலும் வேதம் கூறும் கிறிஸ்துவை மட்டுமே குறிக்கிறது (1 கொரி 8:5). ''ஒரே விசுவாசம்'' என்று நாம் பேசும்போது, நாம் கிறிஸ்துவின் மேலுள்ள விசுவாசத்தை மட்டுமே குறிப்பிடுகிறோம்; மற்ற விசுவாசங்களெல்லாம் அகற்றப்படவேண்டும். ''ஒரே ஞானஸ்நானம்'' என்பதையும் இதே ரீதியில்தான் சிந்திக்கவேண்டும். ''ஒரே கர்த்தர்'' மீது தனி நபர் ஒருவர் ''ஒரே விசுவாசத்தை'' வைத்தபின் பெற்றுக்கொள்வதே ''ஒரே ஞானஸ்நானம்'' ஆகும் (எபே 4:5). குழந்தை ஞானஸ்நானம் நீக்கப்படும்வரை நமது சபைகளில் ஈசாக்குகளைவிட இஸ்மவேல்களே அதிகமாயிருப்பர்!

## 22. எந்த நாமத்தில் ஞானஸ்நானம்?

இதைப்பற்றிய குழப்பம் ஏராளம். இது அநேக விசுவாசிகளைப் பிரித்துவிட்டது துக்கமான காரியம். ஆனால் திறந்த மனதுடன் திருமறையைத் தியானித்தால் உபதேசம் தெளிவாயிருப்பதைக் காணலாம். ""'Â s o ¾® ©s o ¾® GÀ » õ ***அதிகாரமும்*** எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய், சகல இனத்தாரையும் சீடராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் ***நாமத்திலே*** ஞானஸ்நானம் கொடுத்து...'' என்றார் இயேசு (மத் 28:18,19). இயேசுவின் இந்த நேரடியான, தெளிவான போதனையிலிருந்து நாம் அறிவதென்னவென்றால், கிறிஸ்துவின் ''அதிகாரத்தின்படி'' பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் ''நாமத்தில்'' ஞானஸ்நானம் கொடுக்கப்படவேண்டும்.

அப்படியானால் நடபடிகள் புத்தகத்தில் அப்போஸ்தலர் திரித்துவத்தை ஞானஸ்நானம் கொடுக்கும்போது குறிப்பிட்டதாகத் தெரியவில்லையே, அதற்கு விளக்கமென்ன? (அப் 2:38; 10:48; 19:5). இந்தச் சம்பவங்களிலெல்லாம் அழுத்திக் கூறப்பட்டிருப்பது யோவானின் ஸ்நானத்திற்கும் அல்லது யூத ஸ்நானங்களுக்கும் கிறிஸ்தவ ஞானஸ்நானத்திற்குமுள்ள வேறுபாடுதான். எனவே புத்தக ஆக்கியோன் ஒவ்வொரு முறையும் திரித்துவ நாமத்தைக் குறிப்பிடத் தேவையில்லையெனக் கருதி எந்த ''அதிகாரத்தில்'' அவர்கள் திருமுழுக்கு பெற்றார்கள் என்பதை மட்டும் குறிப்பட்டுள்ளான். அப்போஸ்தலர் 19:1-5இலிருந்து இது தெளிவு. எபேசுவிலுள்ள சீடர் தாங்கள் பரிசுத்த ஆவி உண்டென்பதையே கேள்விப்படவில்லை என்று பவுலிடம் கூறினர். ''அப்படியானால் எந்த ஞானஸ்நானம் பெற்றீர்கள்?'' என்றான். வேறு வார்த்தையில் சொன்னால், ''பரிசுத்த ஆவியைக் குறித்துக் கேள்விப்படவில்லையென்று எப்படிச் சொல்லுகிறீர்கள்? ஞானஸ்நானம் கொடுக்கும்போது சொல்லப்பட்ட நாமத்தில் பரிசுத்த ஆவி குறிப்பிடப்பட்டிருப்பாரே?'' ஆம், அவர்கள் பெற்றிருந்ததோ யோவானின் ஸ்நானம். எனவே அவர்களுக்குக் கிறிஸ்தவ ஞானஸ்நானம் மத்தேயு 28:18,19இன்படி அடுத்து கொடுக்கப்பட்டது.

வேதம் தனக்குத்தானே முரண்படாது. வேத வியாக்கியானத்தின்போது நினைவிற்கொள்ளவேண்டிய முக்கியமானதொரு அடிப்படைத் தத்துவமிது.

திரித்துவ நாமத்தில் அல்லது இயேசுவின் நாமத்தில் மட்டும் ஞானஸ்நானம் கொடுக்கும் இரு வகுப்பினரிலும் நல்ல பரிசுத்தவான்கள் உண்டு. சத்தியம் ஒன்றே; அதன் விளக்கம்தான் வித்தியாசம். எனவே ஒரு பிரிவினர் அடுத்தவரைப் பழித்து திருமுழுக்கு பெற்றவரையே திரும்பவும் முழுக்காது, துலைந்துபோன ஆடுகளைத் தேடிப்போவது நல்லது!

## 23. பூரண சுவிசேஷம் என்றால் என்ன?

''நாங்கள் ஒரு பூரண சுவிசேஷ சபைக்குச் செல்லுகிறோம்.'' ''அவர் ஒரு பூரண சுவிசேஷ ஊழியர்.'' பெந்தெகொஸ்தேயினர் தங்கள் சபைப் பிரிவைக் குறிப்பிடவும் தங்கள் உபதேசத்தை விளக்க

வும் அடிக்கடி பயன்படுத்தும் வரிகள் இவை. பெந்தெகொஸ்தே யல்லாதோருக்கு அடுத்த வகுப்பினர் ''பூரண சுவிசேஷம்'' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்துவது பிடிக்காது. ''அப்படியானால் நாங் கள் *பாதி* சுவிசேஷத்தையா பிரசங்கிக்கிறோம்'' என வாதாடுவார்கள். வேதத்தின் வெளிச்சத்தில் இக்காரியத்தை அலசிப் பார்ப்போம்.

''பூரணம்... சுவிசேஷம்'' ஆகிய இரு பதங்கள் புதிய ஏற்பாட்டில் சேர்ந்து வருவது இரு தடவைதான். அவை அப்போஸ்தலன் பவுல் தனது ரோமர் நிருபத்தை முடிக்கும் இடத்தில் வருகின்றன. ''எருச லேம் துவக்கிச் சுற்றிலும் இல்லிரிக்கம் தேசம் வரைக்கும் கிறிஸ்து வின் *சுவிசேஷத்தைப் பூரணமாய்ப்* பிரசங்கித்திருக்கிறேன்... நான் உங்களிடத்தில் வரும்போது கிறிஸ்துவினுடைய *சுவிசேஷத்தின் சம்பூரணமான* ஆசீர்வாதத்தோடு வருவேனென்று அறிந்திருக்கிறேன்'' (ரோ 15:19,29). ரோம் நகர் விசுவாசிகளுக்குப் பவுல் இவ்விதம் எழுதியதின் பொருள் தனது பிரசங்கத்தில் ''தேவனுடைய முழு ஆலோசனையில்'' ஒன்றையும் அவன் விட்டு விடவில்லை என்பதே என்று மற்ற நிருபங்களில் அவன் எழுதியவைகளிலிருந்து நாம் அறிந்துகொள்ளுகிறோம் (அப் 20:27).

''Gospel'' என்பது ''Good Tidings,'' அதாவது ''நல்ல செய்தி,'' எனப் பொருள்படும் ஓர் anglo-saxon சொல்லாகும். முதல் கிறிஸ்து ஜெயந்தி நாளன்று மேய்ப்பருக்குத் தேவதூதர் கொடுத்த அறிவிப்பில் இது நேர்த்தியாய் விளங்குகிறது. சுவிசேஷமானது ''எல்லா மக்க ளுக்கும் மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் நற்செய்தி'' ஆகும் (லூக் 2:10). சுவிசேஷத்திற்கு இணையற்ற வரையறை அப்போஸ்தலன் பவுலினால் 1 கொரிந்தியர் 15:1-4இல் கொடுக்கப்பட்டுள்ளது. கர்த்த ரிடத்திலிருந்து அவன் அதை நேரடியாய்ப் பெற்றுக்கொண்டதாக அல்லது அடைந்ததாகக் கூறுகிறான் (வச 3). அவன் எழுதியது: ''நான் சுவிசேஷத்தை ஒரு மனிதனால் பெற்றதுமில்லை, மனிதனால் கற்றதுமில்லை; இயேசு கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத் தினார்'' (கலா 1:11,12). சுவிசேஷத்திற்கு அவன் தந்த வரையறை யைக் கவனியுங்கள்: ''கிறிஸ்துவானவர் வேத வாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, வேத வாக்கி யங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார்'' (1 கொரி 15:3,4). இதுதான் சுத்தாங்க சம்பூரண சுவிசேஷமாகும். இத்துடன் எதைக் கூட்டினாலும் குறைத்தாலும் அது கலப்படம்தான் (கலா 5:4).



பூரண சுவிசேஷ சபைகளென அழைக்கப்படுபவைகள் தங்கள் செய்தியில் முழுக்கு ஞானஸ்நானம், ஆவியின் அபிஷேகம் மற்றும் வரங்கள் ஆகியவற்றைச் சேர்த்துக்கொள்ளுகின்றன. மற்ற சபைகளோ மனந்திரும்புதல், விசுவாசம் அதோடு நிறுத்திவிடுகின்றனவென அவைகள் சுட்டிக்காட்டுகின்றன. ஆனால் எபிரெய நிருப ஆக்கி யோனின் கருத்துப்படி ''ஸ்நானங்கள்... கைகளை வைக்குதல்...'' போன்ற இவையெல்லாமே கிறிஸ்துவின் ''மூல'' அல்லது ''துவக்க'' உபதேசங்கள்தான் (எபி 6:1,2). வேறு வார்த்தைகளில் சொன்னால், திருமுழுக்கு, அபிஷேகம், வரங்கள் இவையெல்லாம் கிறிஸ்தவ வாழ்க்கையின் அரிச்சுவடிதான். கட்டிடமென்றால் அது அடித்தள மல்ல. ''பூரணராகும்படிக் கடந்துபோவோமாக!''

தங்களைப் பூரண சுவிசேஷப் பிரசங்கிகளென அழைத்துக்கொள் வோர் பொதுவாக சரீர சுகத்தைப் பற்றிப் பேசித் தங்கள் கூட்டங்களில் பிணியாளிகளுக்காய் ஜெபிப்பார்கள். துர்ப்பாக்கியமாக, அவர்களது பிரசங்கங்களில் பெரும்பாலும் சுவிசேஷத்தின் சாரம் குறைவாகவே இருக்கிறது. நேரத்தைப் பெருமளவில் கதைகள் சொல்லுவதிலும் தங்கள் அனுபவங்களை விவரிப்பதிலுமே செலவிட்டுவிடுகின்றனர். மாறாக, தங்களது பொதுக்கூட்டங்களில் வியாதிக்காரருக்காய் ஜெபிக் காத பில்லி கிரஹாம் போன்ற சுவிசேஷகர்களின் பிரசங்கங்களில் நற்செய்தியின் சாரம் நிறைவாயிருக்கும். ''சுகம் பெறுவது எப்படி'' என்பதல்ல, ''இரட்சிக்கப்படுவது எப்படி'' என்பதே பிரதானமாக சுவிசேஷமாகும் (மத் 1:21; அப் 16:31; ரோ 1:16; 10:9,10).

இயேசு கிறிஸ்துவே தேவனது சுவிசேஷமாம் (யோ 14:6). ''பூரண சுவிசேஷம்'' என்று சொல்லும்போது கிறிஸ்துவின் மூலம் நாம் பெறும் ஆசீர்வாதங்கள் அத்தனையையும் குறிப்பிடுகிறோமென்றால் இப் பதங்களைப் பயன்படுத்துவதில் தவறில்லை. சுவிசேஷத்திற்கு வேதம் பல பெயர்களைத் தந்துள்ளது. அது ''சமாதானத்தின் சுவிசேஷம்'' என அழைக்கப்படும்போது நாம் கிறிஸ்துவின் பிராயச்சித்த பலியை வலியுறுத்துகிறோம் (எபே 2:14-16; 6:15). ''கிருபையின் சுவிசே ஷம்'' எனப்படும்போது கிறிஸ்துவே இரட்சகர் என்பது சுட்டிக் காட்டப்படுகிறது (அப் 20:24; எபே 2:8). ''இராஜ்யத்தின் சுவிசே ஷம்'' எனப்படும்போது கிறிஸ்துவின் கர்த்தத்துவம் அல்லது ராஜரீகம் உயர்த்தப்படுகிறது (லூக் 8:1; ஏசா 52:7). இயேசு கிறிஸ்துவுக்கு

வெளியே ஆசீர்வாதம் ஒன்றும் கிடையாது (எபே 1:3). நமக்காய்க் கிறிஸ்து முடித்துவைத்துவிட்டதோடு ஆவியானவர்கூட எதையும் கூட்ட முடியாது. சத்திய ஆவியாகிய பரிசுத்த ஆவியானவர் நம்மை மேலும் மேலும் கிறிஸ்துவாகிய சத்தியத்திற்குள்தான் நடத்துவார். ''அவர் தம்முடைய சுயமாய்ப் பேசமாட்டார்.'' அவர் கிறிஸ்துவையே மகிமைப்படுத்துவார். அவர் கிறிஸ்துவினுடையதிலிருந்தே எடுத்து நமக்கு அறிவிப்பார் (யோ 16:13-15). இதைச் சரிவரப் புரிந்துகொள் ளத் தவறுவது ''பூரண'' சுவிசேஷம் எனும் பெயரில் ''வேறொரு'' சுவிசேஷத்திற்குள் நம்மை மாட்டிவிடும். கவனம்!

## 24. தசமபாகம் கட்டாயமா?

நன்றியில்லாத இதயத்தின் கேள்வியாகும் இது. தேவன் நம்மீது பொழிந்துள்ள நன்மைகளுக்கு, அவருக்கு நன்றியாகவும், மகிமை யாகவும் பத்திலொன்றுக்கும் குறைவாய்க் கொடுக்க முடியுமோ?

தசமபாகப் பிரமாணம் இல்லாதிருக்கையிலேயே ஆபிரகாம் தசமபாகம் கொடுத்தான் (ஆதி 14:20). நன்றியால் நிரம்பி தானாகவே அப்படிச் செய்தான். அப்படியே யாக்கோபும், ''தேவரீர் எனக்குத் தரும் எல்லாவற்றிலும் உமக்குத் தசமபாகம் செலுத்துவேன்'' என்று தானா கவே சொல்லிப் பொருத்தனைபண்ணிக்கொண்டான் (ஆதி 28:22).

இஸ்ரவேலர் ஓர் இராஜ்யமானபோது இத்தன்னார்வச் செயல் தேவ மக்களுக்குக் கடவுளது பிரமாணமானது. ''தேசத்தில் நிலத்தின் வித் திலும், விருட்சங்களின் கனியிலும், தசமபாகம் எல்லாம் கர்த்தருக்கு உரியது; அது கர்த்தருக்குப் பரிசுத்தமானது'' (லேவி 27:30).

வேதபாரகரும் பரிசேயரும் ''ஒற்தலாமிலும் வெந்தையத்திலும் சீரகத்திலும் தசமபாகம்'' கொடுத்துவிட்டு ''நீதியையும் இரக்கத்தை யும் விசுவாசத்தையும்'' விட்டுவிட்டார்கள். எனவே அன்பின் ஆவி யோடு தசமபாகம் செலுத்த இயேசு அவர்களுக்குப் போதித்தார் (மத் 23:23).



கிறிஸ்துவின் மரணத்திற்குப்பின்தான் புதிய உடன்படிக்கை அமுலுக்கு வருகிறது (மத் 26:28). அதில் தசமபாகத்தைக் குறித்த பிரமாணச் சட்டம் எதுவுமில்லை. புதிய உடன்படிக்கை ''மேலான'' உடன்படிக்கையானதால், கொடுப்பதைக் குறித்து ''மேலான'' முறைகள் போதிக்கப்பட்டிருக்கின்றன: உற்சாகமாய்க் கொடுத்தல் (2 கொரி 9:7), தாராளமாய்க் கொடுத்தல் (2 கொரி 8:2), தியாகமாய்க் கொடுத்தல் (2 கொரி 8:3). எனவே தசமபாகம் இன்று நமக்கு ஒரு துவக்கக்கட்டமாயிருக்கலாம்; ஆனால் அதில் வளரவேண்டும். நம்மை பாதிக்கும்வரை நாம் கொடுத்துக்கொண்டேயிருக்கவேண் டும்! நம்மைப் பாதிக்காத காணிக்கை பாத்திரமற்ற காணிக்கையாம் (2 சாமு 24:24).

தனக்கு இருந்த எல்லாவற்றையும் அந்த விதவை கொடுத்து விட்டாள். தான் சேர்த்துவைத்திருந்த எல்லாவற்றையும் மரியாள் கொட்டிவிட்டாள். இருவரையும் இயேசு எவ்வளவாய்ப் பாராட்டினார்! பத்திலொன்றிலிருந்து பத்தில் பத்துக்குச் செல்வது கிறிஸ்தவ வாழ் வின் வளர்ச்சியில் ஓர் அம்சமாகும் (2 கொரி 8:7).

பத்திலொன்றைக்கூட தேவனுக்குக் கொடாதவரைத் திருடர் எனத் திருமறை அழைக்கிறது (மல் 3:8).

(65ஆம் கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

## 25. விசுவாசிகள் மருந்து சாப்பிடக்கூடாதா?

விசுவாசிகள் மருந்து சாப்பிடக்கூடாதெனும் உபதேசம் திரு மறையில் எங்கும் கிடையாது; கொள்கை வெறியர் சிலர் எங்கோ உருவாக்கிய போதனையிது.

நல்ல மருந்துகள் பல மூலிகைகளிலிருந்து எடுக்கப்படுபவை. அவற்றை நமது ஆரோக்கியத்திற்கும் பலத்திற்குமென்று தந்தவர் தேவனே (ஆதி 1:29). தூதாயீம் பழத்தைச் சாப்பிட்டால் கருத் தரிக்கும் வாய்ப்பு கூடுமென நம்பப்பட்டுவந்ததால், ராகேல் லேயா ளிடம் அதைக் கேட்டாள் (ஆதி 30:14). எசேக்கியா அரசனின் பாவங் களை தேவன் மன்னித்து, வாழ்நாளைக் கூட்டுவதாக வாக்களித்த

பின்னரும், அவன் குணமடைய மருத்துவ உதவி கொடுக்கச் சொன்னது ஏசாயா தீர்க்கதரிசிதான் (ஏசா 38:5,17,21).

நோயுற்றோருக்குச் செய்யப்படும் மருத்துவப் பணியை இயேசு ஆமோதித்தார் (மத் 9:12). குற்றுயிராயிருந்தவனின் காயங்களில் நல்ல சமாரியன் எண்ணெயும் திராட்சரசமும் ஊற்றிக் கட்டுப்போட்டான் (லூக் 10:34). விசுவாசிகளுக்கும் ஊழியருக்கும் கனிவோடு மருத்துவ உதவி செய்ததால் அல்லவோ லூக்காவைப் ''பிரியமான'' வைத்தியன் என்றழைத்திருக்கவேண்டும்! (கொலோ 4:14). தீமோத்தேயுவின் தீராத வயிற்றுக்கோளாறுக்குக் கொஞ்சம் திராட்சரசம் பருகிக்கொள்ள பவுல் பக்குவம் சொன்னான் (1 தீமோ 5:23). யாக்கோபு 5:14இல் ''பூசி'' என்றிருப்பது பொதுவாக வியாதிக்காரர் உடலில் ஒரு சிகிச்சையாக எண்ணெய் தேய்ப்பது அல்லது தடவுவதைக் குறிக்கும். (aleipho என்ற மூல பதத்தின் பொருள் இதுவே). அதே வேளையில் எண்ணெயானது தேவனது வல்ல பிரசன்னத்தையும் குறிப்பதாகும். எசேக்கியேலும் யோவானும் தங்கள் தரிசனங்களில் ஆரோக்கியத்தின் ''இலைகளைக்'' கண்டார்கள் (எசேக் 47:12; வெளி 22:2).

மருத்துவரை ''மட்டும்'' தேடினதுதான் அரசன் ஆசா செய்த தவறு (2 நாளா 16:12). சிகிச்சைக்கு அவ்வளவு செலவழித்துவிட்டதற்காக உதிரப்போக்கு உள்ள அப்பெண்ணை இயேசு கடிந்துகொள்ளவில்லை. மாறாக, அவளை உற்சாகப்படுத்திக் கனிவுடன் குணமாக்கினார் (லூக் 8:43-48). இன்று கருப்பையை நீக்குவது (hysterectomy) இதற்கு ஒரு சிகிச்சை முறையாகும். ஆனாலும் மருத்துவத்துறையைத் தோற்கடிக்கும் எத்தனையோ வியாதிகள் இன்றும் உண்டு. அவைகளுக்கு அற்புதம் ஒன்றே வழி.

மருந்து சாப்பிட்டுக் குணமானால் கர்த்தருக்கு மகிமையெங்கே எனச் சிலர் வாதாடலாம். அது தவறு. நமது கைகளால் வேலை செய்கிறோம்; தொழிற்சாலை அல்லது அலுவலகம் நமக்குச் சம்பளம் கொடுக்கிறது (2 தெச 3:10-12). இதனால் அன்றன்றுள்ள அப்பத்திற்காய்த் தேவனைத் துதித்து, அவரை யேகோவா-யீரே எனப் போற்றுவதில்லையோ? அப்படியே, மருத்துவர் காயத்தைக் கட்டலாம்; குணமாக்குபவரோ தேவன்தான். ஏனெனில் அவரே யேகோவா-ரப்பா! (யாத் 15:26).



என்ன வியாதியானாலும் மருந்தே தொடாத நல்ல சகோதர சகோதரிகள் உண்டு. இது உண்மையாகவே பெரிய விசுவாசம்தான். ஆனால் இதை மற்றவர்மீது திணிக்கக்கூடாது. ''உனக்கு விசுவாசமிருந்தால் அது தேவனுக்கு முன்பாக உன்மட்டும் இருக்கட்டும்'' (ரோ 14:22). எல்லாருடைய விசுவாச ''அளவும்'' ஒன்று போலிராது (ரோ 12:3). தங்கள் குழந்தைகளுக்கு இளம் பிள்ளைவாதத் தடுப்பு மருந்து கொடுக்காத பெற்றோர் தங்கள் கடமையில் தவறுகின்றனர்.

நான் ஒருபோதும் மருந்தே தொடமாட்டேனென்று எவரும் தம் பட்டம் அடித்துத் திரியவேண்டியதில்லை. இவ்வித வீரியக்காரர் பலர் பின்னொரு நாள் மருந்தெடுக்கும் சூழ்நிலையில் குற்றவுணர்வுடன் வருந்தியிருக்கின்றனர்.

பிரசங்கிமார், அதிலும் குறிப்பாக தெய்வீக சுக ஊழியர், மருத்துவரிடம் செல்லத் தயங்கி, மனிதருக்கு அதை மறைக்கத் தேவையில்லை. பிரசங்கிகளும் சாதாரண மனிதர்தான் என்பதை மக்கள் அறியட்டும்! (அப் 14:15; கலா 4:13). பார்வை மங்கினால் ஜெபத்துடன் கண் டாக்டரிடம் செல்லுங்கள்; கண்ணாடி தருவார்; வேதத்தைச் சிரமமின்றி வாசிக்கலாம்! பல் வலி இருந்தால் ஜெபத்துடன் பல் மருத்துவரிடம் செல்லுங்கள்; சொத்தைப் பல்லைத் தட்டுவார்; செயற்கைப் பல்லைக் கட்டுவார்; வலியில்லாமல் பிரசங்கிக்கலாம்! மருத்துவர் தேவனது ஈவாம் (எரே 8:22).

மீட்பின் ''முழு'' ஆசீர்வாதங்களை, குறிப்பாக நமது உடலுக்கு, கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின்போதுதான் அனுபவிப்போம். அதுவரை நமக்கருளப்பட்டிருக்கிறது ''முதல்'' கனிகள் மட்டுமே (ரோ 8:23; எபி 9:28).

## 26. நகையணிவது பாவமா?

நகையென்பது வேதம் முழுவதும் பொதுவாக நல்ல அர்த்தத்திலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. இரட்சிப்பும் நீதியும் ஆபரணங்களுக்கும் நகைகளுக்கும் ஒப்பிடப்பட்டுள்ளன (ஏசா 61:10). ஞானமாய்க் கடிந்து கொண்டு புத்திசொல்லுகிறவன் பொற்கடுக்கனுக்குச்

சமம் (நீதி 25:12). அறிவுள்ள உதடுகள் விலையுயர்ந்த இரத்தினமாம் (நீதி 20:15). உன்னதப்பாட்டுக் காதலர்கள் காதலின்போது நகைகளைக் குறித்துத் தாராளமாகப் பேசுகின்றனர் (உன் 1:10,11).

வேதாகமக் காலத்தில் ஆடவர் பெண்டிர் இருவரும் நகையணிந்திருந்தனர். எகிப்தைவிட்டுப் புறப்படுமுன் தேவன்தாமே தம் மக்களிடம், ''ஒவ்வொரு பெண்ணும் தன்தன் அயலகத்தாளிடத்திலும், தன்தன் வீட்டில் தங்குகிறவளிடத்திலும், வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், ஆடைகளையும் கேட்டு வாங்குவாள்; அவைகளை உங்கள் குமாரருக்கும் குமாரத்திகளுக்கும் அணிவித்து எகிப்தியரைக் கொள்ளையிடுங்கள்'' என்றார் (யாத் 3:22). மக்கள் அப்படியே செய்தார்கள் (12:35,36). ''ஒரு பெண் தன் ஆபரணத்தை மறப்பாளோ?'' என்று தேவனே கேட்கிறார் (எரே 2:32). நகையணிவதைப் பொறுத்தவரை யூதக் கலாச்சாரம் பெருமளவில் இந்தியக் கலாச்சாரம் போன்றது.

குறிப்பிட்ட காரணங்களுக்காகவும் நகையணியப்பட்டது. பிரதான ஆசாரியன் மார்பிலுள்ள ஆபரணம் இஸ்ரவேல் கோத்திரங்களைக் குறிப்பதற்காக இருந்தது (யாத் 39:8-15). மதிப்புக்கும் அதிகாரத்திற்கும் அடையாளமாக யோசேப்புக்கும், தானியேலுக்கும், மொர்தெகாயுக்கும் மோதிரங்களும் சங்கிலிகளும் பரிசளிக்கப்பட்டன (ஆதி 41:42; தானி 5:29; எஸ்தர் 8:2). ஈசாக்குக்கு நியமிக்கப்படுகையில் ரெபெக்காளுக்கு நகைகள் அன்பளிக்கப்பட்டன (ஆதி 24:50-53). திருமணத்தில் அடையாளங்களாக நகைகள் பயன்படுத்தப்பட்டன (ஏசா 61:10). இஸ்ரவேலில் பெண்கள் நகையணிந்திருந்ததை சவுலின் ஆட்சிக்காலச் செழிப்பு எனத் தாவீது வர்ணித்தான் (2 சாமு 1:24). திரும்பப்பெறுதலைக் குதூகலமாய்க் கொண்டாடிக்கொண்டிருந்தபோது யோபுவுக்கு உறவினரும் நண்பரும் பொன் மோதிரங்கள் கொடுத்தனர் (யோபு 42:11). மனந்திரும்பி வந்த மகனுக்குத் தந்தை மோதிரமணிவித்தது அன்பின் உச்சக்கட்டம் (லூக் 15:22). துயர, துக்கக் காலத்தில் ஆடைகள் கிழிக்கப்பட்டன, ஆபரணங்கள் அணியப்படவில்லை (யாத் 33:4; எஸ்றா 9:3).

நல்லவையும் தவறாய்ப் பயன்படுத்தப்பட முடியுமே. மக்களின் கம்மல்களைக்கொண்டு ஆரோன் தங்கக் கன்றுக்குட்டி செய்தான்



(யாத் 32:1-4). கொள்ளையில் கிடைத்த பொற்கம்மல்களைக் கொண்டு கிதியோன் ஓர் ஏபோத்தை உண்டாக்கினான்; அது சிலை வழிபாட்டுக்குக் கண்ணியாயிற்று (நியா 8:24-27).

அந்நிய தெய்வங்களின் சுரூபங்கள் அந்த நகைகளிலிருந்ததால்தான் யாக்கோபு அவைகளைக் கருவாலி மரத்தடியில் புதைத்தான் (ஆதி 35:1-4). ஏசாயா 3:16-23இல் சீயோனின் பெருமையையே ஆண்டவர் கண்டிக்கிறார். நகைக்கோ, வாசனைத் தைலத்துக்கோ, அழகிய உடைகளுக்கோ எதிராக அவர் பேசவில்லை.

வெளியலங்காரத்தைவிட உள்ளழகின் மேன்மையையே பவுலும் பேதுருவும் வலியுறுத்தினர் (1 தீமோ 2:9,10; 1 பேது 3:3,4). நகையணிவதையோ மெல்லிய துணி உடுத்துவதையோ பாவமென்று அவர்கள் பழிக்கவில்லை. மாறாக, பக்தியும், கீழ்ப்படிதலும், அமரிக்கையும், அடக்கமுமே பெண்களின் மதிப்பை அளப்பவை என அழுத்திக் கூறினர். உள்ளலங்காரத்திற்குச் சாராளைப் பேதுரு ஓர் எடுத்துக்காட்டாக நிறுத்துகிறான் (1 பேது 3:5,6). சாராள் நகையணியாதிருந்திருந்தால், மருமகளாய் வரப்போகிறவளுக்குக் கொடுத்தனுப்ப ஆபிரகாமுக்கு வீட்டில் அவ்வளவு நகையிருந்திருக்காது!

அர்ப்பணிப்பின் அடையாளமாக நகை கழற்றுவோரைப் பாராட்ட வேண்டும். ஆனால் தனிப்பட்டவர் தாங்களாகவே செய்யும் இச்செயலை உபதேசமாகப் போதிக்கக்கூடாது. சிலருக்கு நகையென்றால் பைத்தியம். அவர்கள் ஆன்மீக வாழ்வில் வளர விரும்பும்போது, நகை கழற்ற தேவன் அவர்களை நடத்தலாம். நகையென்ன, இன்னும் நியாயமான எத்தனையோ காரியங்களை அனுபவிப்பதில் தேவன் நம்மோடு இடைபடலாம் (1 கொரி 6:12; 10:23). ஆனால், தனி நபர்களோடு தேவன் இவ்விதம் இடைபடுதலைப் பொதுவாக்கிவிடக் கூடாது.

முதல் நூற்றாண்டில் நகையணிந்தோர் சபையில் இருந்தனர் (யாக் 2:2,3). ஆனால் நமக்கென்று குறைவாகவும், இறையரசுக்காக அதிகமாகவும் செலவழிக்கவேண்டுமென்பதே சட்டம். ஆடை, ஆபரணம், இன்னும் இதுபோன்றவற்றில் கட்டுப்பாடின்றி இருப்பது கிறிஸ்தவப் பண்பல்ல.

நகையணியக்கூடாது என்று பெற்றோர் பிள்ளைகளை வற்புறுத்தக் கூடாது. இதனால் கேடு விளையும். கணவனது விருப்பத்திற்கு மாறாக மனைவி நகை கழற்றக்கூடாது (1 கொரி 7:34; எண் 30:6-15). தங்கள் மனைவியர் அளவுக்கு மீறிச் செல்வதால் ஆன்மீகக் காரியங்களையே வெறுக்கும் கணவருண்டு. நகை கழற்றுதலைத் திருமுழுக்குக்கும் திருப்பந்திக்கும் நிபந்தனையாக சபைத்தலைவர்கள் வைக்கக்கூடாது. இது வேதத்திற்கும் ஒழுக்க நெறிக்கும் முரண்பாடானது. பிரமாணக் கொள்கை ஒருபோதும் இருதயத்தை மாற்றாது. இல்லையேல், நகை யணிவதை அவ்வளவாய் எதிர்க்கும் சில விசுவாசிகள் இந்தியா திரும் புமுன் வளைகுடா நாட்டுத் தங்கக் கடைகளில் போய்ச் சாடுவதேனோ?

நகை குறித்த விவாதம் அநேகக் கிறிஸ்தவரைப் பிரித்துவிட்டது துக்கம். எல்லாக் காரியங்களிலும் அன்பைக் காட்டும்படி, பெரிய காரியங்களில் மட்டும் ஒற்றுமை நாடி, சிறிய காரியங்களிலோ விடுதலை கொடுப்போம்.

## 27. படங்கள், சிலைகள் வைத்துக்கொள்ளலாமா?

பத்துக் கட்டளைகளில் முதலாவதாகிய ''என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்'' என்பதைப் புரிந்து கொள்வதில் நமக்கு பிரச்னையில்லை. ஆனால் ஒரு சுரூபத்தை யாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு ''உண்டாக்க வேண்டாம்'' என்ற இரண்டாம் கட்டளையில் நாம் தடுமாறுவதேனோ? (யாத் 20:2-6). சுரூபங்களைக் குறித்து மூன்று காரியங்களைத் தேவன் கூடாது என்கிறார்: ''உண்டாக்க வேண்டாம்... வணங்க வேண்டாம்... சேவிக்க வேண்டாம்...'' முதற்படியில் கவனக்குறைவாயிருந்தால் விக்கிரகாராதனையில் முடிவது நிச்சயம்.

''தேவன் ஆவியாயிருக்கிறார்'' என்பதே அவரைக்குறித்து நாமறிய வேண்டிய முதல் சத்தியம் (யோ 4:24). இதை மோசே எவ்வளவாய் வலியுறுத்தினான் என்று கவனியுங்கள்: ''அந்த அக்கினியின் நடு விலிருந்து கர்த்தர் உங்களோடு பேசினார்... அந்தச் சத்தத்தை நீங்கள் கேட்டதேயன்றி, ஒரு ரூபத்தையும் காணவில்லை... ஆகையால்...



யாதொரு உருவுக்கு ஒப்பான விக்கிரகத்தை உண்டாக்காதபடி... மிகவும் எச்சரிக்கையாயிருங்கள்'' (உபா 4:12-19). படங்களுக்கும் சிலைகளுக்கும் வேறுபாடு அதிகமில்லை. ஒன்று இருபரிமாணமுள் ளது, அடுத்தது முப்பரிமாணமுள்ளது, அவ்வளவுதான்.

அப்படியானால் ஞாயிறு பள்ளிப் படங்கள், நற்செய்தித் திரைப் படங்களைப் பற்றியென்ன? இவையெல்லாம் சிறுவர் சிறுமியர்க்கும், கிறிஸ்தவரல்லாதவர்க்கும் இயேசுவின் ''பூவுலக'' வாழ்க்கையை விளக்கப் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் அவர்கள் பரலோகக் கிறிஸ்துவை விசுவாசிக்கப் பழகி வளரவேண்டும். உடற்தோற்றத்தில் இயேசுவைப் பார்த்திருந்த அப்போஸ்தலரும் என்ன எழுதினார்க ளென்று கவனியுங்கள்: ''நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி அறிந்திருந்தாலும் இனி ஒருபோதும் அவரை மாம்சத்தின்படி அறி யோம்'' (2 கொரி 5:16). குழந்தைத்தனப் பழக்கங்களிலிருந்து வளர்ந்து வெளிவரவேண்டும் (1 கொரி 13:11).

''நல்ல'' காரியங்களும் விக்கிரகங்களாகிவிட்ட சோகச் சம்பவங் களால் திருமறைச் சரித்திரமும் திருச்சபைச் சரித்திரமும் நிறைந் துள்ளன. கிதியோன் போன்ற மனிதனுக்கும் அவனது வீட்டாருக்குங் கூட ஏபோத் ஒரு விக்கிரகமாயிற்று (நியா 8:27). மோசே உண்டாக் கின வெண்கல சர்ப்பத்தை எசேக்கியா இராஜா சுக்குநூறாக்கும்வரை மக்கள் அதற்குத் தூபங்காட்டி வந்தார்கள் (2 இரா 18:4). ஆயிரம் பேரைக் கொல்லப் பயன்படுத்திய அந்தத் தாடையெலும்பை நல்ல வேளை சிம்சோன் தூக்கியெறிந்தான். இல்லையேல் அதிலிருந்து ''பரிசுத்த சீவல்கள்'' வந்திருக்கும்! (நியா 15:17). விக்கிரகாராதனை மலிந்திருக்கும் நாட்டிலுள்ள இந்தியக் கிறிஸ்தவராகிய நாம் கூடுதல் கவனமாயிருக்கவேண்டும். உங்கள் வீடுகளையும் ஆலயங்களையும் துருவிப்பார்த்து, வேதத்திற்குப் புறம்பான அத்தனையையும் எறிந்து விடுங்கள்; அல்லது எரித்துவிடுங்கள்!

இப்பொழுது இயேசுவின் தோற்றம் எப்படியிருக்குமென அறிய விரும்பினால் வெளிப்படுத்தல் புத்தகத்தை வாசித்துப் பாருங்கள் (1:12-16; 2:1,12,18; 3:1; 5:6; 19:12,13). அதுதான் லேட்டஸ்ட் போட்டோ! தலையெல்லாம் கிரீடங்கள். வெண்பஞ்சும் உறைந்த மழையும் போன்ற மயிர். அக்கினி ஜுவாலை போன்ற கண்கள். உலைக்களத்தில் காய்ந்த பிரகாசமான வெண்கலம் போன்ற பாதங்

கள். வாயில் இருபுறமும் கருக்கான பட்டயம். சூரியப் பிரகாச முகம். வலது கையில் ஏழு நட்சத்திரங்கள். இரத்தத்தில் தோய்க்கப்பட்ட அங்கி. இந்த மகிமையை வரையமுடியுமோ? மு-டி-யா-து!

## 28. விசுவாசிகள் பன்றியிறைச்சி சாப்பிடலாமா?

மோசேயின் நியாயப்பிரமாணத்திலுள்ள போஜனபானச் சட்ட திட்டங்களின்படி பன்றியிறைச்சி அனுமதிக்கப்படவில்லை (லேவி 11:7,8). எனவே யூதர்கள் பன்றியிறைச்சி சாப்படுவது மார்க்கச் சடங் கின்படி அசுத்தமானதெனக் கொண்டிருந்தனர். ஆனால் புதிய உடன் படிக்கையின்படி, பரிசுத்தமென்றால் தேவன் குறிப்படுவது சடங்காச் சாரச் சுத்தமல்ல, அது ஆன்மீகத் தூய்மையாகும். வெளித்தோற்றத் திலிருந்து உள்நிலைக்கும், பௌதீகத்திலிருந்து ஆன்மீகத்திற்கும் முக் கியத்துவம் மாற்றப்பட்டது. இயேசு அதை இவ்விதம் விளக்கி னார்: ''வாய்க்குள் போவது மனிதனைத் தீட்டுப்படுத்தாது, வாயி லிருந்து வருவதே மனிதனைத் தீட்டுப்படுத்தும்... வாய்க்குள் போவ தெல்லாம் வயிற்றில் சென்று ஆசன வழியாய்க் கழிந்துபோகும்'' (மத் 15:11,16-18).

மற்றவர்களைவிட அப்போஸ்தலன் பவுல் இச்சத்தியத்தைச் சீக்கிர மாகப் புரிந்துகொண்டான். ''ஒரு பொருளும் தன்னிலே தீட்டுள்ள தல்ல என்று கர்த்தராகிய இயேசுவுக்குள் அறிந்து நிச்சயித்திருக் கிறேன்'' என்று அவன் அறிக்கையிட்டான் (ரோ 14:14). கிறிஸ்து விடமிருந்து இவ்விதம் சத்தியத்தைக் கற்றுக்கொண்ட பவுல் (யோ 1:17) தீமோத்தேயுவுக்கு விடுத்த முன்னெச்சரிப்பாவது: ''பிற்காலங் களில் சிலர் விசுவாசத்தை விட்டு விலகிப்போவார்கள்... விசுவாசி களும் சத்தியத்தை அறிந்தவர்களும் ஸ்தோத்திரத்தோடு அனுபவிக் கும்படி தேவன் படைத்த போஜன பதார்த்தங்களை விலக்கவேண்டு மென்று அந்தப் பொய்யர் கட்டளையிடுவார்கள். தேவன் படைத்தது எல்லாம் நல்லதாயிருக்கிறது; ஸ்தோத்திரத்தோடு ஏற்றுக்கொள்ளப் படுமாகில் ஒன்றும் தள்ளப்படத்தக்கதல்ல'' (1 தீமோ 4:1-4).



ஆனால், இன்றுள்ள பல கிறிஸ்தவரைப் போல் பேதுருவுக்கோ யுகத்துக்கடுத்த இம்மாற்றத்தை ஏற்றுக்கொள்வதில் சிரமமிருந்தது. ''அசுத்தமான'' மிருகங்களென்று அழைக்கப்பட்டவை பரலோகத் திலிருந்தே இறங்கி வந்திருந்தாலும், தேவன்தாமே அவைகளை அடித்துப் புசிக்கும்படிச் சொன்னாலும், அவன் முடியாதென மறுத்து விட்டான். ''தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே'' என்று வானிலிருந்து ஒரு சத்தம் பேதுருவைக் கண்டித்தது (அப் 10:10-16).

புறவினக் கிறிஸ்தவரோடு ஐக்கியங்கொள்ளும்போது பேதுரு போன்ற யூத விசுவாசிகளுக்கு அதிகச் சிரமமிருக்கக்கூடாதென எருசலேமில் கூடிய சங்கம் தீர்மானித்தது. மட்டுமல்ல, ஒரு யுகத்தி லிருந்து மறு யுகத்திற்குள் அப்பொழுதுதான் வந்துகொண்டிருந்த அந்நாட்களில் மோசேயின் ஆகமங்கள் ஓய்வுநாள்தோறும் ஜெபால யங்களில் பூர்வகாலப் பாரம்பரியமாக வாசிக்கப்பட்டுவந்தன. எனவே தான் யூதரல்லா விசுவாசிகளுக்கு உணவு வகைகளுக்கடுத்த சில ஒழுங்குமுறைகளும் வரையறுக்கப்பட்டன (அப் 15:19-21). மற்றபடி, புதிய உடன்படிக்கையின்கீழ் நாம் கிறிஸ்துவோடு மரித்துள்ளபடியால், தொடாதே-ருசிபாராதே-தீண்டாதே போன்ற சட்டதிட்டங்களுக்கு நாம் கீழ்ப்பட அவசியமில்லை! இவைகளைப் பவுல் மனிதரது கற் பனைகளென்றும் சுயவிருப்ப ஆராதனையென்றும் அழைக்கிறான் (கொலோ 2:16,20-23).

உணவுப் பழக்கங்களுக்குக் கலாச்சாரத்திலும் ஆழமான வேர் களுண்டு. ''உணவினிமித்தம் தேவனது வேலையை அழித்துப் போடாதபடி'' மிஷனரிப் பணிகளில் இக்காரியத்தைக் குறித்து மிகுந்த கவனமாயிருக்கவேண்டும் (ரோ 14:20). எடுத்துக்காட்டாக, மோசே யின் பிரமாணத்தில் சாப்பிட அனுமதிக்கப்பட்ட மிருகங்கள் வரிசை யில் முதலில் வருவது மாடுதான் (உபா 14:4). ஆனால் இந்தியா விலுள்ள பெரும்பாலான இந்துக்கள் மற்றும் ஆதிவாசிகளுக்கு மாட்டி றைச்சி என்றால் அபத்தம். அவர்களில் பலருக்குப் பன்றியிறைச்சி யென்றால் பரவாயில்லை! எனவே, இவ்விதப் பிராந்தியங்களில் ஊழியஞ்செய்யும் மிஷனரிகளை மக்களுக்காகவும் ஊழியத்திற்காக வும் மாட்டிறைச்சி சாப்பிடாதிருக்க ஆலோசனை கூறுகிறோம் (ரோ 14:15-23). உணவுக் காரியங்களைக் குறித்து எருசலேம் சங்கம்

எடுத்த முடிவுகளும் இவ்வடிப்படையில்தான். மற்றபடி, சத்தியத்தின் கண்ணோட்டத்தில் நாம் எந்த இறைச்சியையும் படைப்பின் கர்த்தருக்கு நன்றி செலுத்திவிட்டுச் சாப்பிடலாம்.

சில மிருகங்கள், பறவைகளின் மாம்சத்தைச் சாப்பிடவேண்டாமெனத் தேவன் விலக்கியதற்கு மருத்துவ ரீதியான காரணங்களும் உண்டென்பது சில மருத்துவர்களின் கருத்து. இது உண்மையாயிருக்கலாம். எடுத்துக்காட்டாக, இரத்தத்தில் அளவுக்கு மீறிய கொழுப்புச் சத்துள்ளவர்களுக்குப் பன்றியிறைச்சி கூடவே கூடாது. தேவனது ஆலயமாகிய நமது உடலை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளுவதற்கேதுவான உணவு வகைகளைத் தெரிந்தெடுத்துக்கொள்வது ஒவ்வொருவரின் பொறுப்பாகும்.

## 29. கிறிஸ்துமஸ் கொண்டாடலாமா?

டிசம்பர் 25 அன்று கிறிஸ்துமஸ் என்று கிறிஸ்தவ சபையின் நாட்காட்டி குறிப்பிட்டுள்ளது. அது சரியான தேதிதானா என ஏராளம் விவாதம் உண்டு. ஆனால் அது காரியமல்ல. முதல் கிறிஸ்துமஸ் அன்று திரித்துவத்தின் இரண்டாம் நபர் மனுவுருவெடுத்து உலகில் அவதரித்தாரென்பது மறுக்கமுடியாதது. சரித்திரமே அவர் சரிதைதான்!

கிறிஸ்துவின் பிறப்பை ஆண்டின் குறிப்பட்டதொரு நாளில் சிறப்பாய் நினைவுகூறுவதில் திருமறைக்குப் புறம்பானதொன்றுமில்லை. ‘‘நாட்களை விசேஷித்துக்கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளுகிறான்; நாட்களை விசேஷித்துக்கொள்ளாதவனும் கர்த்தருக்கென்று விசேஷித்துக்கொள்ளாதிருக்கிறான்’’ (ரோ 14:6). எனவே கிறிஸ்துமஸைக் கொண்டாடவோ, கொண்டாடாதிருக்கவோ எவருக்கும் முழுச் சுதந்திரம் உண்டு. இவ்விதக் காரியங்களில் நாம் இனி ஒருவரையும் நியாயந்தீர்க்காதிருப்போமாக (ரோ 14:13).

ஆனால் கிறிஸ்துமஸை எப்படிக் கொண்டாடுகிறோமென்பது முக்கியம். கிறிஸ்தவ நாடுகள், சமுதாயங்கள் என்றழைக்கப்படும் பலவற்றில் கிறிஸ்துமஸ் என்றாலே குடியும், வெறியும், களியாட்டும்தான். பெத்லகேம் பாலகனுக்கு இது எவ்வளவு அவமரியாதை! புத்



தாடை உடுப்பதிலும், பல்சுவையுணவு அருந்துவதிலும் தவறேதுமில்லை; ஆனால் ‘‘தேவ இராஜ்யம் புசிப்பும் குடிப்புமல்ல... அது பரிசுத்த ஆவியினாலுண்டாகும் சந்தோஷம்’’ என்பதை மறந்துவிடக்கூடாது (ரோ 14:17).

முதல் கிறிஸ்துமஸ் அன்று மேய்ப்பர்கள் ‘‘பிள்ளையைக் குறித்த சங்கதிகளை எங்கும் பிரசித்தம்பண்ணினார்கள்!’’ (லூக் 2:17). கிறிஸ்துமஸ் காலத்தைத் தீவிர நற்செய்திப்பணிக்குச் செலவிடுங்கள்! பாட்டுப் பாடிக்கொண்டு கிறிஸ்தவ இல்லங்களுக்கே செல்வதைத் தவிர்த்து சேரிகளுக்கும், கிராமங்களுக்கும், தெரு மூலைகளுக்கும் சென்று கிறிஸ்தவரல்லாதோருக்குக் கிறிஸ்துமஸ் செய்தியைப் பறைசாற்றுங்கள்!

மட்டுமல்ல, அந்த மேய்ப்பர்கள் தேவனைப் ‘‘புகழ்ந்தும் துதித்தும்’’ திரும்பினார்கள் (லூக் 2:20). ‘‘தேவனருளிய சொல்லிமுடியாத ஈவுக்காக’’ அவரைத் துதித்து உளமாற வாழ்த்தும் நாட்களாய் கிறிஸ்துமஸ் காலம் அமையட்டும் (2 கொரி 9:15).

கிறிஸ்துவின் முதல் வருகையைச் சிறப்பாய் நினைக்கும் நாட்களில் அவரது இரண்டாம் வருகைக்காய் ஆயத்தப்படும்படி 2000 ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் அவரது முதல் வருகையையே அறியாதோரைச் சந்திக்கத் தீவிரிப்போம். ‘‘உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையுண்டாவதாக’’ என்று ஒவ்வொரு கோத்திரமும், மொழியினரும், மக்கள் கூட்டமும் முழங்கட்டும்! (வெளி 7:9; லூக் 2:14).

(100ஆம் கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

## 30. சுகபோக உபதேசம் சரிதானா?

எனக்கு வளவாழ்வில் நம்பிக்கையுண்டு. அதே வேளையில் தமது பிள்ளைகளுக்கு தேவன் சில சமயங்களில் இன்னல் வேளைகளையும் அனுமதிக்கிறார் என்றும் விசுவாசிக்கிறேன். ஞானிகளில் ஞானி இதை அழகாய்ச் சமநிலைப்படுத்தினான்: ‘‘வாழ்வுக்காலத்தில் நன்மையை

அனுபவித்திரு. தாழ்வுக்காலத்தில் சிந்தனை செய்... ***தேவன்*** இவ் விரண்டையும் ஒன்றுக்கொன்று எதிரிடையாக வைத்திருக்கிறார்'' (பிர 7:14). யோபுவும் இதேவித சமநிலைக் கொள்கையுடைய வனாயிருந்தான். அதைக்குறித்து அவன் சொன்னதைத் தேவனும் அங்கீகரித்தார். ''தேவன் கையிலே நன்மையைப் பெற்ற நாம் தீமை யையும் பெறவேண்டாமா என்றான்; இவைகள் எல்லாவற்றிலும் யோபு தன் உதடுகளினால் பாவம் செய்யவில்லை'' (யோபு 2:10).

சுகபோக உபதேசக்காரர் அடிக்கடி குறிப்பிடும் வசனங்களில் ஒன்று 3 யோவான் 2, ''பிரியமானவனே, உன் ஆத்துமா வாழ்கிறது போல நீ எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாயிருக்கும்படி வேண்டு கிறேன்.'' இவ்வசனத்திலுள்ள நிபந்தனையைவிட வாக்குத்தத்தமே அதிகமாக வலியுறுத்தப்படுகிறது. உண்மையென்னவென்றால் பெரும்பாலான விசுவாசிகளின் ஆத்துமா செழிப்பாய் வாழவில்லை. அவர்கள் தினம் ஒரு மணிநேரங்கூட தேவனோடு தனி ஜெபத்தில் செலவழிப்பதில்லை. ஒரு நாளைக்கு ஒரு வசனங்கூட மனனம் செய்வது அரிது. வாரத்திற்கு ஒருமுறையேனும் தொலைந்த ஆத்து மாக்களைத் தேடிச் செல்வதில்லை. பாவ அறிக்கையின், மனந் திரும்புதலின் கண்ணீரெல்லாம் கிடையாது. தனி வாழ்வில் பரிசுத்தம் முக்கியப்படுத்தப்படுவதில்லை. தியாகம் என்பது புரியாத பதம். அப்படியானால் ஆத்துமாவில் வளம் எங்கே? நிபந்தனையை விட்டு விட்டு வாக்குத்தத்தத்தை மட்டும் திரும்பத் திரும்பச் சொல்லுவ தேன்? நமது ஆத்தும வளத்திற்கேற்றவாறே உடலில் சுகமும் தரும் படி நாம் ஜெபிக்கும் ஜெபத்திற்கு தேவன் பதில் தந்துவிட்டால் சபை களிலெல்லாம் விலை குறைத்து ஊன்றுகோல்களையும், தள்ளு வண்டிகளையும் அங்கத்தினருக்குத் தரவேண்டியதிருக்கும்! எச்சரிக்கை!

அடிக்கடி கூறப்படும் இன்னொரு வசனம் 2 கொரிந்தியர் 8:9, ''நீங்கள் அவரது தரித்திரத்தினாலே ஐசுவரிவான்களாகும்படி உங்கள் நிமித்தம் தரித்திரரானாரே.'' 8ஆம், 9ஆம் அத்தியாயங்களைக் கவன மாய் வாசித்து எதில் நம்மைச் செல்வந்தராக்க வாக்குப்பண்ணியுள் ளார் எனக் கண்டுபிடியுங்கள். ''உதாரத்துவத்திலே'' செல்வந்தர்! (8:2). மக்கெதோனியா சபையினர் கொடிய தரித்திரத்திலிருந்தும் பரிபூரண சந்தோஷத்தினாலே மிகுந்த உதாரத்துவமாய்க் கொடுத்



தார்கள் (8:1,2). அப்படியே, ''சகலவித நற்செயல்களிலும்'' செல் வந்தர் (9:8). மிகுந்த ''உதாரகுணத்திலே சம்பூரணமுள்ளவர்களா வோம்'' என்பதே வாக்கு (9:9,11). ''நீதியில்'' பெருக்கம், ''நீதியின்'' அமோக விளைச்சல்! (9:9,10). இவ்வுலகத்தின் தரித்திரர் பலர் ''விசுவாசத்தில் ஐசுவரியவான்கள்'' என வேதம் தெளிவாய்க் கூறு கிறது (யாக் 2:5). இவ்வுலகச் சம்பத்தால் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிற வர்களும் ''நற்செயல்களில் செல்வந்தராய்'' இருக்கக் கட்டளை பெற்றுள்ளனர் (1 தீமோ 6:17-19).

அந்த விதவைக்கு இருந்தது சாதாரண விசுவாசமா? பத்தில் பத்தையும் தேவனுக்குக் கொடுக்கும் விசுவாசம் அவளுக்கிருந்தது! ஆனாலும் அவள் ஏழையாய்த்தானே இருந்தாள். அவளுக்கிருந்த தெல்லாம் இரு காசுகள்தானே! இயேசுவின் பார்வையில் தங்கள் நிறைவிலிருந்து கொடுத்த செல்வந்தரைவிட அவளே அதிக ஐசுவரி யமுள்ளவள்! பொருளாதார ரீதியில் அவளுக்குத் தரித்திரம், ஆன்மீக வாழ்விலோ செழிப்பு (மாற் 12:41-44).

பழைய ஏற்பாட்டில் பெரும்பாலும் உலக ஐசுவரியந்தான் ஆசீர்வாதமாகக் குறிப்படப்பட்டுள்ளது. ஆனால் புதிய ஏற்பாட்டிலோ வலியுறுத்தப்படுவது ஆன்மீகச் செழிப்பாகும். ''கிறிஸ்துவுக்குள் உன் னதங்களில் ***ஆவிக்குரிய*** சகல ஆசீர்வாதம்!'' (எபே 1:3).

இன்று பொருளாதாரக் குறைவு ஒரு சாபம் என்று எப்போதும் சொல்லிவிடமுடியாது. அப்போஸ்தலர் அறிவிலும், ஞானத்திலும், மற்ற அருங்குணங்களிலும் செல்வந்தராயிருந்தும், பலமுறை பொரு ளாதாரக் குறைவில் இருந்தனர். ''இந்நேரம் வரைக்கும் பசியுள்ள வர்களும், தாகமுள்ளவர்களும், நிர்வாணிகளும், குட்டுண்டவர்களும், தங்க இடமில்லாதவர்களுமாயிருக்கிறோம்'' என்று பவுல் எழுதினான் (1 கொரி 4:11).

தேவையுள்ளோருக்குப் பகிர்ந்துகொடுக்கும்படி எருசலேம் பரிசுத்த வான்கள் தங்கள் நிலங்களையும் உடமைகளையும் விற்று அப்போஸ்தலர் பாதத்தில் வைத்தனர். இவ்வித உன்னத விசுவாசத் தில் அவர்கள் செயல்பட்டும், எருசலேமிலுள்ள ''தரித்திர பரிசுத்த வான்களுக்காக'' பவுல் பிற சபைகளிடம் பணம் சேகரிக்கவேண்டிய

ஒரு சூழ்நிலையும் ஏற்பட்டது (ரோ 15:25,26). தங்களுக்கிருந்த எல்லாவற்றையும் துறந்துவிட்டு சுவிசேஷத்தினிமித்தம் அப்பாலுள்ள பகுதிகளுக்குச் சென்று, தங்களது அடிப்படைத் தேவைகள்கூட பல சமயங்களில் சந்திக்கப்படாது மகிழ்ச்சியாய்ச் சேவைசெய்து மடிந்த மிஷனரிகளின் சரிதைகளால் சபைச்சரித்திரம் நிறைந்திருக்கிறது. அவர்களெல்லாம் விசுவாச வீரர் இல்லையோ? எனவே, நமக்கு விசுவாசம் மட்டுமிருந்தால் எல்லாம் கிடைத்துவிடும் என்று சொல்வது அளவுக்குமீறி இலகுவாக்குவதாகும்.

சுகபோக உபதேசப் பிரசங்கிகள் பொதுவாக ''அற்புதம் உங்கள் சிந்தையில்தான்... அற்புதம் உங்கள் சொல்லில்தான் இருக்கிறது'' என்றெல்லாம் சொல்லுவார்கள். இவ்விதப் பிரசங்கிகள் பலர் ஏராளம் கடனுக்குள் இருக்கிறார்களென்பது யாருக்குத்தான் தெரியாது? சாதகச் சிந்தையும், சாதக அறிக்கையும் ஏன் அவர்களுக்கே பலிக்கவில்லையென்று கேட்கத் தோன்றுகிறது! தேவன் சர்வவல்லவர்; நமது சித்தாந்தங்கள், வாய்ப்பாடுகளுக்குள்ளெல்லாம் அவர் அடங்கமாட்டார்!

இப்படிச் சொல்வதால் எல்லாக் கிறிஸ்தவரையும் தரித்திரராக அழைக்கிறோம் எனப் பொருளல்ல. எவ்வளவு தரித்திரராயிருக்கிறோமோ அவ்வளவு ஆன்மீகச் செழிப்புடனிருப்போமென ஒரு காலத்தில் எண்ணப்பட்டது. இப்பொழுது முள் அடுத்த ஓரத்திற்குப் போய்விட்டது. இங்கு நமக்குத் தேவையானது சமநிலையாகும். நன்கு உழைத்து, தேவன் நமது அன்றாடகத் தேவைகளைச் சந்திக்க எதிர்பார்க்கவேண்டும். அன்றன்றுள்ள அப்பத்திற்காய் ஜெபிக்க இயேசு போதித்துள்ளார். ஆனால் பணக்காரராக எவரும் முயற்சிக்கக் கூடாது. ஏனெனில், ''பண ஆசையே எல்லாத் தீமைக்கும் வேரானது.'' ''போதுமென்கிற மனதுடனே கூடிய தேவபக்தியே மிகுந்த ஆதாயம்'' என்பதே தங்க வாக்கியம். ஏனெனில் ''உலகத்திலே நாம் ஒன்றும் கொண்டு வந்ததுமில்லை. இதிலிருந்து நாம் ஒன்றும் கொண்டு போவதுமில்லை என்பது நிச்சயம். உண்ணவும் உடுக்கவும் நமக்கு உண்டாயிருந்தால் அது போதும் என்றிருக்கக்கடவோம்'' (1 தீமோ 6:6-10).



# 31. பூரணப்படுதல் என்றால் என்ன?

புதிய ஏற்பாட்டு வெளிச்சத்தில் பூரணம் என்பது வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் குறிக்கும். தனிப்பட்டவர் பூரணப்படுதலையும் சபை பூரணப்படுதலையும் அப்போஸ்தலன் பவுல் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் ஓர் அனுபவமாகவே விளக்குகிறான். ''நான் அடைந்தாயிற்று, அல்லது முற்றும் தேறினவனானேன் என்று எண்ணாமல்... ஆசையாய் இலக்கை நோக்கித் தொடருகிறேன்'' (பிலி 3:12-15). ''நாம் அனைவரும் கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியின் அளவுக்குப் பூரண மனிதராகும் வரை...'' (எபே 4:11-15).

தேவ மக்களின் நிலை (standing), நடை (state) ஆகிய இரண்டையும் புதிய ஏற்பாடு பகுத்துக்கூறுகிறது. நிலை என்பது கிறிஸ்துவுக்குள்ளான நமது தகுதியையும், நடை என்பது நமது வாழ்க்கைத் தரத்தையும் குறிக்கும். இதோ சில எடுத்துக்காட்டுகள்: நிலையின்படி, விசுவாசிகள் ''அனைவரும்'' தேவனுக்குமுன் பரிசுத்தவான்களே (ரோ 1:2; 1 கொரி 1:2; எபே 1:1, முதலியன). அதே வேளையில் பரிசுத்தமாய் இருக்கவும் பரிசுத்தமாய் நடக்கவும் நாம் அழைக்கப்படுகிறோம் (1 பேது 1:15,16). நமது நிலையின்படி, நாம் ஏற்கனவே ''பரிபூரணமுள்ளவர்களாய்'' இருக்கிறோம் (கொலோ 2:10); ஆனால் நமது நடையில் ''நற்சீர் பொருந்த'' வேண்டும், அல்லது பூரணப்படவேண்டும் (2 கொரி 13:9).

கிறிஸ்துவுக்குள்ளான நமது வாழ்வை மூன்று அனுபவங்களாகப் பிரிக்கலாம். முதலாவது, இரட்சிப்பு அல்லது மறுபிறப்பு. இது ஒரு குறிப்பிட்ட வேளையில் நடப்பது. அடுத்தது, பரிசுத்தமாகுதல். இது நெடுகவே நடப்பது. முடிவாக, மகிமைப்படுதல். இதுவும் ஒரு குறிப்பிட்ட வேளையில் நடந்துவிடுவது. நாம் இப்பொழுது கடந்த கால, வருங்கால அனுபவங்களாகிய இரண்டிற்கிடையே வளர்ந்துகொண்டிருக்கிறோம். பரிசுத்தமாகுதலையும் மூன்று கோணங்களில் நோக்கலாம். முதலாவது, வரமாய்ப் பெற்றுவிட்ட பரிசுத்தம் (1 கொரி 1:30,31); இரண்டாவது, வளர்ந்துவரும் பரிசுத்தம் (2 கொரி 3:18; பிலி 1:5); மூன்றாவது, வரவிருக்கும் பரிசுத்தம் (1 தெச 5:23). இவ்விதம் நமது

பரிசுத்தமாகுதல் கிறிஸ்துவின் இரண்டாம் வருகையில் முற்றுப் பெறும். அப்பொழுது, நமது நிலையும் நடையும் ஒன்றாகும்.

பாவமில்லாப் பூரணத்தை நாம் இப்பொழுது அடைவதில்லை. ''நமக்குப் பாவமில்லையென்போமானால் நம்மை நாமே வஞ்சிக்கிற வர்களாயிருப்போம்'' (1 யோ 1:8). தேவனது வித்தை உடைய அவரது பிள்ளைகளாகிய நாம் சில வேளைகளில் சோதனைகளுக்கு இடங் கொடுத்தாலும் பாவத்திலேயே தரித்திருக்கமாட்டோம் (1 யோ 2:29; 3:5-10). நாம் உடனே நமது பாவத்தை அறிக்கையிட்டுக் கழுவப் பட்டு தேவ வாக்குகளையும் வல்லமையையும் உரிமைபாராட்டி வெற்றி யோடு நடக்கவேண்டும் (1 யோ 1:9; 2 பேது 1:3,4; ரோ 6:14).

எனவே, புதிய ஏற்பாட்டு உபதேசத்தின்படி, வளர்ந்து முதிர்ச்சி யடையும் கிறிஸ்தவனே பூரணக் கிறிஸ்தவன் எனப்படுவான். நேசிக் கப்படமுடியாதோரை நேசித்தல் (மத் 5:43-48), பொருளாசையின்மை (மத் 19:20,21), நாவடக்கம் (யாக் 3:2), உபத்திரவத்தில் பொறுமை (எபி 2:10), ஆன்மீகப் பகுத்தறிவு (1 கொரி 2:6, 13-15), விசுவாசி களுடன் ஒருமனம் (எபே 4:11,12), கிறிஸ்துவைப் போன்ற நடக்கை (லூக் 6:40) போன்றவை பூரணப்படுபவனின் அடையாளங்களாம்.

பரிசுத்தத்தின்மேல் பரிசுத்தமும், நீதியின் மேல் நீதியும், வெற்றி யின்மேல் வெற்றியும் அடையும்படி இயேசுவை நோக்கி நடத்தலே பூரணமாகுதல் ஆகும். முடிவாக நாம் அவரைச் சந்திக்கும்போது ''அவருக்கு ஒப்பாயிருப்போம்!'' (1 யோ 3:2).

## 32. ''மரணத்துக்கேதுவான பாவம்'' எது?

1 யோவான் 5:16,17, ''மரணத்துக்கு ஏதுவல்லாத பாவத்தைத் தன் சகோதரன் செய்ய ஒருவன் கண்டால், அவன் கடவுளிடம் வேண்டுதல் செய்யவேண்டும், அப்பொழுது அவனுக்கு வாழ்வு அருளுவார்; யாருக்கென்றால் சாவுக்குரிய பாவம் செய்யாதவர் களுக்கே; சாவுக்குரிய பாவமுண்டு, அதைக்குறித்து வேண்டுதல் செய்ய நான் சொல்லவில்லை. தீச்செயல் எல்லாம் பாவந்தான்; என்றாலும் மரணத்துக்கு ஏதுவல்லாத பாவமும் உண்டு.''



பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ 6:23). எந்தப் பாவமும் முழு வளர்ச்சியடையும்போது சாவை விளைவிக்கிறது (யாக் 1:15). ஆனால் தற்செயலாய்ச் செய்யப்படும் பாவத்திற்கும் வேண்டுமென்றே செய் யப்படும் பாவத்திற்குமுள்ள வேறுபாட்டைத் திருமறை சுட்டிக் காட்டுகிறது. அறியாப் பிழைகளெனும் பாவங்களுக்குப் பழைய உடன்படிக்கையின்கீழ் ஆசாரியன் பாவ நீக்கப்பலி செலுத்தலாம்; பாவம் செய்தவன் மன்னிக்கப்படுவான். ஆனால் துணிகரமாய்ப் பாவம் செய்பவன் தூர எறியப்படுவான் (எண் 15:27-31). தேவனது மன்னிப்பு பாவத்தின் தன்மையைப் பொறுத்ததல்ல; பாவியின் மன நிலையைப் பொறுத்தது. இயேசுவின் இரத்தத்தால் கழுவப்பட முடி யாத பாவமே கிடையாது (1 யோ 1:7). ''உங்கள் பாவங்கள் சிவேரென் றிருந்தாலும் உறைந்த மழையைப்போல் வெண்மையாகும்; அவை இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப்போலாகும்'' என்பதே தேவனின் தயாள வாக்கு (ஏசா 1:18). மனந்திரும்புதலே காரியம் (வச 19,20).

கொலையோ விபச்சாரமோ அல்லது இது போன்ற எதுவும் ''மர ணத்துக்கு ஏதுவான பாவம்'' அல்ல. விசுவாசத் துரோகமே மரணத் துக்கு ஏதுவான பாவம். அது கிறிஸ்துவின் மீதுள்ள அடிப்படை விசு வாசத்தையே மறுதலிப்பதாகும். சாவுக்குரிய பாவத்தைக் குறித்து அப்போஸ்தலன் யோவான் எழுதும் பகுதியில் ''விசுவாசமாயிருக்கிற வர்களைத்'' தொடர்ந்து ''விசுவாசமாயிருக்க'' அறிவுறுத்துகிறான்; அத்துடன் ''விக்கிரகங்களுக்கு விலகி உங்களைக் காத்துக்கொள் ளுங்கள்'' எனவும் புத்தி சொல்லுகிறான் (1 யோ 5:13,21). விசுவாசி யொருவன் தனது விசுவாசத்தை மறுதலிக்கும்போது அவன் இறை மகனை மறுபடி சிலுவையிலறைந்து அவரை வெளிப்படையாய் அவமானப்படுத்துகிறான் (எபி 6:6). இந்நிலையிலுள்ள நபரை மனந் திரும்பச் செய்வது மனிதனால் கூடாதது. அவனுக்குப் புத்தி தெளியும் படி நாம் அவனுக்காய் ஜெபிக்கலாம்; ஆனால் அவன் மன்னிக்கப்பட வேண்டுமென்று நாம் ஜெபிக்கமுடியாது. கிறிஸ்துவைப் பேதுரு மறுதலித்தான்; மட்டுமல்ல, தனது உதடுகளால் சபிக்கவும் செய் தான்; ஆனால் அவன் விசுவாசத் துரோகம் செய்யவில்லை. மனங் கசந்து அழுது மனந்திரும்பியபோது அவன் மன்னிக்கப்பட்டான்.

விசுவாசிகள் தங்களுடைய வியாதிகளுக்காக மட்டுமல்ல, பாவங்களுக்காகவும் ஒருவருக்காக ஒருவர் ஜெபிக்கும்படி வேதம்

போதிக்கிறது (யாக் 5:15,16). ஆபிரகாம் அபிமலேக்கிற்காகவும் யோபு தனது நண்பருக்காகவும் ஜெபித்தபோது கடவுள் அவர்களை மன்னித்தார் (ஆதி 20:7,18; யோபு 42:8). ஆனால் மக்களது பாவங்களுக்காய் வேண்டுதல் செய்யவேண்டாமென்று தமது ஊழியருக்குத் தேவன் சொன்ன வேளைகளுமுண்டு (எரே 7:16; 11:14). பாவத்தில் விழுகிற விசுவாசிகளை நமது ஜெபம் கேட்டு தேவன் மன்னிப்பார்; ஆனால் முற்றிலும் விசுவாசத்தை மறுதலித்துப்போனவர்களைச் சுற்றி நமது ஜெபம் வட்டமிடமுடியாது. அவர்கள் தனிப்பட்ட முறையில் மனந் திரும்பினாலன்றி நம்பிக்கையே கிடையாது.

''சாவுக்குரிய பாவம்'' என்றால் விசுவாசத்தை மறுதலித்தல் என்று இவ்விதம் நிலைப்படுத்துகிறோம். கிறிஸ்தவனொருவன் இப்பாவத்தைச் செய்யும்போது, அவன் பொதுவாக தேவ மக்களின் சகவாசத்திலிருந்து தன்னைப் பிரித்துக்கொண்டு அவர்களோடு கூடிவருதலை விட்டுவிடுவான். அவன் தேவகுமாரனைத் தனது கால்களின்கீழ் மிதித்து, அவரது இரத்தத்தை அசுத்தமென்று கருதி, கிருபையின் ஆவியானவரை அவமதிக்கிறானென்று சொல்லப்படுகிறது (எபி 10:23-29). பவுல் ஒரு காலத்தில் தூஷிக்கிறவனாயிருந்தான்; ஆனால் அவன் ''சத்தியத்தை அறிகிற அறிவுடன்'' அல்ல, ''அறியாமையினால்'' அப்படிச் செய்ததால் இரக்கம் பெற்றான் (1 தீமோ 1:13).

பரிசுத்த ஆவியானவருக்கு விரோதமாய்த் தேவ தூஷணம் சொல்லுவதை மன்னிக்கப்படமுடியாத பாவமென்று இயேசு குறிப்பிட்டதையும் இங்கு கவனிப்பது பொருத்தம். பாவங்களிலெல்லாம் பாவமாகிய ''அவிசுவாசத்தைக்'' குறித்து நம்மைக் கண்டித்துணர்த்தி கிறிஸ்துவின் கர்த்தத்துவத்திற்குள் நம்மைக் கொண்டுவரக்கூடிய ஒரே தெய்வீக சக்தி பரிசுத்த ஆவியானவரே (யோ 16:8,9; 1 கொரி 12:3). ஒருவன் அந்தப் பரிசுத்த ஆவியானவரையே தூஷித்துவிட்டால் அவன் உட்கார்ந்திருக்கிற மரக்கிளையையே அவன் வெட்டுவதற்குச் சமம்! (இக்குறிப்பை இன்னும் தெளிவாக அறிந்துகொள்ள 47ஆம் கேள்வி-பதிலை வாசியுங்கள்).

ஒரு காலத்தில் நீங்கள் அறிக்கையிட்ட விசுவாசத்தை நீங்கள் மறுதலித்துவிட்டால் உங்களை நீங்களே ஆக்கினைத் தீர்ப்புக்குள்ளாக்கி விடவேண்டாம். கடவுளிடம் திரும்பி வாருங்கள். அவர் மன்னிக்க தயை பெருத்திருக்கிறார். சத்தியத்தைவிட்டு விலகியோடு



கிறவர்களைப் போனால் போகட்டும் என்று திருச்சபையும் விட்டு விடக்கூடாது. ''தப்பிப்போன மார்க்கத்திலிருந்து ஒரு பாவியைத் திருப்புகிறவன் ஓர் ஆத்துமாவை மரணத்திலிருந்து இரட்சித்து, திரளான பாவங்களை மூடுகிறான்'' என்ற அறிவோடு சபை உறுப்பினர் அவர்களைத் திருப்பிக் கொண்டுவர தங்களாலியன்ற அத்தனையையும் செய்யவேண்டும் (யாக் 5:19,20).

## 33. நமது இரட்சிப்பை இழக்க முடியுமா?

இரட்சிப்பைக் குறித்து முற்றிலும் வேறுபட்ட கருத்துக்களைக் கொண்ட இரு வகுப்பினர் திருமறையை விசுவாசிக்கும் கிறிஸ்தவர்கள் நடுவில் உண்டு. ''ஒரு முறை இரட்சிக்கப்பட்டுவிட்டால் என்றுமே பாதுகாப்புதான்'' என்று ஒரு குழுவினர் வாதாடுகின்றனர். அடுத்த குழுவினரோ, ''முடிவு வரை நிலைத்திருப்பவனே இரட்சிக்கப்படுவான்'' என்று அடித்துக் கூறுகின்றனர். ஒருவருக்கொருவர் கசப்புணர்வோடு சண்டையிடும் அளவிற்கு இக்காரியம் விசுவாசிகளை இரு தரப்பினராகப் பிரித்துவிட்டது. இதைக் குறித்து வேதம் கூறுவது என்ன?

வேத வசனங்களைத் தனித்தனியே எடுத்துப் பார்த்தால் இவ்விரு கருத்துக்களுக்கும் சாதகமான வசனங்களைக் கண்டுபிடிக்கலாம். ''என்றுமே பாதுகாப்பு'' (eternal security) எனும் கருத்துக்குச் சாதகமான ஒரு சில வசனங்கள் இதோ: பிலி 1:5, ''உங்களில் நற்செயலைத் தொடங்கினவர் அதை இயேசு கிறிஸ்துவின் நாள்வரை முடிய நடத்தி வருவார்.'' யோவான் 10:27-29, ''நான் என் ஆடுகளுக்கு நித்திய ஜீவனைக் கொடுக்கிறேன்; அவைகள் ஒருக்காலும் அழிந்துபோவதில்லை, ஒருவனும் அவைகளை என் கையிலிருந்து பறித்துக்கொள்வதுமில்லை. அவைகளை எனக்குத் தந்த என் பிதா எல்லாரிலும் பெரியவராயிருக்கிறார்; அவைகளை என் பிதாவின் கையிலிருந்து பறித்துக்கொள்ள ஒருவனாலும் கூடாது.'' யோவான் 17:12, ''பிதாவே, நீர் எனக்குத் தந்தவர்களைக் காத்துக்கொண்டு வந்தேன்; வேத வாக்கியம் நிறைவேறும்படி கேட்டின் மகன் கெட்டுப்போனானேயன்றி, அவர்களில் ஒருவனும் கெட்டுப்போகவில்லை.'' ரோமர் 8:30, ''தேவன் எவர்களை

முன் குறித்தாரோ அவர்களை அழைத்துமிருக்கிறார்; எவர்களை அழைத் தாரோ அவர்களை நீதிமான்களாக்கியுமிருக்கிறார்; எவர்களை நீதிமான் களாக்கினாரோ அவர்களை மகிமைப்படுத்தியுமிருக்கிறார்.''

அடுத்த வகுப்பினர் அடிக்கடி மேற்கோள் காட்டும் வசனங்கள்: மத்தேயு 24:13, ''முடிவுவரை நிலைநிற்பவனே இரட்சிக்கப்படுவான்.'' 1 கொரிந்தியர் 10:5,12, ''நமது பிதாக்களில் அதிகமானவர்களிடம் தேவன் பிரியமாயிருந்ததில்லை; ஆதலால் வனாந்தரத்தில் அவர்கள் அழிக்கப்பட்டார்கள் ... இப்படியிருக்க, தன்னை நிற்கிறவனென்று எண் ணுகிறவன் விழாதபடி எச்சரிக்கையாயிருக்கட்டும்.'' எபிரெயர் 10:38, ''விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்; பின்வாங்கிப்போவானா னால் அவன் மேல் என் ஆத்துமா பிரியமாயிராது.''

கிறிஸ்தவத்தில் இவ்விதம் இரு இறையியல் தத்துவங்கள் இழை போல் ஓடுகின்றன. பிரெஞ்சு நாட்டு சீர்திருத்தவாதி ஜான் கால்வின் (1509-1564) என்பவர் முதல் கருத்தைப் பரப்பினார். அவர் சொன்னது: ''இரட்சிப்பை நமது தகுதியினால் பெற்றுக்கொள்ள முடியாது; எனவே அதை நமது தகுதியின்மையினால் இழக்கவும் முடியாது.'' அவருக்கு அதிகம் பிடித்த வசனம்: எபே 2:8,9. வேறு வார்த்தைகளில் சொன் னால், நமது இரட்சிப்பில் ''தேவன்'' செய்கிற காரியத்தைக் கால்வின் வலியுறுத்தினார். கால்வின் கொள்கைக்கு எதிராக ஜேக்கப் ஆர்மி னியஸ் (1560-1609) என்ற ஹாலந்து நாட்டு இறையியல் வல்லுநர் நமது இரட்சிப்பில் ''நமது'' பங்கை வலியுறுத்தினார். அவருக்குப் பிடித்தமான வசனங்களில் ஒன்று பிலி 2:12, ''அதிக பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சிப்பு நிறைவேறப் பிரயாசப்படுங்கள்.'' கால்வின் கொள்கை தேவனது ஏகாதிபத்தியத்தையும், ஆர்மினியன் கொள்கை மனிதனது பொறுப்பையும் அளவுக்கு மீறி வலியுறுத்து கின்றன. இவையிரண்டுமே ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள்தான் என்றே நான் விசுவாசிக்கிறேன். திருமறையானது கால்வின் கொள்கை யையோ ஆர்மீனியன் கொள்கையையோ முழுமையாக ஆதரிக்க வில்லை! அது இரு கருத்துக்களையும் அழகாக சமநிலைப்படுத்து கிறது என்பதைக் கீழ்வரும் வசனங்கள் உறுதிப்படுத்துகின்றன—

பிலி 2:12,13, ''அதிக பயத்தோடும் நடுக்கத்தோடும் ***உங்கள்*** இரட்சிப்பு நிறைவேறப் பிரயாசப்படுங்கள்; ஏனெனில் ***தேவனே*** தமது தயவுள்ள சித்தத்தின்படி விருப்பத்தையும் செய்கையையும் உங்களில் உண்டாக்குகிறவராயிருக்கிறார்.''



எரே 32:40, ''அவர்களுக்கு நன்மை செய்யும்படி, ***நான்*** அவர்களை விட்டுப் பின்வாங்குவதில்லை என்கிற நித்திய உடன்படிக்கையை அவர்களோடே பண்ணி, ***அவர்கள்*** என்னைவிட்டு அகன்றுபோகாத படி, எனக்குப் பயப்படும் பயத்தை அவர்கள் இருதயத்தில் வைப் பேன்.''

ஓசி 10:12, ***நாம்*** நீதியை ''விதைக்க'' வேண்டும்; ***ஆண்டவர்*** நம்மீது நீதியைப் ''பொழியப்'' பண்ணுவார்.

நாம் ''கிரியைகளினால்'' இரட்சிக்கப்படுவதில்லை (எபே 2:8,9). ஆனால் இடுக்கமான வாசல் வழியாய் உட்பிரவேசிக்கப் ''பிரயாசப்படவேண்டும்'' (லூக் 13:23,24).

கிறிஸ்து இயேசுவுக்கு உட்பட்டவர்களுக்கு ஆக்கினைத் தீர்ப்பு இல்லை; ஆனால் அவர்கள் மாம்சத்தின்படியல்ல, ஆவியின்படி நடக்கவேண்டும் (ரோ 8:1).

இயேசுதான் நமது விசுவாசத்தை துவக்குகிறவரும் முடிக்கிறவரு மாயிருக்கிறார்; ஆனால் பொறுமையோடும் தொடர்ந்தும் ஓடவேண் டிய ஓட்டக்காரர் நாம்தான் (எபி 12:1,2).

கடவுளது ஏகாதிபத்தியமும் நமது பொறுப்பும் எவ்விதம் சமநிலைப் படுத்தவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இன்னும் சில வசனப் பகுதிகள்: லேவி 20:7,8; ரோ 6:11-14; கொலோ 3:9,10,5,8; 1 பேது 2:9-11; 2 கொரி 6:16 & 7:1; 1 யோ 3:2,3; 1 யோ 5:18; 1 தெச 5:22,23.

''நமது இரட்சிப்பை இழக்க முடியுமா?'' என்ற நமது கேள்விக்கு இப்பொழுது வருவோம். திருமறையின் ஒட்டுமொத்தமான போதனை இதற்கு ''ஆம்'' என்றோ ''இல்லை'' என்றோ பதில் கொடுக்க வில்லை. மாறாக, அது போதிப்பது என்னவென்றால், கிருபையி னாலே இரட்சிக்கப்பட்ட நாம் எல்லா அவபக்தியையும் வெறுத்து, இறைவார்த்தைக்குக் கீழ்ப்படிந்து நடந்து, கிறிஸ்துவின் வருகைக்கு எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கவேண்டும் (தீத் 2:11-13). இக்காரியத்

தைக் கூர்போட்டுக்கொண்டேயிருந்தால் அது கிறிஸ்துவின் உடலாம் சபையின் ஒருமனப்பாட்டைக் குலைத்து நமது ஆன்மீக ஆரோக்கியத்தையும் பாதித்துவிடும்.

கடவுள் இல்லாது என்னால் ஒன்றும் செய்ய முடியாது; நான் இல்லாது அவர் ஒன்றும் செய்ய மாட்டார்!

## 34. சபை எடுத்துக்கொள்ளப்படுதல் உண்டா?

கிறிஸ்துவின் முதல் வருகையைவிட இரண்டாம் வருகையை வேதம் எட்டு மடங்கு அதிகமாகக் குறிப்பிடுகிறது. புதிய ஏற்பாட்டில் மட்டும் அது 318 முறை சொல்லப்பட்டுள்ளது. ''கர்த்தர் வருகிறார்'' எனும் அர்த்தமுள்ள ''மாரநாதா'' எனும் அரேமேய வார்த்தையையே ஆதிக் கிறிஸ்தவர் ஒருவருக்கொருவர் வாழ்த்துதலாய்ப் பெரும்பாலும் பயன்படுத்தினார் (1 கொரி 16:22). ஆம், ஆதி விசுவாசிகள் தங்கள் ஆண்டவரின் வருகையை எந்நேரமும் மகிழ்வுடன் எதிர்நோக்கியிருந் தனர்.

பெரும்பாலும் கிறிஸ்தவர் அனைவருமே கிறிஸ்துவின் இரண் டாம் வருகையை விசுவாசித்தாலும், அது எப்போது எப்படி என்பதில் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர். மூன்றுவிதக் கருத்துக்கள் நிலவி வருகின்றன—

☐ சபை எடுத்துக்கொள்ளப்படுமென்று முதல் குழுவினர் நம்பு கின்றனர். அதாவது, கிறிஸ்து மத்திய ஆகாயத்தில் வரும்போது சபை அங்கு அவரைச் சந்திக்கும். அதைத் தொடர்ந்து உடனே ஏழாண்டு மகா பெரிய உபத்திரவம் உண்டாகும். அதன் முடிவில் கிறிஸ்து பகிரங்கமாய்ப் பூமிக்குத் திரும்பி தமது ஆயிரமாண்டு அரசாட்சியை நிறுவுவார். பின்னர் நித்தியம் துவங்கும். ☐ இரண்டாம் குழுவினர் உபத்திரவ காலத்தின் மையமாகிய மூன்றரை ஆண்டு முடிவில் கிறிஸ்து வருவார் என்கின்றனர். ☐ மூன்றாம் குழுவினர் சபையானது மகா உபத்திரவத்தின் வழியாய்க் கடந்துசெல்லும்; அதற்குப் பின் னரே இரண்டாம் வருகை இருக்கும் என்கின்றனர்.



ஒவ்வொரு குழுவும் தங்கள் நம்பிக்கைக்குச் சாதகமாகச் சில வேத வசனங்களைக் காட்ட முடியும். என்னைப் பொறுத்தவரை, உபத்திரவ காலத்திற்கும் ஆயிரமாண்டு ஆட்சிக்கும் முன்னால் கிறிஸ்து சபையை எடுத்துக்கொள்ள வருவாரென்று விசுவாசிக்கிறேன். மதிப்பிற்குரிய வேதப் பண்டிதர் பலர் நெடுங்காலமாய் இக்கருத்தைக் கொண்டுள்ளனர்.

நாம் இருப்பது சபையின் யுகமாகும். கிறிஸ்து திடீரென மத்திய வானத்தில் ''பரிசுத்தவான்களுக்காகத்'' தோன்றும்போது அது முடி வடையும். ''அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தோர் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர் கொண்டுபோக, மேகங்கள்மேல் அவர்களோடு ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்படுவோம்'' (1 தெச 4:13-18). இதுதான் சபை எடுத்துக் கொள்ளப்படுதல் (Rapture) என்பது. இதுவே ''நாம் நம்பியிருக்கும் ஆனந்த பாக்கியம்'' ஆகும் (தீத் 2:13). பின்னர், இவ்வுலகம் அந்திக் கிறிஸ்துவின் ஆளுகையின்கீழ் மகா உபத்திரவக் காலத்திற்குள் நுழை யும். இந்த ஏழாண்டுக்காலந்தான் ''தேவ கோபாக்கினையின் நாள்'' என்பது. அதின் முடிவில் கிறிஸ்து தமது ''பரிசுத்தவான்களோடு'' பூமிக்குத் திரும்ப வந்து ஆயிர வருட அரசாட்சியைத் துவங்குவார் (2 தெச 2:1-8; வெளி 20:1-6). அடுத்து நித்தியம் தொடரும் (வெளி 21,22).

''தேவன் நம்மைக் கோபாக்கினைக்கென்று நியமிக்காமல், நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மூலமாய் இரட்சிப்படைவதற்கென்று நியமித்தார்'' (1 தெச 5:9; ரோ 5:9; 1 தெச 1:10). எனவே சபையானது மகா உபத்திரவக் காலத்திற்குள் செல்லாது. ''பூமியில் குடியிருக்கிற வர்களைச் சோதிக்கும்படிப் பூச்சக்கரத்தின் மேலெங்கும் வரப்போகிற சோதனைக் காலத்திற்கு'' சபை தப்புவிக்கப்படும் (வெளி 3:10). மகா உபத்திரவத்தின் மூலமாகச் சபையைத் தேவன் பரிசுத்தம்பண்ணப் போகிறாரென சிலர் விவாதிக்கின்றனர். தேவன் ஏன் கடைசித் தலை முறைக் கிறிஸ்தவரை மட்டும் இவ்விதம் சுத்திகரிக்கவேண்டுமென் பது எனது கேள்வி! பாவம் அத்தலைமுறையினர்!

இரண்டாம் வருகையானது சந்தோஷப்படுவதற்கான செய்தியா கும் (1 தெச 4:18). அது சர்ச்சைக்குரிய காரியமாகிவிடக்கூடாது.

சபை எடுத்துக்கொள்ளப்படுதலுக்கடுத்த விவாதங்கள் ஒருவருக் கொருவருள்ள சமாதானத்தை எடுத்துப்போட்டுவிடக்கூடாது! ஒரு கருத்தைப் பிடித்துக்கொள்ளும் அதே வேளையில் பிறரது கருத்துக் களையும் மதிக்கவேண்டும். முக்கியமான காரியம் இரண்டாம் வரு கைக்கு ஆயத்தப்படுதலே. அவர் வரும்போது மூன்று முக்கிய காரி யங்களைச் செய்துகொண்டிருக்கிறவர்களாய் நாம் காணப்படவேண் டும் (மத் 24:46)—

☐ முதலாவது, சுத்திகரித்தல். ''அவர் வெளிப்படும்போது... அவ ருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிந்திருக்கிறோம். அவர்மேல் இவ் வித நம்பிக்கையுள்ளவனெவனும், அவர் சுத்தமுள்ளவராயிருக்கிறது போல, தன்னையும் சுத்திகரித்துக்கொள்ளுகிறான்'' (1 யோ 3:2,3). ''நீதிமானாக்கப்படுதலில் நாம் வெளிச்சமாகிறோம்; பரிசுத்தமாக்கப் படுதலில் நாம் பிரகாசமாகிறோம்'' என்று டான் ஸ்டான்டன் எழுதி யுள்ளார். கிறிஸ்துவின் இரத்தம், திருவசனம், பரிசுத்த ஆவி இவை களின் சுத்திகரிப்போடு நாம் ஒத்துழைத்துக்கொண்டிருந்தால் நாம் ''நடுப்பகல் வரை அதிகமதிகமாய்ப் பிரகாசிக்கிற சூரியப் பிரகாசம்'' போலிருப்போம் (நீதி 4:18).

☐ இரண்டாவது, ஜெபித்தல். ''அந்த நாளையும் அந்த நாழிகை யையும் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான்... அக்கா லத்தை நீங்கள் அறியாதபடியால்... விழித்திருந்து ஜெபம் பண் ணுங்கள்'' (மாற் 13:32,33).

☐ முடிவாக, நற்செய்தியைப் பரப்புதல். இஸ்ரவேலருக்கு இராஜ் யத்தைத் திருப்பக் கொடுக்கும் காலத்தைச் சீடர்கள் இயேசுவிடம் வினவியபோது, அது அவர்களுக்கு அடுத்ததல்ல; அவர்கள் உலகின் எல்லைவரை சாட்சி பகருவதில்தான் கவனம் செலுத்தவேண்டுமென உடனடிப் பதிலளித்தார் (அப் 1:7,8). ''இராஜ்யத்தின் இச்சுவிசேஷம் பூமியெங்குமுள்ள சகல இனத்தவருக்கும் சாட்சியாகப் பிரசங்கிக்கப் படும், அப்போது முடிவு வரும்'' என்று இயேசு ஏற்கனவே தமது சீடர்களுக்குச் சொல்லியிருந்தார் (மத் 24:14).



# 35. கிறிஸ்து எப்பொழுது திரும்ப வருவார்?

கி.பி. 2000ஆம் ஆண்டின் பிறப்பு வாணிப உலகில் பெரும் பர பரப்பை உருவாக்கிவிட்டது. புத்தாயிரமாண்டு 2001 ஜனவரியில் தான் துவங்கியதெனினும் 2000 எனும் எண் எல்லாரையும் குலுக்கி விட்டது. Y2K எனும் கணிப்பொறிச் சிக்கலுக்காக இந்தியா மட்டுமே ஏறத்தாழ 1500 முதல் 2000 கோடி ரூபாய்களைச் செலவழித்துள்ளது. ஆனால் விபரீதங்கள் ஏதும் நடந்துவிடவில்லை, கர்த்தருக்கு ஸ்தோத் திரம்! மார்க்கவுலகும் இது நடக்கும் அது நடக்குமெனப் பல்வேறு காரியங்களைச் சொல்லி நின்றது. இந்த 2000ஆம் ஆண்டில் கிறிஸ்து திரும்ப வரக்கூடுமென புத்தாண்டு விழிப்பாராதனைகளில் பிரசங் கங்கள் செய்யப்பட்டன. இக்காரியத்தைக் குறித்து வேதம் என்னதான் சொல்லுகிறதென உண்மையான கிறிஸ்தவர்கள் அறிய விரும்பு கின்றனர்.

கிறிஸ்து எப்பொழுது திரும்ப வருவாரென்பதற்கு முடிவான பதில் திருமறையில் எழுதப்பட்டுள்ள அவரது கடைசிச் செய்தியில் உண்டு: ''மெய்யாகவே நான் சீக்கிரமாய் வருகிறேன்'' (வெளி 22:20). ''மெய் யாகவே'' என்ற பதம் நம்மை ஊக்குவிக்கவும், ''சீக்கிரமாய்'' என்ற பதம் நமக்குச் சவாலிடவும் சொல்லப்பட்டது. சபைகளுக்கு அனுப் பிய தமது செய்திகளில் ஆண்டவர் அடிக்கடி ''சீக்கிரமாய்'' எனும் பதத்தைப் பயன்படுத்தினார் (வெளி 2:5,16; 3:11; 22:7,12). முதல் நூற்றாண்டுக் கிறிஸ்தவர்கள் இதை அப்படியே நம்பியிருந்தார்கள். ''கர்த்தர் வருகிறார்'' எனும் பொருள்படும் ''மாரநாதா'' எனும் அர மேயச் சொல்லினால் அவர்கள் ஒருவரையொருவர் வாழ்த்தியதற்கு அது ஒரு காரணமாகும் (1 கொரி 16:22).

கிறிஸ்துவின் இரண்டாம் வருகையை ஒவ்வொரு வினாடியும் எதிர்பார்த்தவர்களாய் முதல் நூற்றாண்டுக் கிறிஸ்தவர்களே வாழ்ந் திருப்பார்களானால் இன்று நமது எதிர்பார்ப்பு எவ்வளவு அதிக மாயிருக்கவேண்டும்! ஆனாலும், நாள் குறிப்பிடுவதை வேதம் நெடு கவே கூடாதெனப் போதித்துவருகிறது. தமது பிரிவு வார்த்தைகளில்

கிறிஸ்து தமது சீடரிடம், ‘‘பிதாவானவர் தமது அதிகாரத்தால் குறித்து வைத்துள்ள காலங்களையும் நேரங்களையும் அறிவது உங்களுக்கு உரியதல்ல’’ என்றார் (அப் 1:7). அதற்கு முன்னதாகவே பலமுறை அவர்களிடம், ‘‘மனுமகன் வரும் நாளோ வேளையோ உங்களுக்குத் தெரியாதபடியால் விழித்திருங்கள்’’ என்று சொல்லியிருந்தார் (மத் 24:42; 25:13). ஆனால் அறிய வேண்டாததை அறிவதிலேயே மனிதன் எப்பொழுதும் நாட்டங்கொள்ளுவான்! தாம் எப்பொழுது திரும்புவாரென தமக்கே தெரியாதெனக் கிறிஸ்து சொல்லும்போது அதை அறிந்துகொள்ள நாம் துடிப்பதேனோ? (மாற் 13:32).

ஒன்றுமட்டும் நிச்சயம் — அதாவது, முந்திய தலைமுறையினரை விட இத்தலைமுறையினராகிய நாம் கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கு இன்னும் நெருங்கி வந்துவிட்டோம். எழுப்புதல் வீரன் லியோனார்டு ரேவன்ஹில் அடிக்கடி சொல்வதுபோல், ‘‘நாம் வாழும் காலம் கடைசி நாட்களல்ல, கடைசி நிமிடங்கள்!’’ கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கு முன்னர் நிகழுமென முன்னறிவிக்கப்பட்டவை பெரும்பாலும் நிறைவேறிவிட்டன. மிக முக்கிய அடையாளங்களில் ஒன்றாகிய அகிலவுலக நற்செய்திப்பணி அதின் இறுதிக் கட்டத்திலுள்ளது. சபைச் சரித்திரத்தில் என்றுமில்லாத வேகத்தில் அப்பணி நடந்துகொண்டிருக்கிறது (மத் 24:14). பாவம் பெருகி ‘‘அக்கிரமத்தின் பாத்திரம்’’ நிரம்பி வழிகிறது (மத் 24:12). நியாயாதிபதி ‘‘வாசற்படிக்கு’’ வந்துவிட்டார்! (யாக் 5:9).

வேதாகமச் சம்பவங்களின் நாட்காட்டியில் இதுவரை நடந்த அதி முக்கிய சம்பவங்கள் நிகழ்ந்த விதத்தைக் கவனிக்குங்கால், இத்தலைமுறையில் கிறிஸ்து திரும்பவர சாத்தியக்கூறுகள் ஏராளம். அவர் வரும் நாளை நாம் குறிப்பாய் அறிந்திருந்தால் நாம் எப்பொழுதும் ஆயத்தமாயிராமல் கடைசி நிமிடம்வரை நமது ஆயத்தத்தைத் தள்ளிப்போட்டுக்கொண்டேயிருப்போம். தமது சுத்தக் கிருபையினாலும் ஏகாதிபத்திய ஞானத்தினாலுமே பிதாவானவர் இதை இரகசியமாய்த் தம்மிடம் வைத்துள்ளார்.

நாளைக் குறிப்பிடுவதற்குப் பதிலாகப் பணிக்குக் குறிகளை நியமித்துக்கொண்டு ‘‘எருசலேம், முழு யூதேயா, சமாரியா மற்றும் உலகின் கடையெல்லைவரை’’ நற்செய்தியைப் பரப்புவோம் (அப் 1:7,8). கிறிஸ்துவின் வருகையைக் குறித்துப் புதிய வெளிப்பாடுகளெனும் அடையாளங்கள், தரிசனங்கள் மற்றும் சத்தங்களின் பின்னால் செல்லாதீர்கள் (மத் 24:23-26). வேதத்தில் தெளிவாய்க் கொடுக்கப்பட்டுள்ள வெளிப்பாடுகளில் திருப்தியடைந்திருங்கள்; வேதமே மவுனமாயிருக்கும் இரகசியங்களைத் தோண்டித் துருவாதிருங்கள் (உபா 29:29).

பகுதி மூன்று

# ஆவியானவரும் வரங்களும்



## 36. அன்னிய பாஷை ஒன்றுதான் அடையாளமா?

அன்னிய பாஷை ஒன்றுதான் பரிசுத்த ஆவியின் அபிஷேகத் திற்கு ஒரே அடையாளம் என்று திருமறையில் உபதேசமாக நேரடிப் போதனை இல்லை. ஆனால் ஆவியின் அபிஷேகத்தை மக்கள் பெற்றபோது அன்னிய பாஷையில் பேசியதற்குப் போதுமான எடுத் துக்காட்டுகள் உண்டு—

பெந்தெகொஸ்தேயன்று ஆவியைப் பெற்ற 120 சீடரில் அத்தனை பேரும் ''வெவ்வேறு பாஷைகளில் பேசத் துவங்கினார்கள்'' (அப் 2:4). பரிசுத்த ஆவியானவர் கொர்நேலியுவின் மீதும் அவன் வீட்டார் மீதும் இறங்கியபோது அவர்கள் ''பல பாஷைகளில் பேசித் தேவனைப் புகழ்ந்ததை'' பேதுருவோடு வந்திருந்த யூத விசுவாசிகள் கேட்டனர் (அப் 10:45). எபேசுவிலிருந்த சீடர்மீது பவுல் கைகளை வைத்தபோது அவர்கள்மீது பரிசுத்த ஆவியானவர் வந்தார்; அவர்கள் அன்னிய பாஷையில் பேசித் தீர்க்கதரிசனம் சொன்னார்கள் (அப் 19:6). பவுல் அப்போஸ்தலன் பரிசுத்த ஆவியால் நிறைந்த அந்த வேளையில் அன்னிய பாஷையில் பேசியதாகக் குறிப்பிடப்படாவிட்டாலும், பின் னர் கொரிந்தியருக்கு எழுதுகையில், ''உங்களெல்லாரிலும் நான் அதிகமாய்ப் பாஷைகளைப் பேசுகிறேன்; இதற்காக என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன்'' எனக் குறிப்பிட்டான் (1 கொரி 14:18; அப் 9:17,18). சமாரிய விசுவாசிகள் ஆவியைப் பெற்றபோது சீமோன் போன்றதொரு மாயவித்தைக்காரன் ''காணக்கூடிய'' அடையாளம் ஒன்றிருந்தது (அப் 8:17,18).

இந்த எடுத்துக்காட்டுகளின் அடிப்படையில், ஆவியின் அபிஷே கத்தை ஒருவர் பெறுகையில் அன்னிய பாஷையில் பேசப் பொது வாக எதிர்பார்க்கலாம். ஆனால் இதற்கு நேரடியான ''உபதேசம்'' என்று ஒன்று இல்லாததால், அன்னிய பாஷையில் பேசாத எவரும், பேசும்வரை, ஆவியின் அபிஷேகம் பெறவில்லை என்று சொல்ல முடியாது.

ஆயினும் அன்னிய பாஷை பேசுதலில் தியான வாழ்வுக்கான ஆசீர்வாதம் மிகுதியாயிருப்பதால் ஒவ்வொரு விசுவாசியும்

தேவனிடத்தில் இக்கிருபையை நாட ஊக்குவிக்கப்படவேண்டும். ஆவியின் ஒன்பது வரங்களில் பிரதானமாக ஜெபத்திலும் துதியிலும் தேவனை நோக்கிச் செயல்படுவது அன்னிய பாஷைதானே (1 கொரி 12:7-10; 14:13-17). மட்டுமல்ல, இதனால் பேசுகிறவனுக்கும் பக்தி விருத்தி உண்டாகிறது (1 கொரி 14:4). 1963இல் நான் அபிஷேகம் பெற்றதுமுதல் தினமும் எனது தனி ஜெபத்தில் அன்னிய பாஷையில் பேசுகிறேன்; இதனால் புத்துணர்வு பெற்று உள்ளான மனிதனில் பலப்படுகிறேன் (ஏசா 28:11,12; யூதா 20).

அன்பில்லாமல் அன்னிய பாஷை பேசுவதும் சாத்தியம் (1 கொரி 13:1-3). ஒருவரது ஆவிக்குரிய நிலையை அன்னிய பாஷையை வைத்துக் கணித்துவிட முடியாது. மரமானது அதின் ''கனியினால்'' அறியப்படும் (மத் 12:33). கனிகளும் வரங்களும் சமநிலைப்படுத்தப் படவேண்டும்.

## 37. அன்னிய பாஷைகள் ஒழிந்துவிட்டனவா?

''அன்பு ஒருக்காலும் ஒழியாது. தீர்க்கதரிசனங்களாலும் ஒழிந்து போகும், அந்நிய பாஷைகளானாலும் ஓய்ந்து போகும், அறிவானாலும் ஒழிந்து போகும்'' (1 கொரி 13:8). இவ்வசனத்தைச் சுட்டிக்காட்டி அந்நிய பாஷை வரமானது சபையிலிருந்து எடுபட்டுப்போயிற்றென்று வாதாடும் பல கிறிஸ்தவருண்டு. இதை நாம் இங்கு ஆராய்வோம்.

☐ சபை பிறந்த பெந்தெகொஸ்தே அன்றுதான் அந்நிய பாஷைகள் முதல் முறையாகப் பேசப்பட்டன. சீடர்கள் வெவ்வேறு பாஷைகளில் பேசத் ''தொடங்கினார்கள்'' என்று சரித்திராசிரியன் லூக்கா குறிப் பிடுகிறான் (அப் 2:4). குறிப்பாக புது விசுவாசிகள் பரிசுத்த ஆவி யானவரைப் பெற்ற வேளைகளில் இவ்வனுபவம் தொடர்ந்து வெளிப் பட்டதையும் அவன் எழுதியுள்ளான் (அப் 10:44-46; 19:1-6). கடந்த இருபது நூற்றாண்டு சபைச் சரித்திரத்தில் நவநாவுகளில் பேசுவது இல்லாதிருந்த காலம் ஒருபோதுமில்லை. எல்லாச் சபைப்பிரிவுகளிலு மிருந்து கிறிஸ்தவர்கள் அதிகமதிகமாய் இவ்வரத்தைப் பெற்றனுபவிக்



கிறார்களென்பதே கடைசி நாட்களின் கடைசி மணிகளுக்குள் வந் துள்ள நாம் காணுவதாகும். அனைத்துலக நற்செய்திப்பணியைக் குறித்துப் பேசும்போதல்லவா இயேசு நவநாவுகளின் வரத்தைக் குறிப் பிட்டார்? (மாற் 16:15-17). எனவே, அன்னிய பாஷைகள் அல்லது நவநாவுகள் ஓய்ந்துவிட்டன என்ற கருத்திற்குச் சரித்திரம் சாதக மாயில்லை.

☐ இரண்டாவது, புதிய ஏற்பாட்டின் உபதேசமும் பாஷைகள் ஒழிந்துவிட்டதாக ஒன்றும் சொல்லவில்லை. பெந்தெகொஸ்தேயை அடுத்து 25 ஆண்டுகட்குப் பின்னரே கொரிந்தியருக்குப் பவுலின் முதல் நிருபம் எழுதப்பட்டது. ஏற்கனவே இவ்வரம் எடுக்கப்பட்டிருக் குமானால் அதைக் குறித்து அவ்வளவு விரிவாக அவன் ஏன் விளக்க வேண்டும்? பவுலைப் பொறுத்தவரை, ''நிறைவானது வரும்போது தான்'' அன்னிய பாஷைகள் ஒழியும் (1 கொரி 13:8-10). தனித்தும் மொத்தமாகவும் நாம் இன்னும் வளர்ந்துகொண்டுதானிருக்கிறோம். பூரணத்தையோ கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சியையோ நாம் இன்னும் அடையவில்லை (எபே 4:11). கிறிஸ்து வெளிப்படும்போது நாம் அவரைப் போலிருப்போம் (1 யோ 3:2). அச்சம்பவம் துவக்கி நாம் அவரை முகமுகமாய்த் தரிசித்து அவரோடு முகமுகமாய்ப் பேசு வோம். அச்சமயத்தில் நமது அறிவு நிறைவாயிருக்கும்; அப்பொழுது விசுவாசமோ எந்த வரமோ தேவையிராது. அன்பு மட்டும் பரலோக மணவாளனுக்கும் அவரது மணவாட்டிக்குமிடையில் நீடித்து உச்ச நிலையடையும். எனவேதான், விசுவாசம், நம்பிக்கை ஆகியவற்றை யும்விட அன்பு மேலானது எனப்படுகிறது! (1 கொரி 13:9-13).

☐ மூன்றாவது, நவநாவுகளின் பயன்கள் இன்று அதிகமதிகமாய்த் தேவைப்படுகின்றன. இப்பொல்லாத நாட்களில் நாம் என்றுமில்லாத அளவு பலப்பட வேண்டிய பயிற்சி ஜெபமாகும் (எபே 6:13,18). அன்னிய பாஷைகள் ஜெபத்தையும் துதியையும் ஆழப்படுத்துகின் றன (1 கொரி 14:2,14,15). ஒருவருக்கொருவர் பக்திவிருத்தியுண் டாக்க நாம் அழைக்கப்பட்டுள்ளோம். நவநாவுகளில் பேசுவது சுய பக்திவிருத்தியுண்டாக்குவதற்கான ஓர் ஏதுவாகும் (1 கொரி 14:4). நான் பக்திவிருத்தியடையும்போது மற்றவர்களுக்குப் பணிசெய்ய நல்ல ஆயத்தமுள்ளவனாகிறேன். ஆவியின் பிற வரங்களைச் செயல் படுத்துவதற்குத் தேவையான உள்ளான விடுதலையைப் பெற்றுக்

கொள்ள நவநாவுகள் உதவுகின்றன என்பது பொதுவாகக் கண்ட றிந்தது (அப் 19:6). ஏசாயா இதை ''இளைப்பாறுதல்'' என்றும் ''ஆறுதல்'' என்றும் அழைக்கிறான் (ஏசா 28:11,12).

நமது அனுபவம் அல்லது அனுபவமின்மைக்கு ஏற்றாற்போல் வேதத்தை விளக்கக்கூடாது. மாறாக, வேதத்தின் தெளிவான போத னையைச் சிறுபிள்ளைபோல் ஏற்றுக்கொண்டு, நமக்காக நமது பரம பிதா வைத்திருக்கிற ''நன்மையானவைகள்'' யாவற்றையும் ஆசை யாய்க் கேட்டுப் பெற்றுக்கொள்ளவேண்டும் (மத் 7:7-11; லூக் 11:13).

## 38. வரங்கள் ஒன்பதா, பத்தொன்பதா?

இன்றையப் போதனைகளிலும் புத்தகங்களிலும் திரும்பத் திரும்ப ''ஆவியின் ஒன்பது வரங்கள்'' எனும் சொற்றொடரே பயன்படுத்தப் படுவதால், ஆவியின் வரங்கள் ஒன்பதுதானென்றும் அவைகளில் ஒன்றாவது தனக்கில்லையென்றால் தான் வரமற்றவன் என்றும் சரா சரி விசுவாசி நினைக்கிறான்! ஆனால் ரோமர் 12, 1 கொரிந்தியர் 12, எபேசியர் 4, 1 பேதுரு 4 ஆகிய அத்தியாயங்களில் வரப்பட்டியல் களைக் கவனித்துப் படித்தால் இப்பட்டியல்களெல்லாம் மாதிரிகள் தானென்றும், சொல்லப்பட்ட வரங்களெல்லாம் எடுத்துக்காட்டுகள் தானென்றும் தெளிவாகும். முழுமையான பட்டியல் எதுவுமில்லை; எல்லாமே எடுத்துக்காட்டானவைதான். வானவில்லின் நிறங்கள் போல இவ்வரங்கள் ஒன்றுக்கொன்று நெருக்கமும் இணக்கமு மானவை.

திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டவற்றை விட்டுவிட்டால், மேற் கூறிய நான்கு அத்தியாயங்களின் பட்டியல்களிலிருந்து பத்தொன்பது வரங்களை வரிசைப்படுத்தலாம்— தீர்க்கதரிசனம், போதகம், ஆலோ சனை, பகிர்தல், தலைமைத்துவம், இரக்கம், ஞானம், அறிவு, விசுவா சம், சுகமளிப்பு, அற்புதங்கள், பகுத்தறிதல், பாஷைகள், பாஷை வியாக்கியானம், உதவிகள், ஆளுகை, அப்போஸ்தலத்துவம், நற்



செய்தியறிவிப்பு, மேய்ப்பு. தமது வரங்களாகப் பரிசுத்த ஆவியானவர் இவ்வளவுதான் கொடுக்க முடியுமானால் அவர் பரம ஏழைதான்! இச் சிந்தை ஒழிக! ''நாம் வேண்டிக்கொள்ளுகிறதற்கும் நினைக்கிற தற்கும் மிகவும் அதிகமாய்ச் செய்ய வல்லவர் அவர்!'' (எபே 3:20).

வேதத்தில் அங்குமிங்கும் வேறு பல வரங்களும் குறிப்பிடப்பட் டுள்ளன. ஆனால் நாம் அவைகளை அடையாளங்காணத் தவறு கிறோம். மணமாகாது தனிமையாயிருத்தல் ஓர் எடுத்துக்காட்டு. இதைப் பவுல் ''தேவனால் அருளப்பட்ட வரம்'' என்றழைக்கிறான் (1 கொரி 7:7). விருந்தோம்பல் இன்னொரு வரமாகும் (1 பேது 4:9,10). விசுவாசிகள் யாவருமே உபசரிப்பவர்களாக இருக்கவேண் டும். ஆனால் ஒரு சிலர் நம்மால் புரிந்துகொள்ளமுடியாத அளவு உபசரிப்பில் தேறியவர்களாயிருக்கிறார்களல்லவா? அது இன்று வெகுவாய்த் தேவைப்படும் சிறப்பு வரமாகும். உபசரிப்பு என்பதின் மூலப்பொருள் அன்னியருக்குக் காட்டும் அன்பாகும். இது எளிதோ? அடுத்து, மன்றாட்டு ஜெப வரம். எல்லாரும் ஜெபிக்கவேண்டும்; ஆனால் எல்லாராலும் எரேமியாவைப்போல் புலம்பவோ, பவுலைப் போல் துக்கங்கொண்டிருக்கவோ முடியாது (புல 3:48-50; ரோ 9:1-3; 10:1). ரீஸ் ஹவல்ஸ், ஜெபக்கும் ஹைடு போன்ற பக்தருக்கு இவ் வரமிருந்தது. பாடலியற்றி இசையமைக்கும் புராதன வரத்தைப் பரிசுத்த ஆவியானவர் இன்று மகிமையாக மீட்டு வருகிறார் (எபே 5:18-20). இது தாவீதின், அதுபோல் தந்தை பெர்க்மன்ஸ் போன் றோரின், வரமாகும்! (2 சாமு 23:1,2). கைவினைக் கலைத்திறன் அதிகமாக விரும்பப்படத்தக்க இன்னொரு வரமாகும் (யாத் 31:1-5; 35:30-35). படிப்பறிவற்ற மேய்ப்பர்களும், மீனவர்களும் எழுதும் வரமின்றி வேத வாக்கியங்களை எழுதியிருக்க முடியுமோ? (2 பேது 1:20,21). இப்படி வரப்பட்டியல் நீண்டுகொண்டே போகும். ஒரு வாளி வைத்துக் கடல் நீரையெல்லாம் காலிபண்ண முயன்ற சிறு வனைப்போல் நாமிருக்கவேண்டாம்!

ஆவியின் வரங்களை விஞ்ஞான ரீதியில் வரையறைகள், வரை படங்கள் கொண்டு நாம் விளக்க முயன்றது இஸ்ரவேலரின் பரிசுத் தரை மட்டுப்படுத்திவிட்டது. ''வரம்பெற்ற'' சிறுபான்மையினரை ''வரமற்ற'' பெரும்பான்மையினர் ஆவென்று பார்த்துக்கொண்டிருப் பதுதான் அதின் விளைவு! ஆவியின் வரங்கள் ஒன்பதுமல்ல, பத்

தொன்பதுமல்ல, தொண்ணூறுமல்ல, அது எண்ண முடியாதது. நமது வல்லமை முகாம்களின் பாடங்களைத் திருத்துவோம்; ஒவ்வொரு வருக்குள்ளும் மறைந்திருக்கும் வரங்களை அடையாளம் காண் போம்; சபையின் அமைதிப் பெரும்பான்மையினரை அனல்மூட்டி யெழுப்பிச் செயல்வீரராக்குவோம். அப்பொழுது மட்டுமே சபை யானது இவ்வுலகில் தனது பொறுப்புப் பணியை நிறைவேற்றி முடிக்க முடியும்.

## 39. தேவன் இன்று எல்லாரையும் சுகமாக்குகிறாரா?

தேவன் குணமாக்குகிறவர். ''யேகோவா-ரப்பா'' என்று அவர் தம்மை வெளிப்படுத்தினார் (யாத் 15:26). அவர் மாறவில்லை. அவ ரது வல்லமையும் குறையவில்லை.

தமது குமாரனது பூவுலக ஊழியக் காலத்தில் தேவனது குண மாக்கும் வல்லமை நிகரற்ற வகையில் வெளிப்பட்டது. எல்லாவிதப் பிணியாளிகளையும் அவர் சுகப்படுத்தினார். அவரைத் தொட்ட யாவரும் சுகம் பெற்றனர். ''இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என் றும் மாறாதவராயிருக்கிறார்'' (எபி 13:8). சிலுவையில் நமது பாவங் களையும் ரோகங்களையும் இயேசு சுமந்தார் (ஏசா 53:4,5; மத் 8: 16,17). அவரது இரத்தத்தால் கழுவப்படுகிறோம்; அவரது தழும்பு களால் குணமாகிறோம்.

தொடர்ந்து இன்றும் செயலாற்றும்படி ஆவியானவர் சபைக்குக் குணமாக்கும் வரங்களைத் தந்துள்ளார் (1 கொரி 12:9,28).

ஆனால் நமது உடல் சாவுக்கேதுவானதே. இன்னும் நாம் மரணத் திற்கு உட்பட்டிருக்கிறோம் (1 கொரி 15:26). இனி வேதனையோ துக்கமோ இல்லை எனும் அந்நாள் வரும்வரை மனிதருக்கு நேரிடும் நோய்களால் நாம் பாதிக்கப்படலாம் (வெளி 21:4).

விசுவாசியொருவன் வியாதிப்படும்போது ஜெபிக்கவேண்டும். சபையின் மூப்பர்களை வரவழைத்து ''விசுவாச ஜெபம்'' ஏறெடுக்கச்



செய்யவேண்டும். பாவமேதுமுண்டோ என்று தற்பரிசோதனை செய்ய வேண்டும். பொதுவாக, அவன் சுகம் பெறுவான் (யாக் 5:14-16).

ஆனால் தேவன் சுகமாக்காது விடும் வேளைகளுமுண்டு. அவருக்குமுன் உத்தமமாய் நடந்தும் சுகம் பெறாத பலரை வேதம் குறிப்பிடுகிறது. பவுல் தனது ''மாம்சத்தில்'' இருந்த முள்ளுடன் சமாளிக்கவேண்டியிருந்தது. போதுமான கிருபையை தேவன் அவனுக்களித்தார் (2 கொரி 12:7-10). தீமோத்தேயுவின் வயிறு ''அடிக்கடி'' பலவீனப்பட்டது (1 தீமோ 5:23). எப்பாப்பிரோதீத்து வியாதிப்பட்டு மரணத்திற்குச் சமீபமாயிருந்தான் (பிலி 2:25-27). அத்தனை அற்புதங்களைச் செய்த எலிசா தீர்க்கதரிசி வியாதியில் மரித்தான் (2 இரா 13:14). சுகமடையாத பரிசுத்தர் சரித்திரத்திலும் ஏராளம். சாகும்வரை குருடாயிருந்த ஃபேன்னி கிராஸ்பி என்ற அம்மையார் கிறிஸ்தவ உலகிற்கு 8000 பாடல்களைத் தந்துள்ளார். அதில் ஒன்றுதான் *"Blessed Assurance"* என்ற பாடல்!

நன்மையான யாவும் தேவனிடமிருந்து வருகிறது. அவர் வியா திக்குக் காரணரல்ல. ஆனால் அவர் அதை சிட்சையின் பிரம்பாகவோ, நாம் விளக்கமுடியாத ஏதோவொரு காரணத்திற்காகவோ பயன் படுத்துகிறார். அவர் சர்வ வல்லவர். ஆனால் முடிவாக, நன்மையாக அல்லது தீமையாகத் தோன்றும் சகலமும் அவரது பிள்ளைகளுக்கு நன்மைக்கேதுவாகவே இருக்கும் (ரோ 8:28).

## 40. கைகளை வைக்குதல்பற்றி...?

கரங்கள் வைக்கப்படுவது வேதத்தில் முதலாவது யோசேப்பின் இரு குமாரரை யாக்கோபு ஆசீர்வதித்த வேளையில் வருகிறது (ஆதி 48:14). அப்படியானால் கரங்களை வைப்பது தொன்றுதொட்ட பழக்க மாயிருந்திருக்கிறது. பாவ நிவாரணபலி, சர்வாங்க தகனபலி போன்ற வற்றிற்காய் மிருகங்கள் கொல்லப்படுமுன் ஆசாரியர்கள் அவைகள் மீது கரங்களை வைக்கவேண்டுமென தேவன் கட்டளையிட்டபோது

இப்பழக்கம் ஒரு மார்க்கச் சடங்காய் மாறியது (லேவி 8:14,18,22; 16:21). நியாயப்பிரமாண காலம் முழுவதிலும் இச்சடங்கு தொடர்ந்தது (எண் 8:12).

தலைவர்களை நியமிக்கவும் கரங்கள் வைக்கப்பட்டன. தேவ மக்களை வாக்குத்தத்த நாட்டிற்குள் வழிநடத்திச் செல்ல யோசுவா நியமிக்கப்பட்டபோது மோசே அவன்மீது தனது கரங்களை வைத்தான் (எண் 27:22,23). சபையின் நிர்வாகக் காரியங்களைக் கவனிக்க முதற்குழு உதவிக்காரரை அப்போஸ்தலர் நியமிக்கும்போதும் அவர்கள் இம்முறையைப் பின்பற்றினர் (அப் 6:6).

நோயுற்றோரைச் சுகமாக்க இயேசு அவர்கள் மீது கரங்கள் வைத்ததை சுவிசேஷப் புத்தகங்களில் அடிக்கடி வாசிக்கிறோம் (மாற் 6:5; லூக் 4:40). நற்செய்திப் பேராணை கொடுக்கும்போது அவர், ''விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: ...வியாதிக்காரர் மீது கைகளை வைப்பார்கள், அவர்கள் சுகமடைவார்கள்'' என்றார் (மாற் 16:17,18). அப்போஸ்தலர் தங்கள் ஊழியங்களில் இதைச் செய்தனர் (அப் 28:8). மக்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்வதற்கும் அப்போஸ்தலர் அவர்கள் மீது கைகள் வைத்தனர் (அப் 8:17; 19:6). தங்கள் பிள்ளைகள் மீது இயேசு தமது கரங்களை வைத்து அவர்களை ஆசீர்வதிக்க பெற்றோர் விரும்பினர்; அவர் அதின்படிச் செய்தார் (மத் 19:13-15).

கரங்களை வைக்கும் இந்த யூதப் பழக்கம் இறுதியாகச் சபைக்குக் கிறிஸ்துவின் மூல உபதேசங்களில் ஒன்றாக மாறியது (எபி 6:2). ''ஒருவன் மேலும் சீக்கிரமாய்க் கைகளை வைக்காதே'' என்று பவுல் அப்போஸ்தலன் தீமோத்தேயுவை எச்சரித்தான் (1 தீமோ 5:22). அதாவது, இஷ்டம்போல் எல்லார்மீதும் கரங்கள் வைக்கப்படக்கூடாது என்பது போதனை. அத்தியாவசியமான வேளைகளில் மட்டும் கரங்கள் வைக்கப்படவேண்டும். ''ஒரு வார்த்தை மட்டும்'' சொல்லி மக்களுக்குச் சுகம் வரப்பண்ணலாம் (மத் 8:8; சங் 107:20). கரங்கள் வைக்கப்படாமல் கொர்நேலியு குடும்பத்தார் மீது ஆவியானவர் இறங்கினார் (அப் 10:45). தமது சித்தத்தின்படியே ஆண்டவர் தமது ஆவியானவர் மூலம் வரங்களையும் ஏதுக்களையும் தமது பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் அருளிச்செய்கிறார் (1 கொரி 12:4-11). கிறிஸ்து



பரமேறியதால் தேவப்பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் கிடைத்த சிலாக்கியம் இது (எபே 4:7,8). நமக்குள் தங்கியிருக்கும் ஆவியானவருக்குள் வரங்கள் தங்கியிருக்கின்றன. ''ஆவியின் அனுக்கிரகம் (வெளிப்பாடு)'' அந்தந்தச் சூழலின் தேவைக்கேற்ப பொருத்தமான வரத்தின் மூலம் செயல்படும் (1 கொரி 12:7அ). உள்ளே தங்கியிருக்கும் இவ்வல்லமை வெளிப்பட கரங்கள் வைக்கப்பட வேண்டியதில்லை. தனி நபர்கள் ஜெபத்துடன் விசுவாசத்தில் இவ்வரங்களைச் செயல்படுத்த வேண்டும். ஆனால், முக்கியமான ஊழியப் பொறுப்புகளில் நியமிக்கப்படுவோர்மீது மூப்பர்கள் கரங்களை வைத்து குறிப்பான வரங்கள் அருளப்பட உதவலாம் (1 தீமோ 4:14; 2 தீமோ 1:6; உபா 34:9).

சட்டென்று ஒருவர் மீதும் கரங்களை வைக்கக் கூடாதென்று பவுல் ஓர் ஊழியனை எச்சரித்தான் (1 தீமோ 5:22). சரளமாக எல்லாப் பிரசங்கிகளிடத்திலும் தங்கள் தலைகளைக் கொடுக்கக்கூடாதென்று நான் மக்களை எச்சரிக்கிறேன். நெற்றியில் கை வைத்துக் கீழே தள்ளப்படலாம், ஜாக்கிரதை!

## ௪1. ஜெப எண்ணெயைப்பற்றி...?

ஆனந்தத்திற்கு அடையாளமாகப் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் வாசனைத் தைலங்கள் பயன்படுத்தப்பட்டன (சங் 45:7; 104:15); துக்க நேரத்தில் அவை அகற்றப்பட்டன (2 சாமு 12:20; ஏசா 61:3). விருந்தினரைக் கவுரவிக்கும் வகையில் பரிமள தைலம் அவர்கள் மீது பூசப்பட்டது (லூக் 7:36-38,46). வேதாகமக் காலங்களில் மருத்துவ சிகிச்சைக்காகவும் எண்ணெய் பயன்படுத்தப்பட்டது (ஏசா 1:6; எரே 8:22). சுகமளிக்கும் ஊழியத்திற்காகப் புறப்பட்டுச் சென்றபோது கிறிஸ்துவின் சீடர் இந்த யூதப் பழக்கத்தைத் தொடர்ந்து கையாடினர் (மாற் 6:13). இஸ்ரவேலின் ''பன்னிரண்டு கோத்திரங்களுக்குக்குப்'' பிரதானமாக எழுதப்பட்ட யாக்கோபு நிருபம் (யாக் 1:1) வியாதிப்பட்டோருக்கு எண்ணெய் பயன்படுத்தச் சொல்லுகிறது (யாக் 5:14). இவ்விதச் சம்பவங்களில் ''பூசி'' என்று தமிழாக்கம் செய்யப்பட்டுள்ள

aleipho எனும் கிரேக்கச் சொல்லுக்கு உடலில் ''தேய்ப்பது'' என்பதே பொருளாகும். மட்டுமல்ல, இங்கு ''எண்ணெய்'' என்ற சொல் ஒலிவ எண்ணெய் எனப் பொருள்படும் elaion எனும் கிரேக்கச் சொல்லின் மொழியாக்கமாகும். எனவே, வியாதிப்பட்ட விசுவாசிகளுக்கு ஜெப மும் சிகிச்சையும் தேவையென்பதையே அப்போஸ்தலன் யாக்கோபு சொல்லுவதாக நாம் புரிந்துகொள்ளவேண்டும்.

ஆனாலும், எண்ணெய் என்பது வேதத்தில் பரிசுத்த ஆவியான வரின் பிரசன்னத்திற்கும் வல்லமைக்கும் ஓர் அடையாளமாகும் (சக 4:2-6). தீர்க்கதரிசிகள், ஆசாரியர்கள், இராஜாக்கள் ஆகியோர் பணிக் காக நியமிக்கப்பட்டபோது எண்ணெயால் அபிஷேகிக்கப்பட்டனர். எனவே, நோயுற்றோருக்கு ஊழியம் செய்கையில் விசுவாசத்தை ஊக்குவிக்கும் வகையில் எண்ணெயை ஒரு தொடுதலின் அடையாள மாகப் பயன்படுத்துவதில் தவறேதுமில்லை. தலையாகிய கிறிஸ்து விலிருந்து அவரது சரீரத்தின் சுகவீன அங்கத்தினர்களின் மீது குண மளிக்கும் வல்லமை பாய்ந்துவருவதற்கு எண்ணெய் ஓர் அடையாள மாகலாம் (சங் 133:2). ஆனால், ஜெபிக்கப்படவேண்டியதோ அபி ஷேகிக்கப்படவேண்டியதோ எண்ணெய் அல்ல. அப்படிச் செய்வது விக்கிரகாராதனை. புதிய உடன்படிக்கையில் தேவன் எந்தப் பொரு ளையும் அபிஷேகிப்பதோ பரிசுத்தப்படுத்துவதோ கிடையாது. அபி ஷேகமானது மக்கள்மீது மட்டும் இறங்கி (அப் 2:17) அவர்களுக்குள் தங்கியிருக்கும் (1 யோ 2:27).

இங்கு நாம் சுகமளிக்கும் ஊழியங்களில் பயன்படுத்தப்படும் ''ஜெபத் துணியைக்'' குறித்தும் விளக்கவேண்டும். தேவையுள்ள மக்களிடம் ''போய்'' அவர்களில் வியாதிப்பட்டோர் மீது ''கைகளை'' வைக்கவேண்டியதே இயேசுவின் நேரடிக் கட்டளையாகும் (மத் 10:7,8; மாற் 16:15,18). ஆனால் சில சமயங்களில், சூழ்நிலையைப் பொறுத்து, தேவன் ஒருமுறை பவுலின் ஊழியத்தில் செய்ததுபோல ''விசேஷித்த''விதமாய்ச் செயலாற்றலாம் (அப் 19:8-20). அது கிறிஸ் துவத்தைப் பழித்தோர், போலிக்காரர், மந்திரவாதிகள் ஆகியோரோடு நேரடி மோதலான சூழ்நிலையாகும். பிரசங்கிமாரிடமிருந்து இவ்விதத் துணித்துண்டுகளை எடுத்துச்சென்று பயன்படுத்துவது சபையில் தொடர்ந்தேர்ச்சியான பழக்கமாகவில்லை. எனவே, ''ஆசீர்வதிக்கப் பட்ட துணி'' என்று தெய்வீக சுகத்திற்காய் இன்று விளம்பரம் செய்



வது சபையில் சுகமளிப்பு ஊழியத்திற்கான தேவனது முழு ஆலோச னைக்கு மாறுபட்டதாகும். ''ஜெப எண்ணெய்,'' ''ஆசீர்வாதத் துணி'' என்பவையெல்லாம் எவ்விதம் வியாபாரமயமாகியுள்ளன என்பது தெரிந்ததே.

விசுவாசிகளுக்கு சுகமளிப்பு ஊழியம் செய்யவேண்டிய பொறுப்பு பிரதானமாக உள்ளூர்ச் ''சபையின் மூப்பர்களுக்குக்'' கொடுக்கப்பட் டுள்ளது (யாக் 5:14). அதைத் தொடர்ந்து விசுவாசிகள் ''ஒருவருக்காக ஒருவர்'' ஜெபம் பண்ணவேண்டும் (வச 16). சுகமளிப்பு ஊழியர்கள் கிறிஸ்தவர்களை ஜெபத்திற்காக உடனே தங்களுக்குக் கடிதமெழுத வும், தொலைபேசியில் தெரிவிக்கவும் சொல்லாமல், விசுவாசிகளை யும் மேய்ப்பர்களையும் உள்ளூர்ச் சூழலிலேயே சுகமளிப்பு ஊழி யத்தை வளர்ப்பிக்க ஊக்கப்படுத்தவேண்டும். இப்படி வேதாகமப் பாணிக்குத் திரும்பினால் தேவன் கிருபையாய்ச் சபைக்குத் தந்துள்ள ''குணமளிக்கும்'' வரங்களைப் பயன்படுத்துவதிலுள்ள வஞ்சகங் களுக்கும் நெறிகெட்ட முறைகளுக்கும் முற்றுப்புள்ளி வைக்கலாம்.

## 42. கண் கவரும் அற்புதங்கள் அபூர்வம் ஏன்?

அற்புத சுகமளிக்கும் கூட்டங்கள் இந்தியாவில் ஏறத்தாழ எல்லா முக்கிய நகர்களிலும் நடத்தப்படுகின்றன. ஒரு சிலர் சுகம் பெறுகின் றனர். ஆனால் கைப்பரதிகளிலும் சுவரொட்டிகளிலும் செய்தி மடல் களிலும் இக்கூட்டங்களைக் குறித்து நாம் பிரமாதமாக எழுதுவதெல் லாம் வெறும் வாய்ச்சாலம்தான் என்பதைக் கிறிஸ்தவரும் கிறிஸ்த வரல்லாதோரும் நன்கறிவர். எடுத்துக்காட்டாக, உலகப் புகழ்பெற்ற சுகமளிக்கும் சுவிசேஷகர் ஏறத்தாழ அத்தனை பேரும் சென்னை நகரில் தங்கள் கூட்டங்களை நடத்திவிட்டனர். ஆனால் இன்றுவரை பொதுமக்களுக்கு நன்கு தெரிந்த கை கால் சூம்பிய ஒரு தொழு நோயாளியோ, பிறவிச் சப்பாணியோ, பிறவிக் குருடனோ இக்கூட் டங்களில் பூரண சுகமடைந்ததாகத் தெரியவில்லை.

வெளியரங்கமான ஒரே ஓர் அற்புதம் எருசலேம் முழுவதையும் கலக்குவதற்குப் போதுமானதாயிருந்தது (அப் 3 & 4). சுவிசேஷத்தின்

எதிரிகள்கூட அதைக் கண்டும் காணாமலும் இருக்கமுடியாதபடி இவ்விதம் அறிக்கையிட்டனர்: ''எருசலேமில் வசிக்கிற எல்லாருக்கும் தெரிந்திருக்கிறபடி வெளியரங்கமான அற்புதம் இவர்களால் செய்யப் பட்டதே; அதை நாம் இல்லையென்று சொல்லக்கூடாதே. ஆகிலும் இவை அதிகமாய் மக்களுக்குள்ளே பரவாதபடிக்கு... அவர்களை உறுதியாய்ப் பயமுறுத்தவேண்டும்'' (அப் 4:16,17). பரீட்சைக்கு நிற்கமுடியாத விளக்கங்களினால் நம்மை நாமே திருப்திப்படுத்திக் கொள்ள முயற்சிப்பதைவிட்டு நிலைமையைத் திறந்த மனதோடு சந்திப்போம். வேதத்தைக் கவனமாய்ப் படித்தால் கண் கவரும் அற் புதங்களின் அபூர்வத்திற்கு ஐந்து காரணங்கள் இருக்கலாமெனத் தெரிகிறது.

அ) நாம் சுத்த சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதில்லை. நமது செய்தி கலப்படமாகிவிட்டது. பெந்தெகொஸ்தேயல்லாத சுவிசேஷகர்க ளுக்குச் செய்தி உண்டு, அற்புதங்கள் கிடையாது என்று அவர்களைப் பெந்தெகொஸ்தே சுவிசேஷகர்கள் அசட்டைபண்ணியதுண்டு. பெந் தெகொஸ்தேயல்லாதவரோ இவ்விதப் பகடிகளையெல்லாம் கவனி யாது உத்தமமாய்ப் பிரசங்கித்துக்கொண்டேயிருந்தனர். நாளாவட்டத் தில் பெந்தேகொஸ்தேயினருக்கு இரட்டை நஷ்டம் ஏற்பட்டது. அவர் களது பெரும்பாலான கூட்டங்களில் இப்பொழுது செய்தியுமில்லை, அற்புதமுமில்லை; சத்து இல்லை, சத்தம் மட்டும் உண்டு; ஆவி இல்லை, ஆர்ப்பாட்டம் மட்டுமுண்டு. கூட்டத்திற்கு வருகிறவர்கள் செய்தி பிரசங்கிக்கப்படும் முதற்பகுதியைவிட வியாதியஸ்தருக்காக ஜெபிக்கும் கூட்டத்தின் இரண்டாம் பகுதியையே அதிகமாய் எதிர் நோக்குமளவுக்குத்தான் நம்முடைய சுகமளிக்கும் கூட்டங்களின் விளம்பரங்கள் அமைகின்றன. அன்றோ மக்கள் முதலாவது இயே சுவைக் ''கேட்கவும்'' அடுத்து அவரால் ''குணமடையவும்'' அவரிடம் கூடினார்கள் (லூக் 5:1,15). ''சுகமடைவது எப்படி'' என்பது சுவிசேஷ செய்தியல்ல. பூரண சுத்த சுவிசேஷத்தைப் பவுல் 1 கொரி 15:1-5 இல் தெளிவாக வரையறுத்துள்ளான்: ''கிறிஸ்து வேத வாக்கியங் களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு... மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து... தரிசனமானார்.'' இந்த ''வார்த் தையே'' நமது செய்தியாயிராவிடில் நமது பிரசங்கத்தை அடை யாளங்களினால் உறுதிப்படுத்த தேவன் கடமைப்பட்டவரல்ல (மாற் 16:20; ரோ 10:8-10).



ஆ) நாம் குழுக்களாய்ச் செயல்படுவதில்லை. வெளியரங்கமான அற்புதங்கள் நடக்கவேண்டுமானால் குழுச்சிந்தையுடன் செயல் டுவது எவ்வளவு அவசியமென்பதை அப்போஸ்தலர் 3இன் அற்புதம் திரும்பத் திரும்ப அடிக்கோடிடுகிறது. ''பேதுருவும் யோவானும்'' (3:1). ''பேதுருவையும் யோவானையும் அவன் கண்டு'' (வச 3). ''பேதுருவும் யோவானும், எங்களை நோக்கிப் பார் என்றார்கள்'' (வச 4). ''குணமாக்கப்பட்ட சப்பாணி பேதுருவையும் யோவானையும் பற்றிக்கொண்டிருக்கையில்'' (வச 11). ''பேதுரு மக்களை நோக்கி, நீங்கள் எங்களை நோக்கிப் பார்க்கிறதென்ன? என்றான்'' (வச 12). ''பேதுருவும் யோவானும் பேசுகிற தைரியத்தை அவர்கள் கண்டு'' (4:13). துர்ப்பாக்கியமாக சூப்பர் ஸ்டார் மனப்பான்மையே நம்மை ஆட்டிப்படைக்கிறது. புதிய ஏற்பாடோ எப்பொழுதும் சரீரத்தின் கூட்டு ஊழியத்தையே வற்புறுத்துகிறது. எல்லா வரமும் பெற்றவர் எவரு மில்லை; ஒரு வரமும் பெறாதவர் எவருமில்லை. ''விசுவாசம், சுக மளிப்பு, அற்புதங்களைச் செய்யும் சக்தி'' ஆகிய வரங்கள் இணைந்து செயல்படும்போதுதான் வெளியரங்கமான அற்புதங்கள் நடைபெறும். 1 கொரிந்தியர் 12இல் உள்ள பட்டியலின்படி ஒரே பிரசங்கியாருக்கு இம்மூன்று வரங்களும் சேர்ந்து இருக்குமா என்பது கேள்விக்குரியது. ''*வேறொருவனுக்கு* விசுவாசமும், *வேறொருவனுக்கு* குணமாக்கும் வரங்களும், *வேறொருவனுக்கு* அற்புதங்களைச் செய்யும் சக்தியும்... அளிக்கப்படுகிறது'' (வச 9,10). அப்படியே அடிக்கடி சொல்லப்படும் மாற்கு 16:17-20இலிலுள்ள பன்மையைக் கவனிக்க: ''விசுவாசிக் கிறவர்கள்... துரத்துவார்கள்... பேசுவார்கள்... எடுப்பார்கள்... கைகளை வைப்பார்கள்... அவர்கள்... பிரசங்கம் பண்ணினார்கள்... அவர்களால் நடந்த அடையாளங்கள்.'' அற்புத சுகமளிப்பு ஒரு கவர்ச்சிகரமான ஊழியமாகும். நம்மெல்லாரிலும் மிகுந்த பக்தியுள்ளவன்கூடத் தனித்துச் செயல்பட்டால் மக்கள் தரும் புகழைச் சமாளிக்கத் திராணி யற்றவன் என்பது தேவனுக்குத் தெரியும்!

இ) நாம் தேவ மகிமையைத் திருடுகிறோம். தேவன் வைராக்கிய முள்ளவர். அவர் தமது மகிமையை எவரோடும் பகிர்ந்துகொள்ளார். மக்கள் பேதுருவையும் யோவானையும் நோக்கி ஓடியபோது, ''நீங்கள் எங்களை நோக்கிப் பார்க்கிறதென்ன? ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடைய தேவன்... இயேசுவை மகிமைப்படுத்தினார்'' என்பதே அவர்களது உடனடிப் பதிலாயிருந்தது (அப் 3:12,13). பவுல்,

பர்னபா ஊழியத்திலும் இது போன்றதோர் அற்புதம் நடந்தது (அப் 14:8-18). அங்கும்கூட மக்கள் அப்போஸ்தலருக்கு மாலையிட்டு அவர்களுக்குப் பலி செலுத்த விரும்பியபோது அப்போஸ்தலருடைய எதிர்ச்செயல் தீவிரமாயிருந்தது: ''அவர்கள் தங்கள் உடைகளைக் கிழித்துக்கொண்டு, கூட்டத்திற்குள்ளே ஓடி, உரத்த சத்தமாய்: மனி தரே, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? என்றனர்'' (வச 14,15). ஆதிச் சீடருக்கு ஒரேயொரு நோக்கம்தான் இருந்தது; அது தேவ மகிமை யாகும். நமக்கோ பல்வேறு நோக்கங்களுண்டு. நம்மைப் பிரமாத மாக அறிமுகப்படுத்த நாம் இச்சிக்கிறோம். நமது சொந்த ஊழி யங்களை விரிவாக்க எந்த ஒரு வாய்ப்பையும் விட்டுவிடுவதில்லை. ஒருவேளை போட்டோவும் வீடியோவும் குறையுமானால் அற்புதங்கள் கூடுவதற்கு வாய்ப்புண்டு. பிதாவாகிய தேவன் இயேசுவை நம்பி அவ்வளவு வல்லமையைக் கொடுத்திருந்தார்; ஏனென்றால் தமது குமாரன் ஒருபோதும் அதைச் சுய திருப்திக்காகவோ, சுய மகிமைக் காகவோ துர்ப்பிரயோகம் செய்யமாட்டாரென்று பிதா அறிந்திருந்தார் (மத் 4:3-6; 9:8; அப் 10:38). தேவனை நாம் நம்பும்போது கூடாதது ஒன்றுமில்லை என்பது உண்மைதான். ஆனால் தேவன் நம்மை நம்ப முடியுமா என்பதுதான் கேள்வி!

ஈ) நமது நிகழ்ச்சிகளை வியாபாரமயமாக்குகிறோம். வசனத்திற்கு விரோதமான காணிக்கை சேகரிப்பு முறைகளையெல்லாம் பெரும் பாலும் கண்டுபிடித்தது சுகமளிப்பு ஊழியர்கள்தான் (இதை யார் மறுக்க முடியும்?). விசுவாசத்தையும் வளமையையும் குறித்து மக்க ளுக்குப் பிரசங்கிக்கிறோம்; நாமோ நமது திட்டங்களுக்குப் பிச்சை யெடுத்துக்கொண்டும் கடன் வாங்கிக்கொண்டும் அலைகிறோம். நம்முடைய ஊழியங்களில் கணக்கொப்புவிப்பு என்ற பேச்சே கிடை யாது. வெளியரங்கமான அந்த அற்புதத்தைச் செய்யுமுன் ''வெள்ளி யும் பொன்னும் என்னிடத்திலில்லை'' என்று பேதுருவால் அறிக்கை யிட முடிந்தது (அப் 3:6). அவனது மற்றும் பிற அப்போஸ்தலரது பாதத்தில் மக்கள் கொண்டு குவித்த திரளான பணத்தை அவன் தொடவில்லை என்பதே இதன் பொருள் (2:44,45; 4:33-37). உலகப் பொருட்களிலேயே நாம் உண்மையற்றவர்களாயிருந்தால் அற்புத வல்லமையை தேவன் நம்மை நம்பி எப்படிக் கொடுப்பார்? (லூக் 16:11). விளையாட்டுப் பிள்ளை கையில் கூரிய கத்தியை எந்தப் பெற்றோராவது கொடுப்பாரா? ஆவிக்குரிய வரங்களை நாடுகிற



வர்களாகிய நாம் ''மாம்சத்திற்குரியவர்களாகவும் குழந்தைகளாக வும்''தானே இருக்கிறோம் (1 கொரி 14:12; 3:1-3). வியாபாரத் துறையிலிருப்போரிடம் போய் மக்களைக் கவரும் கோஷங்களைப் படித்துக்கொள்வதைச் சுவிசேஷகர்கள் என்றுதான் நிறுத்துவரோ? ஏராளம் காணிக்கை கிடைக்கக்கூடிய நகரங்களையும் ஊர்களையும் விட்டு, பரம ஏழைகளும் தாழ்த்தப்பட்டோரும் சிலாக்கியமற்றோரும் வாழும் இடங்களில் தங்கள் கூட்டங்களை நடத்த சுவிசேஷகர்கள் என்றுதான் தெரிந்துகொள்வரோ? (லூக் 4:18,19; 7:22).

உ) பரிசுத்த வாழ்வை வலியுறுத்தத் தவறிவிட்டோம். பெந்தெ கொஸ்தேயின் பரிசுத்தமில்லாமல் பெந்தெகொஸ்தேயின் வல்லமை எங்கே? ''நமது சுய பக்தியினால்'' தேவன் மக்களைக் குணமாக்கு வதோ அற்புதங்களைச் செய்வதோ இல்லை என்பது உண்மைதான் (அப் 3:12). ஆனால் எஜமானது பிரயோஜனத்திற்காகச் சுத்திகரிக் கப்பட அழைக்கப்பட்டிருக்கிறோமே (2 தீமோ 2:21,22). ஆவியின் வரங்களில் தீவிரங்காட்டி ஆவியின் கனியைத் தியாகம் செய்து விடுகிறோம். ''ஞானத்தைப் போதிக்கும் வசனம்'' மற்றும் ''அறிவை உணர்த்தும் வசனம்'' ஆகியவை வரங்களாம்; ஆனால் ''கர்த்தருக்குப் பயப்படுதலே ஞானத்தின் ஆரம்பம்; பரிசுத்தரின் அறிவே அறிவு'' என்பதை நாம் மறந்துவிடக்கூடாது (1 கொரி 12:8; நீதி 9:10). நமது சொந்த உடல்களை மாம்சத்திற்கடுத்த பாவங்களால் கறைப்படுத்திக் கொண்டிருக்கும்போது மற்றவர்களுக்கு உடல் சுகத்தை நாம் எப்படிக் கொண்டுவரமுடியும்? அப்படியே பொய், மிகைப்படுத்துதல், கெட்ட வார்த்தை போன்றவற்றிற்கெதிராக நமது நாவைக் கட்டுப்படுத்து வதில் நாம் கவனமாயிராதிருக்கும்போது, வார்த்தை வரங்களான தீர்க்கதரிசனம், பாஷைகள், வியாக்கியானம் ஆகியவற்றை நாம் விரும் புவது தேவனுக்குப் பிரியமாயிருக்குமோ? யோசுவா சொல்லுவதைக் கவனியுங்கள்: ''உங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளுங்கள்; நாளைக்குக் கர்த்தர் உங்கள் நடுவிலே அற்புதங்களைச் செய்வார்'' (யோசு 3:5).

இந்தக் காரியங்களைக் குறித்து நாம் ஆவன செய்யாவிடில் தேவனுக்கு மகிமையைவிட அவமதிப்பைத்தான் கொண்டுவரு வோம்; நாம் அறிவிக்கும் சுவிசேஷ செய்தியை நம்புவதற்குப் பதிலாக அதைக் கேள்விக்குரியதாய் மாற்றிவிடுவோம்.

கண்கவரும் வெளியரங்க அற்புதங்கள் இல்லாமையால் அற்புதங்களின் காலம் கடந்துவிட்டதென்று சொல்லும் கிறிஸ்தவர்களுண்டு. இது திருவசனத்திற்கு ஒவ்வாததால் இதை நான் முற்றிலும் நிராகரிக்கிறேன். அற்புதங்களின் தேவன் மாறவில்லை. அவரது வார்த்தைக்கு என்றுமே அதே வல்லமை உண்டு. இத்தலைமுறையைப்போல் எத்தலைமுறையும் ஜீவனுள்ள தேவனுக்குப் பதிலாக இத்தனை பாகால்களை வணங்கியதில்லை; எனவே எந்தக் காலத்தையும்விட இன்றுதான் அற்புதங்கள் ஏராளம் தேவை!

## ௪3. பிரசங்கிமார் மக்கள்மீது ஊதலாமா?

ஆவிக்குரிய வட்டாரங்களில் காணப்படும் வேதத்திற்கு மிஞ்சிய கண்டுபிடிப்புகளைக் குறித்துத் திகைத்து நிற்கிறேன். வேதாகமக் காலங்களில் அப்போஸ்தலத் தலைவர்களுக்குச் சற்றும் தெரிந்திராத காரியங்கள் தயக்கமேதுமின்றி இன்று அப்பியாசிக்கப்படுகின்றன. இன்றையப் போக்கின் ஆபத்தை உணராத சபையினருக்காக என் இருதயம் புலம்புகிறது.

''வேத வாக்கியம் என்ன சொல்லுகிறது?'' கடினமான கேள்விகள் கேட்கப்பட்டபோது கிறிஸ்துவும் அப்போஸ்தலரும் திருப்பிக் கேட்டது இதுதான் (லூக் 10:25,26; ரோ 4:1-3; கலா 4:30). வேதமே நமக்கு முடிவான அதிகாரம்; அதற்கு மிஞ்சிப் போகத் துணியாதிருப்போம்.

மனிதன்மீது யாராவது ஊதினதாக வேதத்தில் இரு சம்பவங்கள் மட்டுமே உண்டு. அவையிரண்டிலும் ஊதியது ''தேவனே.'' ஆதியாகமம் 2:7, ''தேவனாகிய கர்த்தர் மனிதனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார்; மனிதன் ஜீவாத்துமாவானான்.'' யோவான் 20:22, ''இயேசு அவர்கள் மேல் ஊதி, பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்றார்.'' தேவனே ஜீவனுக்கு அதிபதியானவர்; எனவே அவர் மனிதன்மீது ஊதினார் (யோ 1:4). மரணத்திற்குப்பின் மனிதனது ஆவி தேவனிடத்திற்குத்



திரும்பிச்செல்லும் (பிர 12:7). இயேசுவே பரிசுத்த ஆவியினால் ஸ்நானம் கொடுக்கிறவர்; எனவே அவர் முன்னடையாளமாகத் தமது சீடர்மீது ஊதினார் (யோ 1:33; அப் 2:33). எனவே, மனிதர்மீது ஊதும் செயல் தேவன் ஒருவருக்கே உரியது. சாவுக்கேதுவான மனிதன் எவனும் அதைச் செய்யத் தூண்டும் உபதேசம் நேரடியாகவோ மறைமுகமாகவோ வேதத்தில் எங்கும் கிடையாது.

உலர்ந்த எலும்புகளை மாபெரும் சேனையாக உயிரடையச் செய்யக் காற்றுத்திசை நான்கிலுமிருந்து ஆவி வந்ததாக எசேக்கியேல் 37இல் வாசிக்கிறோம். இங்கும் எலும்புகள் மீது ''ஊதும்படித்'' தீர்க்கதரிசிக்குச் சொல்லப்படவில்லை. மாறாக, எலும்புகளையும் ஆவியையும் நோக்கிப் ''பேசும்படியே'' அவனுக்குக் கட்டளை வந்தது (வச 7,9,10). ஆம், மக்களுக்குப் பிரசங்கிப்பதும், அவர்களை ஆவியினால் நிரப்பும்படித் தேவனை நோக்கி ஜெபிப்பதுமே நாம் செய்யவேண்டியதாகும். அப்போஸ்தலர் அதையே செய்தனர் (அப் 8:14-17; 9:17,18; 10:44; 19:1-6). அப்போஸ்தலர் ஒருமுறையாவது மக்கள்மீது ஊதியிருந்தால்கூட, கரங்கள் வைக்குதலை அத்தனை முறை குறிப்பிட்ட லூக்கா கட்டாயம் அப்போஸ்தலர் மக்கள் மீது ஊதினர் என்றெழுதி வைத்திருப்பான்!

இன்றைய இத்துணிச்சலான செயல்களுக்கு மூலக்காரணம் நவீன விசுவாசக் கொள்கைக் கூட்டமே (Faith Movement) என்பது தெளிவு. ''உனக்குள் ஒரு கடவுள் இருக்கிறாரென்பதல்ல, நீயே ஒரு கடவுள்'' என்று இக்கொள்கைக் கூட்டத்தின் பிரபலப் பிரசங்கியார் ஒருவர் கூறியுள்ளார்! இவர் தனது தத்துவத்திற்கு சங்கீதம் 82:6ஐயும், அதை யோவான் 10:34-36இல் இயேசு மேற்கோள் காட்டியதையும் ஆதாரமாகக் கொள்கிறார். பூமியின் இராஜாக்களையும் நீதிபதிகளையும் தேவனது பிரதிநிதிகளாகக் குறிப்பிடுவதுதான் இச்சங்கீதப்பகுதி போதிப்பதாகும். அவர்கள் முடிவில் மனிதரைப்போல் செத்து விழுவார்களென்றும் அது கூறுகிறது! (வச 6). (ரோமர் 13:1-6ஐயும் வாசியுங்கள்). ஒரு விவாதத்திற்கென்றே இயேசு சங்கீதத்திலுள்ள அவ்வசனத்தைக் கையாடினார். அந்திக்கிறிஸ்துவின் குணங்களில் ஒன்றுகூட நம்மைப் பிடித்துவிடாதபடி நாம் விழிப்பாயிருக்கவேண்டும் (2 தெச 2:3-12).

‘‘அப்படியானால், பிரசங்கிமார் மக்கள்மீது ஊதும்போது அசாதாரண காரியங்கள் நடைபெறுகின்றனவே, அதைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்?’’ என்று சில விசுவாசிகள் கேட்கின்றனர். ‘‘முடிவை வைத்து முறை சரியென்று சொல்ல முடியாது’’ என்பதே அதற்கு எனது பதில். கிறிஸ்தவ வாழ்விலும் ஊழியத்திலும் ‘‘என்ன’’ என்பதைவிட ‘‘எப்படி’’ என்பதே காரியம் (1 கொரி 3:9-14; 2 தீமோ 2:5).

நான் ஒரு பெரிய வேதப் பண்டிதன் அல்ல; ஏறத்தாழ ஐம்பதாண்டுகள் (1962-2013) வேதத்தைப் படித்துக்கொண்டிருக்கும் ஒரு மாணவன்தான். பிரசங்கிமார் மக்கள் மீதோ மைக் மீதோ ஊதும் செயலை என்னால் ஒத்துக்கொள்ளவே முடியவில்லை. மைக் வேலை செய்கிறதா என்று சோதிப்பதற்காகக்கூட அதின்மீது ஊதுவது பொறியியலின்படி சரியல்ல!

## 44. ஆவியில் தரையில் விழுதலைப்பற்றி...?

நான் இளைஞனாயிருந்தபோது (1965) ஒரு சுவிசேஷகி நடத்திக் கொண்டிருந்த சுகமளிக்கும் கூட்டமொன்றில் இக்காரியத்தை முதலாவது பார்த்தேன். அவர்களது தொடுதலுக்காக மக்கள் முழங்காலில் வரிசையாய் நின்றனர்; அவர்களில் பெரும்பாலானோர் சுகமடையாவிடினும் ஏறத்தாழ எல்லாருமே சரிந்துவிழுந்தனர். அக்கூட்டத்தில் தன்னார்வலனாக உதவிக்கொண்டிருந்த எனக்கு ஏனோ இப்பகுதியில் என்னை ஈடுபடுத்திக்கொள்ள ஒரு தயக்கமிருந்தது.

தரையில் விழும் இவ்வனுபவம் இன்று வெகுவாய்ப் பரவிப் பிரபலமடைந்து வருகிறது. இதைக் குறித்த மக்கள் எண்ணம் பெருமளவில் வேறுபட்டுள்ளது. சிலர் இதைத் தேவனிடமிருந்து வரும் ‘‘புதிய காரியம்’’ என அணைத்துக்கொள்கின்றனர்; மற்றவர்களோ இதைப் பிசாசின் வஞ்சகமென வெறுத்துத் தள்ளுகின்றனர். எதுதான் சரி?

தேவ வசனத்தில் ‘‘ஆவியில் விழுதல்’’ என்று ஒருமுறை கூட குறிப்பிடப்படாதிருப்பது ஆச்சரியமானது. இவ்வனுபவத்தைச் சரி



யென்று சொல்லப் பொதுவாகக் கையாளப்படும் வசனங்கள் எதுவும் இதைக்குறித்த நேரடியான தெளிவான போதனையைத் தரவில்லை. அவற்றில் முக்கியமானவற்றை இங்கு கவனிப்போம்—

தேவ மகிமையின் தரிசனத்தைக் கண்டு தேவ சத்தத்தைக் கேட்டபோது தீர்க்கன் எசேக்கியேல் முகங்குப்புற விழுந்தான். ஆனால் ஆவி அவனுக்குள் வந்தபோதோ அது அவனைக் ‘‘காலூன்றி’’ நிற்கும்படிச் செய்தது (எசேக் 1:28-2:2). அப்படியே, தானியேலும் பெரிய தரிசனமொன்றைக் கண்டு பரம சத்தத்தைக் கேட்டபோது, தேவனுக்கு முன் தரையிலே முகங்குப்புற விழுந்தான். ஒரு கை அவனைத் தொட்டபோதோ அவனுக்குக் ‘‘காலூன்றி நில்’’ என்று சொல்லப்பட்டது (தானி 10:8-11). இயேசுவின் மகிமையான தரிசனத்தை யோவான் கண்டபோது செத்தவன்போல் அவர் பாதத்தில் விழுந்தான். அவரோ தமது வலது கரத்தை அவன்மீது வைத்துப் ‘‘பயப்படாதே’’ என்றார் (வெளி 1:17). தீர்க்கதரிசிகளின் இவ்விதத் தரிசன அனுபவங்கள் இணையற்றவை; இவற்றிற்கும் ‘‘ஆவியில் விழுதல்’’ எனப்படுவதற்கும் ஒன்றும் சம்பந்தமில்லை. 120 ஆசாரியரின் ஆலய அனுபவம் 120 சீடரின் மேலறை அனுபவத்திற்கு அடையாளமானது. இரண்டிலும் யாருமே ‘‘ஆவியில் விழவில்லை’’ (2 நாளா 5:12-14; அப் 2:1-4).

மறுரூப மலையில் சீடர் தரையில் விழுந்தனர் (மத் 17:1-6). பூமியதிர்ந்து கல்லறை திறந்தபோது போர்ச் சேவகர் மரித்தவர்போல் கீழே விழுந்தனர் (மத் 28:2-4). இரண்டு சம்பவங்களும் ‘‘பயத்தைக்’’ குறிப்பவை. மாற்கு 3:11; 9:26,27 ஆகிய வசனங்கள் குறிப்பிடுவது பிசாசு பிடித்தவனின் அலைக்கழிப்புகள். சபையைத் துன்பப்படுத்தும் அகம்பாவியாகச் சவுல் கீழே விழுந்தான் (அப் 9:4; 26:14). இயேசுவைப் பிடிக்கவந்த போர்ச் சேவகர் கீழே விழுந்ததில் ஆவியானவரைப் பற்றிப் பேச்சில்லை (யோ 18:1-6). 1 கொரிந்தியர் 14:23-25இல் வாசிப்பது தானாகவே அவிசுவாசியொருவன் நெடுஞ்சாடையாய் விழுவதைக் குறிக்கிறது. முழங்கால்படியிடுவதுபோல் ‘‘நாமாகவே’’ தேவனுக்குமுன் நெடுஞ்சாடையாய், சாஷ்டாங்கமாய் விழுவதைப் பற்றி வேதத்தில் நிறைய வாசிக்கிறோம் (யோபு 1:20; சங் 72:11; மத் 2:11; யோ 11:32; வெளி 4:10; 19:4).

எனவே, ''ஆவியில் விழுதல்'' என்று சொல்லப்படும் செயலுக்கு வேதத்தில் தெளிவான, முடிவான, நிறைவான சான்றில்லை. அதே வேளையில், ஒருவன்மீது ஆவியானவரது வல்லமை அசாதாரணமாய் அளவில்லாமல் இறங்குகையில் அவன் தனது உடற்பலத்தை இழந்து விழுவதற்கான வாய்ப்பே இல்லை என்றும் சொல்லிவிடமுடியாது. கடந்தகாலப் பெரிய எழுப்புதல்களில் இது நடந்திருக்கிறது. ஜான் வெஸ்லி, ஜார்ஜ் வீட்பீல்டு, சார்லஸ் பின்னி ஆகியோரது ஊழியங்கள் எடுத்துக்காட்டுகளாகும். ஆனாலும், அவர்களது கூட்டங்களில் பெரும்பாலும் பகடி பண்ணினோரும் எதிர்த்தோருமே தேவ வல்லமையால் தாக்கப்பட்டு விழுந்தனர். எங்கள் முகாம்களிலும் அருள் மாரி பொழியும் வேளைகளில் அங்குமிங்கும் ஒரு சிலர் விழுவதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் நேரடியான தெளிவான வேத வசனச் சான்று இல்லாததால், இவ்வனுபவத்தைக் கிறிஸ்தவ வாழ்க்கைக்குத் தேவையானதொன்று என்றோ, அதிகக் கவனஞ்செலுத்தவேண்டியதொன்றாகவோ கணிப்பதில்லை. பிசாசானவன் போலிச்சரக்கு மன்னன். அஞ்ஞான மார்க்கங்களில் சாதாரணமாய்க் காணப்படும் ஆவிகள் பிடிப்பினால் மயக்கம் (Possession Trance) என்பதைக் குறித்தும் எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

கூட்டத்திலுள்ள மற்றவர்களைப் போன்று தானும் அனுபவிக்க வேண்டுமென்ற ஆசையின் நெருக்கம், அல்லது அது எப்படித்தானிருக்குமென்று பார்க்கலாமே என்றவொரு நாட்டம், இவை போன்றவையெல்லாம் ஒருவன் கீழே விழுவதற்குக் காரணங்களாய் அமையலாம். மக்களை வரிசையாய் நிற்கச் செய்வது, தலைக்காயம் ஏற்பட்டுவிடாமலிருக்கத் தாங்குவோரைப் பின்னால் நிறுத்துவது, பிரசங்கியார் ஒவ்வொருவரிடமாய் அதை நிகழ்த்தச் செல்வது போன்றவையெல்லாம் ஒருவிதமான எதிர்பார்ப்புச் சூழலை எளிதில் உருவாக்கிவிடும். மனோதத்துவமும், கூட்டவுணர்வும் பெரிதும் செயல்படும். வேதத்தில் பெரும்பாலும் முகங்குப்புற விழுந்தார்கள் என்றிருக்கும்போது, இன்று ஏன் எல்லோருமே மல்லாக்க விழுகிறார்களென்பதும் இன்னொரு கேள்வி.

சுகத்திற்காகவும், ஆவியினால் நிரப்பப்படவும், ஜெபிக்கவும், ஊழியத்திற்காய் நியமிக்கவுந்தான் பிரதானமாகக் ''கைகளை வைக்குதல்'' ஏற்படுத்தப்பட்டுள்ளது. மக்களைத் தலையில் தட்டவோ, அடிக்கவோ, நெற்றியில் வைத்துத் தள்ளவோ அதைத் துர்ப்பிரயோகம்



செய்யக்கூடாது. மக்கள்மீது அப்போஸ்தலர் கைவைத்தபோது அவர்கள் சுகமடைந்தார்கள், நிரப்பப்பட்டார்கள், அல்லது வரமருள் பெற்றார்கள்; கீழே விழவில்லை. நடபடிகளிலும், நிருபங்களிலும் நாம் இப்படித்தான் வாசிக்கிறோம். ''விசேஷித்த ஆசீர்வாதம்'' எனப்படும் ஒன்றை நீங்கள் இழந்துவிடுகிறோமோ என்று நினைத்தாலும் வேத வரம்புகளுக்குள் நின்றுவிடுவதுதான் எப்பொழுதுமே பாதுகாப்பு.

ஆவிக்குள் பிழைத்திருங்கள், ஆவிக்கேற்றபடி நடந்துகொள்ளுங்கள், ஆவிக்குள் ஜெபம்பண்ணுங்கள், ஆவியோடு ஆராதியுங்கள் என்று வேதம் கட்டளையிடுகிறது (கலா 5:25,16; எபே 6:18; பிலி 3:3). இந்த உள்ளான ஆன்மீகப் பயிற்சிகளில்தான் கவனம் செலுத்த வேண்டுமே ஒழிய வெறும் உணர்ச்சிவச அனுபவங்களை நாடி அலையக்கூடாது. ''ஆவிக்குள்'' அல்லது ''ஆவியில்'' எனும் வேதப் பதங்களைக் கொண்டு தனிப்பட்ட அனுபவங்களைத் திருமுழுக் காட்டி அவற்றைப் பொதுவானவைகளாக்குவதை நான் விரும்பவில்லை.

## ௪5. பரிசுத்த சிரிப்பு என்றால் என்ன?

ஆவியின் அபிஷேகத்தை விசுவாசிக்கும் சில குழுக்களிலும், பெந்தெகொஸ்தே வட்டாரங்களிலும் மக்கள் அடக்க முடியாத ஒரு விதச் சிரிப்பை அனுபவிப்பதாகவும், அந்நிலையில் ஓரிரு மணிநேரங்கள்கூடத் தரித்திருப்பதாகவும் சொல்லப்பட்டு அது ''பரிசுத்த சிரிப்பு'' என்றழைக்கப்படுகிறது. பரிசுத்த ஆவியானவர் ஒருவரை ஆனந்த தைலத்தால் அபிஷேகிக்கும்போது கர்த்தரில் களிகூருவது இவ்விதம் வெளிப்படுவதாகக் கூறப்படுகிறது. இவ்விதக் கூட்டங்களில் இச்சிரிப்பின் அனுபவம் பெறாதவர்கள் மகிழ்ச்சியைப் பூரணமாய் அனுபவிக்கவில்லையென்று சிரிப்பவர்களால் கணிக்கப்படுகிறார்கள். நவீனமானவைகளில் நாட்டங்கொண்டு விசுவாசிகளில் பலர் இப்பரவசத்திற்குள் இழுக்கப்படுகின்றனர்.

எக்காலத்தை எடுத்துக்கொண்டாலும் ஏதாவதொரு அலையானது சபையை மோதிக்கொண்டிருந்திருக்கிறது என்பதே சபைச் சரித்திரத்தில் நாம் காண்பதாகும். ஆனால் இந்த அலைகள் நலமானவையா

எனத் திருவசன வெளிச்சத்தில் அலசிப் பார்ப்பது சபைத்தலைவர்கள், முதிர்ந்த விசுவாசிகள் ஆகியோரின் பொறுப்பாகும். ''நாம் இனிக் குழந்தைகளாயிராமல்... வஞ்சிக்கிறதற்கேதுவான தந்திரமுள்ள போதகமாகிய பலவித காற்றினாலே அலைகளைப்போல அடிபட்டு அலைகிறவர்களாயிராமல்'' சீராக வளரவேண்டும் (எபே 4:13,14).

சிரிப்பு நல்ல மருந்து போன்றது! ''மனமகிழ்ச்சி நல்ல ஔஷதம்'' (நீதி 17:22). நகைச்சுவையான நண்பரை விரும்பாதோர் யார்? எவரையும் புண்படுத்தாத வேடிக்கையும், நகைச்சுவையும் கிறிஸ்தவ ஐக்கியத்திற்குப் பொருந்தாததல்ல. தேவ மக்களின் பழைய ஏற்பாட்டுச் சரித்திரத்தில் அவர்களது கொண்டாட்டங்களில் சிரிப்பு இடம் பெற்றிருந்தது (சங் 126:1-3). யோபு யாவற்றையும் திரும்பப் பெறுவான் என்பதை முன்னறிவித்த பில்தாத், ''இனி அவர் உமது வாயை நகைப்பினாலும், உமது உதடுகளைக் கெம்பீரத்தினாலும் நிரப்புவார்'' என்றான் (யோபு 8:21). ஆனால் பழைய ஏற்பாட்டிலோ புதிய ஏற்பாட்டிலோ ஆராதிப்பதைக் குறித்துப் பேசும்போது கைதட்டுங்கள், கைகளை உயர்த்துங்கள், வாத்தியங்களை இசையுங்கள், கெம்பீர சத்தமிடுங்கள், நடனமாடுங்கள் என்றெல்லாம் குறிப்படப்பட்டுள்ளதுபோல் ''சிரியுங்கள்'' என்று எங்கும் சொல்லப்படவில்லை. அப்போஸ்தலர் நடபடிகளில் மக்கள் மீது ஆவியானவர் இறங்கிய ஒரு சம்பவத்தில்கூட சிரித்தார்கள் என்று சொல்லப்படவில்லை. ஆவியில் நிறைந்திருப்பதை வலியுறுத்தும் எபேசியர் 5:18-21இலும், அபிஷேகம் பெற்றோரின் கூடுகையைக் குறிப்பிடும் 1 கொரிந்தியர் 14:26இலும் சிரிப்பைப் பற்றிப் பேச்சே இல்லை.

கர்த்தரில் உண்மையாய்க் களிகூருவது அவரது சித்தத்திற்கும் வழிகளுக்கும் அடிபணிதலின் வெளிப்பாடாகும். அது நமது அனுதின வாழ்வில் காணப்படும் திருப்தி, திட நம்பிக்கை எனும் ''நிலை'' ஆகும். நம்மைச் சுற்றியுள்ளோர் இதைக் கவனியாது விடமுடியாது. பாடுகள், வேதனைகள் நடுவிலும் இம்மகிழ்ச்சி நிலைத்து நிற்கும் (அப் 13:50-52; 16:22-25; லூக் 6:22,23).

சிரிப்பை மகிழ்ச்சியின் வெளிப்பாடு என்று சொல்லிவிடமுடியாது. ''நகைப்பிலும் மனதுக்குத் துக்கமுண்டு; அந்த மகிழ்ச்சியின் முடிவு சஞ்சலம்'' (நீதி 14:13). தேவன்தரும் நிசமான நிரந்தரமானவற்றிற்குப் பதிலாக மலிவான மாற்றுக்களைக் கொடுத்து மக்களை மயக்குவதில் பிசாசுக்கு நிகரில்லை.



புதிய ஏற்பாட்டுச் சபையின் ஆராதனைக் கூடுகையைப் பொறுத்த வரை கூட்டத்தினர் அனைவரும் அல்லது பெரும்பகுதியினரும் ''சிரிப்பின் ஆவியினால்'' தாக்கப்பட்டுச் சிரித்துக்கொண்டிருக்கிறார்களென்றால் அது விபரீதம்தான். பவுலோ பேதுருவோ சென்றவிடமெல்லாம் சபையினரைச் சிரிப்புக்குள் வழிநடத்தினர் எனக் கற்பனை செய்தும் பார்க்க முடியுமா?

களியாட்டு இசைகளும், அஞ்ஞான மார்க்கங்களில் விழிப்புணர்வும் பெருகியுள்ள இக்காலத்தில், நமது சபைக் கூடுகைகளில் பயபக்தியும், தொழுகைகளில் பணிவுணர்வும் நிறைந்து காணப்படுவது அத்தியாவசியம். மனோதத்துவ வித்தைகளை எவ்விதத்திலும் கையாளாதபடி தொழுகை நடத்துவோர் பார்த்துக்கொண்டு, தேவ மக்களை அவரது மேன்மையையும் தங்களது ஒன்றுமில்லாமையையும் உணர வழிநடத்தவேண்டும். இவ்விதப் பாணியில் ஒரு வேளை கண்ணீர் நிறைந்து வெளிப்படும் மகிழ்ச்சி இன்னும் ஆழ்ந்ததாயிருக்கும் (லூக் 6:21ஆ; யாக் 4:9,10).

சிரிப்புக்குள் நடத்துவோரைத் திருவசனச் சான்று காட்டச் சொன்னால், ''இது தேவன் செய்யும் புதிய காரியம்'' என்று உடனே சொல்லிவிடுகின்றனர். இப்படி வேதத்திற்குக் கூடுதலாக ஒவ்வொன்றையும் ஒவ்வொரு குழுவும் ''தேவனிடமிருந்து வரும் புதிய காரியம்'' என்று அங்கீகரித்து, அறிமுகம் செய்யத் துவங்கினால் நமது விசுவாசத்திற்கும் நடக்கைக்கும் அளவுகோல்தான் எது? அடித்தளத்தையே அசைக்கிறவர்களாகிவிடுவோமே!

## 46. அக்கினி அபிஷேகம் என்றால் என்ன?

மத்தேயுவும் லூக்காவும் பரிசுத்த ஆவியானவரோடு அக்கினியையும் குறிப்பிட்டனர்; மாற்குவும் யோவானும் அக்கினியைக் குறிப்பிடவில்லை (மத் 3:11; லூக் 3:16; மாற் 1:8; யோ 1:33). யோவான் ஸ்நானன் சொன்னதை இயேசு மேற்கோள் காட்டியபோது அக்கினியைக் குறிப்பிடவில்லை (அப் 1:5). ஏனென்றால், ஆவியின் அபிஷேகம் விசுவாசிகளுக்குரிய ஆசீர்வாதம்; அக்கினியின் எரிப்பு அவி

சுவாசிகளுக்கு வரும் தண்டனை! பெந்தெகொஸ்தேயைத் தொடர்ந்து நடபடிகளில் முதல் முறையாக ஆவியானவரைப் பெற்றுக்கொண்ட நான்கு சம்பவங்களில் ஒன்றிலும் லூக்கா அக்கினியைக் குறிப்பிட வில்லை (8:16,17; 9:17; 10:44; 19:6).

ஆவியானவர்மூலம் கிறிஸ்து செய்யப்போகும் ஊழியத்தை யோவான் ஸ்நானன் இவ்விதம் முன்னறிவித்தான்: ''தூற்றுக்கூடை அவர் கையில் இருக்கிறது; அவர் தமது களத்தை நன்றாய் விளக்கி, தமது கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்''—தூற்றும் காற்றின் பணி! ''பதரையோ அவியாத அக்கினியினால் சுட்டெரிப்பார்''—எரிக்கும் அக்கினியின் பணி! (மத் 3:12). காற்றும் அக்கினியும் அடையாளங்களாக பெந்தெகொஸ்தே நாளில் காணப்பட்டன (அப் 2:2,3). அடுத்தடுத்து ஆவியானவர் ஊற்றப்பட்ட சம்பவங்களில் இவை இல்லை.

ஆவியானவர் தேவன். அவர் ''பட்சிக்கிற அக்கினி'' (எபி 12:29). அவர் தமது ''எரிச்சலினால்'' நமது வாழ்விலுள்ள விக்கிரகங்கள் அனைத்தையும் பட்சிக்கிறார் (உபா 4:23,24; யாத் 20:4,5). அவை யாவும் எரிக்கப்பட நமக்கும் கட்டளை கொடுக்கிறார் (உபா 7:5). நமது இருதயத்தில் அவருக்குரிய இடத்தை எதுவும், எவரும் எடுக்கப் பொறுக்கமாட்டார். எல்லாவற்றிலும் அவரே முதல்வராயிருக்கவேண்டும்! (கொலோ 1:18). நாம் உலகத்தோடு சிநேகங்கொள்ளும்போது அவரது கோபம் பற்றியெறியும் (யாக் 4:4,5).

தேவன் ''புடமிடும் அக்கினி'' போன்றவர் (மல் 3:3,2). நம்மை வெள்ளியைப்போல புடமிட்டு நம்மைக் கனத்துக்குரிய பாத்திரமாகச் செய்கிறார் (2 தீமோ 2:21). புடமிடப்படும்போது வேதனையாகத் தானிருக்கும். அது பாடுகளின் ஞானஸ்நானம்! (லூக் 12:49,50). ஆனால் புடமிடும் குகை வழியே நாம் செல்லுகையில், பொன்னிலும் விலையேறப்பெற்ற நமது விசுவாசம் இன்னும் சுத்தமாகும் (1 பேது 1:6,7).

''பரிசுத்த ஆவியானவரின் ஐக்கியத்தில்'' நாம் தினமும் நடக்கையில், நாம் இயேசு போலாகும்வரை ஆவியானவர் அக்கினியைப் போல நம்மைச் சுத்தம் பண்ணிக்கொண்டேயிருப்பார் (2 கொரி 3: 17,18). அக்கினி அபிஷேகம் என்று தனி அனுபவம் எதுவும் கிடையாது.



ஜெபிக்கும்போது அல்லது துதிக்கும்போது தங்கள் உடலில் ஓர் அனலை உணர்ந்ததாகச் சிலர் சாட்சி பகருகின்றனர். இவ்வித உணர்ச்சியான அனுபவங்களுக்கு எதிராக ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் இதை அக்கினி அபிஷேகம் என்று சொல்வதற்கு வேதத்தில் இடமில்லை.

## 47. ஆவியானவருக்கு விரோதமான தூஷணம் யாது?

''மனிதர் செய்யும் எல்லாப் பாவங்களும் அவர்கள் தூஷிக்கும் எந்தத் தூஷணங்களும் அவர்களுக்கு மன்னிக்கப்படும்; ஒருவன் பரிசுத்த ஆவிக்கு விரோதமாகத் தூஷணம் சொல்வானாகில், அவன் என்றும் மன்னிப்படையாமல் நித்திய ஆக்கினைக்குள்ளாயிருப்பான்'' என்றார் இயேசு (மாற் 3:28,29; மத் 12:31,32; லூக் 12:10).

இவ்வார்த்தைகளைப் பெந்தெகொஸ்தேயினர் சில பெந்தெகொஸ்தே வெளிப்பாடுகளைப் பெந்தெகொஸ்தேயினரல்லாதோர் சரியானதென்று ஒத்துக்கொள்ளத் தவறும்போது அன்னாருக்கெதிராகப் பயன்படுத்துகின்றனர். ஆனால் இவ்வளவு கடினமாக வார்த்தைகளை இயேசு பயன்படுத்தியதின் உண்மையான கருத்துதான் என்ன?

தூஷணத்திற்கு மரணமே தண்டனையாயிருந்தது. பழைய ஏற்பாட்டின் பிரமாணத்தின்படி அதற்கு நிவாரணமே கிடையாது (லேவி 24:10-16). ஆனால், இயேசு கிறிஸ்துவின் இரத்தம் ''சகல'' பாவங்களையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும் என்ற புதிய உடன்படிக்கையின் வாக்குத்தத்தத்தைப்பற்றி என்ன?

தமக்கு விரோதமான தூஷணத்தைவிட ஆவியானவருக்கு விரோதமான தூஷணம் கொடூரமானது என்று இயேசு சொன்னதேன்?

மீட்பின் திட்டத்தை உருவாக்கியது பிதாவானவர்; அவரது திட்டத்தை நிறைவேற்றியது குமாரனானவர்; மீட்பை அமுலாக்குவது ஆவியானவர். பாவத்தைக் குறித்து நம்மைக் கண்டித்துணர்த்தி மனந்திரும்புதலுக்குள் நடத்தக்கூடிய ஒரே சக்தி ஆவியானவரே (யோ 16:7-11). அவரது உதவியின்றி ஒருவராலும் இயேசுவைக்

கர்த்தரென்று கூப்பிட முடியாது (1 கொரி 12:3). ஒருவன் ஆவியான வரைத் தூஷித்துவிட்டால் அவனை மனந்திரும்பச் செய்ய யாரு மில்லையே. இயேசு கிறிஸ்து தேவனது முதலாம் தேற்றரவாளர். பரிசுத்த ஆவியானவர் தேவனது இரண்டாம் தேற்றரவாளர். தேவனது ஆதீனத்தில் ''மூன்றாம்'' தேற்றரவாளர் கிடையாது!

பரிசுத்த ஆவியானவர் தேவனாகையால் எப்பாவமும் அவருக்கு விரோதமானதே. அவரை எதிர்க்கவோ, துக்கப்படுத்தவோ, அவித்துப் போடவோ கூடாதென அடிக்கடி நாம் எச்சரிக்கபட்டுள்ளோம். ஆனால் தூஷிப்பதென்றால் கெட்ட வார்த்தைகளை அருவருப்பாய்ப் பேசுவ தாம். மக்களும் வேதபாரகரும் இயேசுவைப் பைத்தியக்காரனென்றும் பிசாசு பிடித்தவனென்றும் தீர்த்தபோதுதான், அவர் ஆவியானவருக் கெதிரான தூஷணத்தைக் குறித்துப் பேசினார். அதாவது அவர்கள் பரிசுத்த ஆவியானவரையே பெயல்செபூல் என்றழைத்துவிட்டனர் (மாற் 3:21,22, 28-30).

ஆவியானவருக்கெதிரான தூஷணத்தைக் குறித்து எச்சரித்ததை அடுத்து இயேசு ''கெட்ட மரம்... விரியன்பாம்புக் குட்டிகள்... பொல் லாத பொக்கிஷம்'' ஆகிய உவமானங்களைக் கூறினார் (மத் 12: 33-35). அவரை இவ்விதமாய்க் குற்றஞ்சாட்டியவர்களைப் ''பொல் லாத விபசாரச் சந்ததியார்'' என்றழைத்தார் (வச 39). இதிலிருந்து, அவர்களது தூஷணம் வெறும் வார்த்தைகளல்ல, அவர்களது உள்ளான குணத்தின் வெளிப்பாடு எனத் தெளிவாகிறது.

இப்பாவத்தை எபிரெயர் 6:4-6; 10:26-29 ஆகிய பகுதிகள் குறிப் பிடுகின்றன. ''கிருபையின் ஆவியை நிந்தித்து... தேவகுமாரனை அவமானப்படுத்துவோருக்கு'' மனந்திரும்புதல் கூடாதது என்றும், அவர்களுக்கு நியாயத்தீர்ப்பு கொடியது என்றும் நிருப ஆக்கியோன் சுட்டிக்காட்டுகிறான். இது கிறிஸ்துவை வேண்டுமென்றே பிடிவாத மாகப் புறக்கணித்துச் சோரம் போகுதலைக் குறிக்கிறதென்பது தெளி வல்லவோ?

''ஆவியானவரது செயல்பாட்டை ஒருவன் மறுப்பது அறியாமை யினாலா அகங்காரத்தினாலா என்று அறிந்தவர் தேவன் ஒருவரே'' என மதிப்பிற்குரிய பெந்தெகொஸ்தே தலைவருள் ஒருவரான ஸ்டான்லி ஹார்ட்டன் எச்சரித்துள்ளார். பெந்தெகொஸ்தே அனு பவத்தைப் பிசாசின் செயல் என்று குற்றஞ்சாட்டி, ஆனால் பின்னர்



தங்களது கண்கள் திறக்கப்பட்டு மனந்திரும்பி ஆவியின் அபிஷேகம் பெற்ற ஆயிரக்கணக்கானோர் உண்டு. ''முன்னே நான் தூஷிக்கிற வனாயிருந்தேன்; அப்படியிருந்தும், நான் அறியாமல் அவிசுவாசத் தினால் அப்படிச் செய்தபடியினால் இரக்கம் பெற்றேன்'' என்றான் பவுல் (1 தீமோ 1:13).

ஆவியானவரது வெளிப்பாடுகள் என்று அழைக்கப்படும் அநேக வினோதமான காரியங்கள் இன்று காணப்படுகின்றன. ஆனால் வேதத் தில் அவைகளுக்குத் தெளிவான சாட்சி இல்லாத பட்சத்தில் அவை களை அப்படியே ஏற்றுக்கொள்ள எவரும் கடமைப்பட்டவரல்ல. கவனமாயிருக்கவேண்டும்; அதே வேளையில் காலத்திற்குமுன் ஒன் றையும் முடிவாக நியாயந்தீர்த்துவிடவும் கூடாது!

(32ஆம் கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

## ௪8. விசுவாசிகளுக்குப் பிசாசு பிடிக்குமா?

கீழ்வரும் தெளிவான திட்டமான தேவ வாக்குகளை நோக்குங் கால், எப்படித்தான் தேவனது பிள்ளை ஒருவனுக்குப் பிசாசு பிடிக் குமோ என்று நினைத்தும் பார்க்கமுடியவில்லை—

''யாக்கோபுக்கு விரோதமான மந்திரவாதம் இல்லை; இஸ்ரவே லுக்கு விரோதமான குறி சொல்லுதலும் இல்லை'' (எண் 23:23).

''சத்துருவின் சகல வல்லமையையும் மேற்கொள்ள உங்களுக்கு அதிகாரம் கொடுக்கிறேன்; ஒன்றும் உங்களைச் சேதப்படுத்தமாட் டாது'' (லூக் 10:18,19).

''என் ஆடுகள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன... அவை களை எனக்குத் தந்த என் பிதா எல்லாரிலும் பெரியவராயிருக்கிறார்; அவைகளை என் பிதாவின் கையிலிருந்து பறித்துக்கொள்ள ஒருவனா லும் கூடாது'' (யோவா 10:27-29).

''உலகத்திலிருக்கிறவனிலும் உங்களிலிருக்கிறவர் பெரியவர்'' (1 யோ 4:4).

விசுவாசியொருவன் பிசாசுகளால் வாதிக்கப்படலாம்; அவனது வாழ்க்கையின் சில பகுதிகளில் பிசாசுகளால் வெகுவாய்ப் பாதிக்கவும்படலாம்; ஆனால் ஒருபோதும் அவன் ஓர் அவிசுவாசியைப்போல் பிசாசினால் பிடிக்கப்படமுடியாது. நாம் பிசாசினால் வஞ்சிக்கப்படலாம், நெருக்கப்படலாம், ஆனால் பிடிக்கப்படமுடியாது (மத் 24:24; 1 பேது 5:8,9). ஆவியானவரின் நடத்துதலைப் பின்பற்றத் தவறும்போது பிசாசுகள் நமது எண்ணங்கள், உணர்வுகள், செயல்கள் ஆகியவற்றைப் பாதிக்கும். ஒருமுறை பேதுரு தனது சிந்தனையில் சாத்தானால் ஆட்டிப்படைக்கப்பட்டான் (மத் 16:23). அனனியா, சப்பீராளைப் பெந்தெகொஸ்தேக்குப் பின்னுள்ள ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம் (அப் 5:3,9). ஆனால் இவையொன்றும் பிசாசு பிடித்தலோடு சேராது.

நமது உடல் பரிசுத்த ஆவியானவரின் ஆலயமாயிருக்கிறது. பரிசுத்த ஆவியானவரும் அசுத்த ஆவிகளும் சேர்ந்து குடியிருக்க முடியாது (2 கொரி 6:15,16). ஆவியானவரை நாம் எதிர்க்கலாம், துக்கப்படுத்தலாம், அணைத்துவிடலாம். ஆனால் பாவம் செய்யும்போது அவர் நம்மை விட்டுப் போய்விடுவதில்லை. பழைய உடன்படிக்கையின் காலத்தில்கூட, தாவீது பாவம் செய்தபின், பரிசுத்த ஆவியைத் திரும்பப் பெற்றுக்கொள்ளும்படி அவன் ஜெபிக்கவில்லை. மாறாக, ‘‘உமது பரிசுத்த ஆவியை என்னிலிருந்து எடுத்துக்கொள்ளாமலிரும்’’ என்றுதான் மன்றாடினான் (சங் 51:11).

தேவாலயத்தைக் குறித்து இயேசு பக்திவைராக்கியம் கொண்டிருந்தார் (மத் 21:12,13). அப்படியே ஆவியானவரும் நமது உடல்களைக் குறித்து வைராக்கிய வாஞ்சையாயிருக்கிறார். இயேசுவின் விலைமதியா இரத்தத்தால் கிரயங்கொள்ளப்பட்ட ஓர் உடலை தேவனது பரம எதிரிக்காக ஆவியானவர் காலி செய்யமாட்டார் (1 பேது 1:18,19; எபே 4:30). வாடகைக்காரரைக் கிளப்புவதே இந்நாட்களில் கடினம்! ஒரு குறைந்த சக்தியானது தேவனாகிய சொந்தக்காரரைக் காலிசெய்து வெளியனுப்புவது சாத்தியந்தானோ? ‘‘வெள்ளம்போல் சத்துரு வரும்போது கர்த்தருடைய ஆவியானவர் அவனுக்கு விரோதமாய்க் கொடியேற்றுவார்’’ என்றிருக்கிறதே (ஏசா 59:19).

விசுவாசிகள் எப்பொழுதும் ஆன்மீகப் போராயுதங்களணிந்து எதிரியை முறியடிக்க விழிப்புடனிருக்கவேண்டுமென எபேசியர்



6:10-18 போன்ற பகுதிகள் வலியுறுத்துகின்றன. ஆவியானவராலும் வசனத்தாலும் நிறைந்திருப்பது பிசாசு பிடித்தலுக்கு எதிரான ஆயுள் காப்பாகும். விசுவாசிகள் பின்வாங்கி, மற்ற விசுவாசிகளின் ஐக்கியத்திலிருந்து தங்களைத் துண்டித்துக்கொண்டு, பாவக்காரியங்களிலும் மந்திரக் காரியங்களிலும் ஈடுபட்டு, வசன எச்சரிப்புகளுக்கும் ஆவியானவரின் சத்தத்திற்கும் நெடுகவே செவியடைக்கும்போது, அவர்கள் தாங்களாகவே ஆபத்தான எல்லைக்குள் நடைபோடுகிறார்கள்.

விசுவாசிகள் சிலருக்குப் பிசாசு பிடித்திருப்பதாகச் சில தகவல்கள் அங்குமிங்கும் இந்நாட்களில் சொல்லப்படுகின்றன. பல காரியங்களை இங்கு அலசிப்பார்க்கவேண்டியதிருப்பதால் அவ்வளவு சுலபமாக இதற்கு விளக்கம் கொடுத்துவிடமுடியாது. புதிய உடன்படிக்கை அமுலான பின்னர் வேதத்தில் விசுவாசிகளுக்குப் பிசாசு பிடித்ததென்று தெளிவான எடுத்துக்காட்டு ஒன்றுகூட இல்லாத பட்சத்தில், ஆங்காங்கே கேள்விப்படும் சம்பவங்களை வைத்துக்கொண்டு, உபதேச சத்தியமாக ஒன்றையும் நிலைநாட்டமுடியாது.

விசுவாசிகளுக்குப் பிசாசு பிடிக்குமா? பிடிக்காது, ஆனால் விழித்திருங்கள்!

## 49. நாம் பிசாசைக் கட்ட முடியுமா?

இன்று நாம் சாத்தானைக் கட்டுவது சாத்தியமுமல்ல, அது திருவசனத்தில் போதிக்கப்பட்டதுமல்ல. ஆனால் சுகமளிக்கும் ஊழியங்கள் பலவற்றில் இது செய்யப்படுகிறது.

கிறிஸ்துவின் பூவுலக ஊழியக்காலத்தில் பிசாசுகள் மீதுள்ள தேவ வல்லமை அபாரமாய்க் காணப்பட்டது. ‘‘பிசாசின் கிரியைகளை அழிக்கும்படிக்கே தேவ குமாரன் வெளிப்பட்டார்’’ (1 யோ 3:8). அப்படியிருந்தும் இயேசு பிசாசை அதட்டினார், துரத்தினார், ஒருபோதும் கட்டவில்லை.

அப்படியே ஆதிச்சபையின் ஊழியத்திலும் பிசாசுகள் மீது பெருவாரியாய் தேவ வல்லமை வெளிப்பட்டது (அப் 8:7; 19:12).

ஆனாலும் அப்போஸ்தலரோ சீடரோ ஒருமுறைகூட பிசாசைக் கட்ட முயலவில்லை. ஏனென்றால் ''பிசாசுகளைத் துரத்துங்கள்'' என்று மட்டுமே ஆண்டவரிடம் கட்டளை பெற்றிருந்தனர் (மத் 10:8; மாற் 16:17).

பிசாசை என்ன செய்யவேண்டும் என்று வேதம் தெளிவாகப் போதித்துள்ளது: பிசாசுக்கு இடங்கொடாதிருங்கள் (எபே 4:27); பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள் (எபே 6:11; யாக் 4:7); பிசாசுக்கு எதிராக விழிப்பாயிருங்கள் (1 பேது 5:8). வேத வரம்புகளை மீறுவது வேண்டாத துணிகரம், அது ஆபத்து.

பிரசங்கிகள்தான் எத்தனை முறை பிசாசைக் கட்டியிருக்கிறார்கள்! அவனை அப்புறம் அவிழ்த்துவிட்டது யார்? எப்பொழுதும்போல் விடுதலையாய்த் திரிகிறானே. முடிச்சு சரியாய்ப் போடவில்லையோ?

இயேசு பேதுருவை நோக்கி, ''பரலோக ராஜ்யத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன்; பூலோகத்தில் நீ கட்டுகிறது எதுவோ அது பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும்'' என்றார் (மத் 16:19). பிசாசைக் கட்டுவதைக் குறித்து இங்கு எந்தக் குறிப்புமில்லை. கட்டப்படவும் கட்டவிழ்க்கப்படவும் பிசாசு ''பரலோகத்தில்'' உண்டோ? பூவுலகில் நமக்கிருக்கும் பரலோக அதிகாரத்தையே இவ்வசனம் போதிக்கிறது. ஒழுங்குக்கடுத்த காரியங்களில் இது சரி, இது தவறு என நிர்ணயிக்கும் அதிகாரத்தையும் இது குறிப்பிடுகிறது. திருச்சபையின் தீர்ப்பைப் பரலோகம் அங்கீகரிக்கிறது (மத் 18:17,18).

''சாத்தானுடைய அதிகாரத்தைவிட்டு தேவனிடத்திற்கு'' மக்களை தேவ ஆவியால் விடுவித்து அவர்களைக் கிறிஸ்துவிடம் சேர்ப்பதற்குத்தான் ''பலவானை முந்திக் கட்டுதல்'' என்று பெயர் (மத் 12: 28-30; அப் 26:18). சுவிசேஷந்தான் தேவ வல்லமையாகும்; அதை ஆவியின் வல்லமையோடு பிரசங்கிக்கையில் அது சாத்தானின் அடிமைத்தனத்திலிருந்து மக்களை விடுவிக்கிறது (ரோ 1:16; அப் 1:8). சாத்தானைவிடப் பெரிய கிறிஸ்துவின் சிறைப்பிடிக்கும் வல்லமையால் ஆத்துமாக்கள் விடுவிக்கப்படுகையில் சாத்தான் கட்டுண்டவன்போல் நிற்கிறான் (1 யோ 4:4; அப் 13:6-12). எனவே இங்கும் சாத்தானைக் கட்டுங்கள் என்று நேரடிப் போதனை இல்லை.



பிசாசு கட்டப்பட நாம் ஆயிரமாண்டு அரசாட்சிக்காய்க் காத்திருக்க வேண்டும். ''பாதாளத்தின் திறவுகோலையும் பெரிய சங்கிலியையும்'' கொண்டுவந்து ஒரு தூதன் அந்த வேலையைச் செய்வான்! அதற்குப் பிறகும் மக்கள் தங்கள் விருப்பப்படி தெரிந்துகொள்ளும்படி சில காலம் பிசாசு அவிழ்த்துவிடப்படுவான் (வெளி 20:1-3).

''பிசாசே, நீ பாதாளத்திற்குப் போ'' எனக் கூறுவதும் வேதத்திற்குப் புறம்பான இன்னொரு பழக்கமாகும். அதைச் செய்ய தேவன் நமக்குச் சொல்லவில்லை. ''எங்கே'' போகவேண்டுமென்று ஒரே ஒருமுறைதான் இயேசு பிசாசுகளுக்குச் சொன்னார்; அதுவும் அவைகள் கேட்டுக்கொண்டதினால்! (மத் 8:31,32). பிசாசு ஆகாயத்து அதிகாரப் பிரபுவாம். அவனையும் அவனது சேனையையும் நாம் பாதாளத்திற்கு அனுப்பிவிட்டால் ஆவிக்குரிய போராட்டம் எங்கே? (எபே 2:2; 6:12).

சில பிரசங்கிமார் பிசாசைச் சபிப்பதையும் கேட்டிருக்கிறேன். இதைச் செய்ய நமக்கு அனுமதியே இல்லை. பிரதான தூதனாகிய மிகாவேல் மோசேயின் உடலைக் குறித்துப் பிசாசுடன் தர்க்கித்துப் பேசினபோது அவனைத் தூஷணமாய்க் குற்றப்படுத்தத் துணியாமல், ''கர்த்தர் உன்னைக் கடிந்துகொள்வாராக'' என்றுதான் சொன்னான் (யூதா 9).

பிசாசுக்குத் திருமறை நன்றாய்த் தெரியும். செய்யக் கூடாததை நாம் செய்ய முயற்சிக்கும்போது அவனுக்கு ஒரே சிரிப்புதான்!

## 50. கத்தோலிக்கர் அபிஷேகம் பெறுவதைப்பற்றி...?

பெந்தெகொஸ்தே நாளன்று துவங்கிய ஆவியின் கடைசிக்கால அருள்மாரி நாம் கடைசிக்காலத்தின் இறுதி நோக்கி வரவர அதிகரித்துக்கொண்டே வருகிறது. யோவேலின் தீர்க்கத்தரிசன வாக்கிலுள்ள ''மாம்சமான யாவர் மீதும்'' என்பது எல்லா நாட்டினரையும் சபைப் பிரிவினரையும் உள்ளடக்கியுள்ளது (அப் 2:17). பரிசுத்த ஆவியானவர் மூலம் தேவன் இன்று நடப்பித்துவரும் காரியங்களால்

பாதிக்கப்படாத சபைப்பிரிவு எதுவும் கிடையாது. ரோமன் கத்தோலிக்க சபையும் அதற்கு விதிவிலக்கல்ல. பாதிரியார்கள் உட்பட பல்லாயிரக்கணக்கான கத்தோலிக்கர்கள் தாங்கள் ஆவியின் அபிஷேகம் பெற்று, அந்நிய பாஷைகளில் பேசி, வரங்களை அப்பியாசிப்பதாய்ச் சாட்சியிடுகின்றனர். கத்தோலிக்கரை மரியாள் வணக்கத்தாரென்று மட்டும் கணிக்கும் புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்க்கு இதை ஒத்துக் கொள்ளவே முடியவில்லை. இன்னும் கத்தோலிக்கராயிருந்து கொண்டு ஆவியின் அபிஷேகம் பெற்றிருக்கிறேனென்று எப்படி எவரும் சொல்ல முடியுமென்பது அவர்களது கேள்வி. கிறிஸ்தவத்தில் மிகப் பெரும்பான்மையானது கத்தோலிக்க மார்க்கமாயிருப்பதால் இக்காரியத்தில் தெளிவு பெறுவது முக்கியம். இந்தியாவிலும்கூட கிறிஸ்தவம் என்றதும் கிறிஸ்தவரல்லாதோர் பலருக்கு மனதில் வருவது கிறிஸ்துவின் பெயரல்ல, மாதா கோயில்தான்!

தேவன் ஏகாதிபத்தியர். இங்குதான் நாம் துவங்க வேண்டும். அவர் எதையும் செய்யலாம். கொர்நேலியுவுக்கு அவர் செய்தது போன்றது சபைச் சரித்திரத்தில் பலமுறை நடந்திருக்கிறது. கொர்நேலியு ஒரு கிறிஸ்தவனல்ல. ஆனால் அவன் ''தேவ பக்தியுள்ளவனும்... தேவனுக்கு பயந்தவனும்... மிகுந்த தருமங்களைச் செய்து, எப்பொழுதும் ஜெபம் பண்ணிக்கொண்டிருந்தவனுமாய்'' இருந்தான் (அப் 10:2). அவன் தனக்குக் கிடைத்திருந்த வெளிச்சத்தின்படி நடந்துவந்தான். பிரசங்கியார் பிரசங்கத்தை முடிக்குமுன்னரே, அவன் திருமுழுக்கு பெறுமுன்னரே, பாரபட்சமற்ற தேவன் அவன் மீதும் அவன் குடும்பத்தார்மீதும் தமது ஆவியைப் பொழிந்துவிட்டார் (அப் 10:34,44-46). அப்படியே தேவ பக்தியுள்ளவர்களும் படைப்பின் ஆண்டவரைத் தொழுதுகொள்ளுகிறவர்களுமாகிய கத்தோலிக்கர் மீது தேவன் ஆவியைப் பொழிந்தருளுவாரானால் ''தேவனைத் தடுக்கிறதற்கு நாம் எம்மாத்திரம்?'' (அப் 11:17).

தேவாசீர்வாதங்கள் நம்மீது இறங்குவதால் நமது முறைகள் ஆமோதிக்கப்பட்டுவிட்டன என்றும் சொல்லிவிடமுடியாது. கிறிஸ்தவ வாழ்வின் துவக்க அனுபவத்தில் பொதுவாக முதலாவது வருவது மனந்திரும்புதல், அடுத்து திருமுழுக்கு, பின்னர் ஆவியைப் பெறுதல் (அப் 2:38; எபி 6:1,2). கொர்நேலியுவைப் பொறுத்தவரை மூன்றாவது வரவேண்டியது இரண்டாவதற்கு, அதாவது தண்ணீர் ஞானஸ்நானத்



திற்கு, முந்திவிட்டாலும், தண்ணீர் ஞானஸ்நானம் தேவையில்லையென்று யாரும் சொல்லவில்லை. மாறாக, அவர்களுக்கு உடனே ஞானஸ்நானம் கொடுக்கும்படி பேதுரு ''கட்டளையிட்டான்'' (அப் 10:47,48). நியாயந்தீர்க்கும் மனப்பான்மையில்லாத இவ்வித சாதகக் கண்ணோட்டம் கத்தோலிக்க நண்பர்களை முழுச் சத்தியத்தையும் தழுவிக்கொள்ள ஊக்குவிக்கும்.

புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்களாகிய நாம் கத்தோலிக்க மார்க்கத்தை விட்டு வெளியே வந்துவிட்டாலும் கத்தோலிக்க மார்க்கம் இன்னும் நம்மைவிட்டு வெளிவரவில்லை. நாம் சிலுவை உருவத்திற்குமுன் (cross) வணங்குகிறோம்; அவர்கள் சிலுவை சுருபத்திற்குமுன் (crucifix) வணங்குகிறார்கள். அனைத்து விசுவாசிகளும் ஆசாரியரென்பது நமக்கு ஏட்டுச்சுரைக்காய்தான். இன்றும் விசுவாசிகளைக் குருக்கள் (ஆசாரியர்), சபையார் (விசுவாசிகள்) என்று வெகுவாய்ப் பிரிக்கிறோம். ஆதிச்சபையில் புதிய ஏற்பாட்டு ஊழியர் அறியாதிருந்த பட்டங்களும் சிறப்பாடைகளும் நம்மிடை ஏராளம். இரட்சிப்பு கிரியைகளினாலல்ல, கிருபையினால்தானென்று நமக்கு இன்னும் சரிவர விளங்கவில்லையென்பது பெரும்பாலான நமது சாட்சிகளிலிருந்து தெளிவு. அப்பம் பிட்குதலில் அப்பப்பா எத்தனை சடங்கு!

ரோமன் கத்தோலிக்கர்கள் மரியாளை நடுவராய் வைத்து அவளிடம் அல்லது அவள் மூலம் ஜெபிக்கின்றனர். புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்கள் பிரசங்கிமாரை நடுவர்களாய்ப் பயன்படுத்துகின்றனர். இரண்டுமே தேவனுக்கு அருவருப்புதான். அன்று ஆலயங்களும் மடங்களும் கட்டுவதற்குத் தேவையான பணத்திற்காய்ப் போப் பாண்டவர் பாவமன்னிப்புச் சீட்டுகளை விற்றதுபோல, சுகமளிக்கும் ஊழியர் பலர் ஜெப வியாபாரம் செய்கின்றனர். கத்தோலிக்கர் சிலைகளுக்கு மெழுகுவர்த்தி ஏற்றுகின்றனர்; நாம் படங்களுக்கு மாலையிடுகிறோம். ஒன்று முப்பரிமாண விக்கிரகாராதனை; அடுத்தது இருபரிமாண விக்கிரகாராதனை, அவ்வளவுதான் வித்தியாசம்! ''கத்தோலிக்கருக்கு ஒரே போப்; புராட்டஸ்டண்டுகாரர்களுக்கு எத்தனையோ?'' என்றார் ஒருவர். இப்படி அடுக்கிக்கொண்டே போகலாம். இப்படிச் சொல்வது கத்தோலிக்கர் செய்வதைச் சரியென்று சொல்ல அல்ல; புராட்டஸ்டண்டுகாரர்களை தங்கள் வீட்டைச் சரிசெய்ய

அழைக்கவே! இரு திறத்தாருக்கும் தேவனருளும் செய்தியாவது: ''அறியாமையின் காலங்களைத் தேவன் காணாதவர் போலிருந்தார்; இப்பொழுதோ எங்குமுள்ள மனிதரெல்லாம் (இரு வகுப்பினரும்) மனந்திரும்ப (மாற்றிக்கொள்ள) வேண்டுமென்று கட்டளையிடுகிறார்'' (அப் 17:30).

நமது கத்தோலிக்க நண்பர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை ஏராளமுண்டு. அடிப்படையாகக் கத்தோலிக்க சபை பிரிந்து நிற்கவில்லை. ஐயகோ, புராட்டஸ்டண்டு மார்க்கத்தில் எத்தனை பிரிவுகள், பிரிவுகளுக்குள் பிரிவுகள்! கத்தோலிக்கப் பாதிரிகள் மற்றும் கன்னிமாரின் ஒழுங்கு மற்றும் அர்ப்பணிப்பு ஒரு மாபெரும் சவால். ஊழல் மிகமிகக் குறைவு. நம்மைப்போல அவர்கள் ஆலயச் சொத்துக்களை விற்பதில்லை, பணத்தைச் சுரண்டுவதில்லை. சபைச் சொத்து எதுவும் பாதிரியாரின் தனிப்பெயரில் வாங்கப்படுவதில்லை. அவர்கள் வரவு செலவு கணக்கு விபரங்கள் அவ்வளவு சுத்தமாயிருப்பதால் வருமானவரி அதிகாரிகளுக்கு அவர்கள் லஞ்சம் கொடுக்கத் தேவையில்லை. வேத மொழியாக்கங்களை மேம்படுத்துவதில் அவர்கள் நம்மை மிஞ்சுபவர்கள். கிறிஸ்தவரல்லாதோரைச் சந்திக்கும் நோக்கோடு அவர்கள் வேதத்தை இன்றைய நடைமுறை மொழி நடையில் கொண்டுவர அத்தனையையும் செய்வார்கள். சமூக சேவையில் அவர்களை யாரும் மிஞ்ச முடியாது. அவர்கள் தங்களது கட்டிடங்களையும் வளாகங்களையும் எவ்வளவு சுத்தமாய் வைத்திருக்கிறார்களென்பதைப் பார்த்தால் நாம் தலைகுனியவேண்டும். ஆலய ஆராதனைகளில் அவர்களது பக்திவிநயந்தான் என்னே! அவர்களது இத்தனை அன்பின் பிரயாசங்களையும் செயல்களையும் மறந்துவிட தேவன் அநீதியுள்ளவரல்லவே! (எபி 6:10). அவருக்குப் பயந்து யார் நீதியைச் செய்தாலும் அவர் அங்கீகரிக்கிறார் (அப் 10:34,35). கத் தோலிக்க சபைக்கு வரும் தேவனது சந்திப்பிற்காய் அவரைத் துதிப்போம்.

முன்னாள் கத்தோலிக்கப் பாதிரியார் தந்தை பெர்க்மான்ஸ் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. கத்தோலிக்க சபையில் முழு அங்கத்தினராயிருக்கும்போதுதான் அவர் ஆவியின் அபிஷேகம் பெற்றார். அந்த அபிஷேகத்தை யாராவது கேள்விகேட்க முடியுமா?

பரிசுத்த ஆவியானவர் எல்லா சத்தியத்திற்குள்ளும் நம்மை நடத்துவாரென்றார் இயேசு (யோ 16:13). இது ஒரே நாளில் நடந்துவிடாது. வெளிப்பாடுகளும் சீர்திருத்தங்களும் படிப்படியாகத்தான் வரும்.



முடிவாக, அபிஷேகம் பெற்றுள்ள கத்தோலிக்கருக்கு எனது அறிவுரைகள்: (1) வேதத்தைக் கிரமமாகவும் கவனமாகவும் வாசியுங்கள். புதிய ஏற்பாட்டில் துவங்குங்கள். (2) கிறிஸ்து கட்டளையிட்டபடி திருமுழுக்கு பெற்றுக்கொள்ளுங்கள். (3) மரியாளிடமோ மரியாள் மற்றும் பரிசுத்தவான்கள் யார் மூலமோ ஜெபிப்பதை நிறுத்துங்கள். பிதாவாகிய தேவனிடம் நேரடியாக குமாரன் இயேசு மூலம் ஜெபியுங்கள். (4) சிலைகளைக் கும்பிடாதீர்கள். எப்பாணியிலும் சிலை வணக்கம் வேண்டாம். (5) வேதத்தை உத்தமமாய்ப் பிரசங்கிக்கும் சபைகளின் ஆராதனைகளில் கலந்துகொள்ளுங்கள். (6) நற்செய்திப் பணிக்காய்ப் புறப்பட்டுச் செல்லும் குழுக்களைச் சேர்ந்துகொள்ளுங்கள். (7) தேவையுள்ளோர் மற்றும் சந்திக்கப்படாதோர் நடுவில் நடைபெறும் மிஷனரி ஊழியம் மற்றும் சமூகநலப்பணிகளுக்கு உதவுங்கள். ''உங்களில் நற்செயலைத் தொடங்கினவர் அதை இயேசு கிறிஸ்துவின் நாள்வரை முடிய நடத்திவருவார்'' (பிலி 1:5).

## 51. இதுதான் எதிர்பார்த்திருந்த எழுப்புதலா?

எல்லா நாடுகளிலும் எல்லாச் சபைகளிலுமுள்ள கிறிஸ்தவரிடையே ஓர் ஆன்மீக விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது என்பது மறுக்கமுடியாதது. நெடுங்காலமாய் ஜெபித்துக் காத்திருந்த எழுப்புதல் இதுதானென்பது பலரது கருத்து. மற்றவர்களோ கேள்விக்குரிய சில காரியங்கள் நடைபெறுவதால் இதை விட்டுச் சற்று ஒதுங்கி நிற்கிறார்கள். அப்படியானால் இன்றைய எழுப்புதலை நாம் நிதானிப்பது எங்ஙனம்?

எழுப்புதல் என்பது சபைக்குச் சாதாரணமானதன்று. நோயுற்ற அல்லது பின்வாங்கின சபைக்குத்தான் எழுப்புதல் தேவை. தேவ மக்களிடையே கர்த்தருக்குள்ளான மகிழ்ச்சி மங்கிய வேளையில்தான் சங்கீதக்காரன், ''தேவனே, உமது மக்கள் உம்மில் மகிழ்ந்திருக்கும்படி நீர் எங்களைத் திரும்ப உயிர்ப்பிக்கமாட்டீரோ?'' எனக் கதறினான் (சங் 85:6). தேவ மக்கள் வழிவிலகிச் சென்ற வேளைகளில்தான் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் மனந்திரும்புதலுக்கான அழைப்பும் எழுப்புதலுக்கான வாக்குகளும் கொடுக்கப்பட்டன. ஆனால் புதிய ஏற்பாட்டுச் சபை இவ்விதம் ஏறுவதும் இறங்குவதுமான பாணியில்

செல்ல தேவன் விரும்புவதில்லை. நாம் கர்த்தருக்குள் ''எப்பொழுதும்'' சந்தோஷமாயிருக்கவும், அவரது பணியில் ''எப்பொழுதும்'' பெருகுகிறவர்களாயிருக்கவும், அவரது குமாரனின் வருகையை ''எப்பொழுதும்'' எதிர்நோக்குகிறவர்களாகவுமிருக்க அறிவுறுத்தப்பட்டிருக்கிறோம் (பிலி 4:4; 1 கொரி 15:58; மாற் 13:35-37). ஆயினும், சபையின் இன்றைய நிலை அது இருக்கவேண்டியபடி இல்லாததால் ஆதிநிலையேகுவதற்காக அதற்கு எழுப்புதல் தேவைதான்.

தேவன் தமது மக்களை ஆவியானவரின் வல்லமையான அசைவாடுதலால் சந்திக்கவேண்டுமென்று பரிசுத்தவான்கள் பல்லாண்டுகளாய்க் கிருபாசனத்திற்குமுன் மன்றாடி வந்திருக்கிறார்கள். பெந்தெகொஸ்தே நாளை முன்மாரியென்று வைத்துக்கொண்டு பின்மாரிக்காய் அவர்கள் தேவனிடம் கதறிக்கொண்டிருக்கிறார்கள் (சக 10:1). இன்றைய அசைவு அவ்வித ஜெபத்திற்குப் பதில்தானென்று நான் நம்புகிறேன். ஆனால் நமது தேவைகளை அது போதுமான அளவு சந்திக்கவில்லை. நாம் அடிக்கடி பாடுகிறதுபோல

*அற்பமாய் சொற்பமாய் அல்ல;*
*திரளாய்ப் பெய்யட்டுமே!*

□ நமக்கு நீதியின் எழுப்புதல் தேவை (ஓசி 10:12). அது நமது பின்மாற்றத்தையும் வெதுவெதுப்பையும் குணமாக்கி ஆழ்ந்த மனந்திரும்புதலுக்குள் நம்மைக் கொண்டுவரும். அவ்வித எழுப்புதல் நம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்தின் சீர்குலைவையும் சரிசெய்யும் (2 நாளா 7:14). ஜான் வெஸ்லி, D.L. மூடி மற்றும் சார்லஸ் பின்னி போன்றோரின் ஊழியத்தின் மூலம் ஏற்பட்ட எழுப்புதலில் இக்குணாதிசயம் இருந்தது.

□ நமது வாழ்க்கையில் காரியங்களை எது முக்கியமென்று வரிசைப்படுத்த நம்மை நடத்தும் எழுப்புதல் நமக்குத் தேவை. மனிதரோடு பேசும் நேரத்தைவிட ஜெபத்தில் செலவிடும் நேரம் நமக்கு இன்பமாயிருக்கவேண்டும் (சங் 84:10). அனுதின ஆகாரத்தைவிட வேதத் தியானம் முக்கியமானதாக வேண்டும் (யோபு 23:12). இவ்வுலகத் தேவைகளைவிட இறையரசின் விரிவாக்கமே நமது சிந்தனைகளை ஆட்கொள்ளவேண்டும் (மத் 6:33). தேவனிடமிருந்து ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்வதைவிட அவருக்கு உசிதமானவைகளைக் கொடுத்துவிடுவதே நம்மை அதிகம் பரவசப்படுத்தவேண்



டும் (அப் 20:35ஆ). பிறர் நலனுக்காய்ச் சேவை செய்வது சுய நலத்தை நம்மிலிருந்து விரட்ட வேண்டும் (பிலி 2:4,5).

இவ்வித நன்மைகளை ஓரளவு இன்றைய எழுப்புதலில் பார்க்க முடிந்தாலும், விரும்பும் ஆசீர்வாதங்களைவிட கேள்விக்குரிய காரியங்களே அதிகமாய் இருப்பதாய்த் தெரிகின்றன. மேற்குறிப்பட்டுள்ள ஆன்மீக நன்மைகளைவிட கீழே விழுதல், ஊருதல், உதறுதல், சிரித்தல் இவைபோன்ற உடல்சார்ந்த வெளிப்பாடுகளிலேயே கவனம் ஈர்க்கப்படுகிறது. புதிதும் வல்லமையுமாக தேவன் தமது மக்களைச் சந்திக்கும்போது பிசாசும் அதிக விறுவிறுப்பாகிறான். அவன் போலி மன்னன். அவன் களைகளை விதைத்துவிட்டால், நல்ல தானியத்திலிருந்து அவற்றை வேறு பிரிப்பதே சிரமமாகிவிடுகிறது (மத் 13:24-30). எந்த எழுப்புதலிலும் கலப்படம் இருப்பதால் நிதானிப்பது அவ்வளவு எளிதல்ல. நூறு சதவீதம் இது பொய்யானது என்று எதையும் சொல்லிவிட முடிவதில்லை. உள்ளான கிருபைகளில் வளர்ந்துகொண்டு, வேத வசன வரம்புகளைத் தாண்டாமலிருப்பதே மிகவும் பாதுகாப்பாகும். எதிர்மறையானவர்களாய் மாறாமல் பகுத்துப் பார்ப்பது சாத்தியம். குளிப்பாட்டிய தண்ணீரைக் கொட்டும்போது பிள்ளையையும் சேர்த்து எறிந்துவிடக்கூடாது!

தேவ மக்களைக் கட்டியெழுப்ப அவர்களை முதிர்ச்சிக்குக் கொண்டுவரும் மகா பெரிய பொறுப்பு எழுப்புதல்களில் தேவனால் பயன்படுத்தப்படும் ஊழியருக்கு வெகு அதிகமுண்டு. மக்களை வெறுமனே பரவசப்படுத்திக்கொண்டிருப்பதால் ஊழியரின் பேர்ப்புகழை ஒரு வேளை தக்கவைத்துக்கொள்ளலாம். ஆனால் சோதிக்கும் நெருப்பானது இவ்விதச் செயல்களெல்லாம் ''மரம், வைக்கோல், புல்'' ஆகியவைதானென்று வெளிப்படுத்தும் (1 கொரி 3:12,13).

எழுப்புதலைக் குறித்துப் பேசும் நாம் எல்லாமே மகிமையாய் மாறிவிடப்போகிறதென்று நினைத்துவிடக்கூடாது. சொல்லப்போனால், அப்போஸ்தலரும் நமது ஆண்டவரும் முன்னறிவித்தபடி, இந்த யுகத்தின் இறுதிக்குள் நாம் வர வர, அக்கிரமம் பெருகும், அன்பு தணியும், வஞ்சகம் கூடும், பின்மாற்றம் அதிகரிக்கும் (மத் 24:12; 1 தீமோ 4:1-3). ஏற்கனவே இந்து, இஸ்லாம் மற்றும் ஆதிவாசி மார்க்கங்களில் ஓர் எழுச்சி ஏற்பட்டுள்ளது. நெடுங்காலமாய் எதிர்பார்த்திருக்கும் கிறிஸ்துவின் இரண்டாம் வருகையே நமக்கு முடிவான எழுப்புதலாகும் (அப் 3:19-21).

பகுதி நான்கு

# திருச்சபை



## 52. எந்தச் சபையில் சேருவது?

நல்ல, ஆனால் கடினமான கேள்வி! நீங்கள் மறுபடி பிறந்திருந்தால் ஏற்கனவே திருச்சபையில் அங்கமாகிவிட்டீர்கள். கிறிஸ்துவின் உடலாகிய அகிலவுலக சபையை நான் இங்கு குறிப்பிடுகிறேன். பரிசுத்த ஆவியானவர் உங்களைக் கிறிஸ்துவின் சரீரத்திற்குள் ஸ்நானப்படுத்தி அல்லது உட்படுத்தியிருக்கிறார் (1 கொரி 12:13). விசுவாசிகள் அனைவரும் இந்த உடலின் உறுப்புகளாம் (1 கொரி 12:27).

ஆனாலும் அகிலவுலக சபையானது உள்ளூரமைப்பில் வெளிப்படவேண்டும். துவக்கத்திலெல்லாம் ஒவ்வோர் ஊரிலும் ஒரு சபைதான். கொரிந்து சபை, எபேசு சபை என்றெல்லாம் வாசிக்கிறோமல்லவா? ஆனால் ஒரு பிராந்தியம் அல்லது நாட்டைக்குறித்து வாசிக்கும்போது ''சபைகள்'' என்று பன்மையில் காண்கிறோம். கலாத்திய (நாட்டு) சபைகள், ஆசியாவிலுள்ள சபைகள், இப்படி. ஆனால் இன்றைய நிலையோ முற்றிலும் வேறு. ஒரே ஊரில் ஏராளம் சபைகள். அதற்குப் பெயர்தான் சபைப்பிரிவுகள் (denominations அல்லது divided units) என்பது. நிலைமை இப்படிச் சிக்கலாயிருப்பதால் உங்களது கேள்விக்குச் சுலபமாகப் பதில் தருவதும் சிக்கல்தான்! என்றாலும் சில ஆலோசனைகளைத் தருகிறேன்.

□ தேவனைத் தொழுதுகொள்ளுதலே நமது பிரதான அழைப்பாகும். சடங்குகளோடல்ல, ஆவியோடும் உண்மையோடும் கர்த்தரைத் தொழுதுகொள்ளும் ஒரு கூட்டத்தோடு சேர்ந்துகொள்ளுங்கள் (யோ 4:23,24).

□ அவர்கள் அப்போஸ்தலரின் உபதேசத்தில் உறுதியாய்த் தரித்திருந்தார்களென்று ஆதிவிசுவாசிகளைக் குறித்து வாசிக்கிறோம் (அப் 2:42). வேதம் தேவனுடைய வசனம் என்று முழுக்க விசுவாசிக்கப்பட்டு அது உத்தமமாய்ப் பிரசங்கிக்கப்படும் சபையைத் தெரிந்துகொள்ளுங்கள். சபையின் ஆயர் ஒரு நவீனவாதியாகவோ (modernist) இதவாதியாகவோ (liberalist) இருந்தால் உங்களது சாவுச்சீட்டை நீங்களே எழுதிக்கொள்ளுகிறீர்களென்று பொருள்.

□ சபையென்பது ஓர் ஐக்கியமாகும். அது தேவப் பிள்ளைகளின் குடும்பமாம். ஒருவரோடொருவர் நன்கு ஐக்கியப்பட்டு, துன்பத்திலும் இன்பத்திலும் ஈடுபாடுகொண்டு, ஒருவருக்கொருவர் புத்திசொல்லி வளருவதற்கேதுவான சூழ்நிலையுள்ளதொரு சபையில் அங்கமாக வேண்டும் (1 யோ 1:7; 1 கொரி 12:26; எபி 3:13; எபே 4:15,16).

□ துலைந்த உலகைக் கிறிஸ்துவுக்காகச் சந்திக்கும் ஒரே நோக்கிற்காகவே சபை இருக்கிறது. உலகை நற்செய்திமயமாக்குவதைத் தனது பிரதான கடமையாகக் கொண்டுள்ள உள்ளூர்ச் சபையொன்றில் இணைந்துகொள்ளுங்கள் (மத் 28:18-20).

எந்தச் சபையென்றாலும் நல்லதுமுண்டு, குறைவுகளுமுண்டு. எனவே ''பூரணமான'' சபையைத் தேடி ஏமாந்துபோகாதீர்கள். ''நான் சொல்லுகிறவைகளைச் சிந்தித்துக்கொள்; கர்த்தர் எல்லாக் காரியங்களிலும் உனக்குப் புத்தியைத் தந்தருளுவார்'' (2 தீமோ 2:7).

(அடுத்த கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

## 53. ஆவிக்குரிய சபை எது?

புதிய விசுவாசிகளுக்குத் தொடர் பணியாக ஆலோசனைகள் கொடுக்கப்படும்போது அவர்கள் ''ஆவிக்குரிய'' சபையொன்றில் பங்குபெறவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அப்படிச் சொல்லும்போது பிரசங்கியார் எதை மனதில் வைத்திருக்கிறாரென்பதும் மக்களுக்கு என்ன புரிகிறதென்பதும் வெவ்வேறானவை. நடந்துமுடிந்த கூட்டம் அனைத்து சபைகளின் கூட்டு முயற்சியாயிருக்குமானால் ''ஆவிக்குரிய'' சபையை எப்படி அடையாளங்காணுவதென்று விளக்கப் பிரசங்கிமாருக்குத் தயக்கம்! ஆனால் கடினமான இக்கேள்விக்குப் பதில் சொல்லியாகவேண்டும்.

சபைகளைப் பொதுவாகப் பெந்தெகொஸ்தே சபைகள், பெந்தெகொஸ்தேயல்லாத சபைகள் என்று பிரிக்கலாம். பரிசுத்தாவியானவரின் அபிஷேகத்தை எப்படிப் புரிந்துகொள்ளுகிறார்களென்பதிலேயே இங்கு முக்கிய வேறுபாடு. பெந்தெகொஸ்தே சபைகளெல்லாம் ''ஆவிக்குரிய'' சபைகளென்றும் மற்றவைகள் அப்படியல்ல என்றும் சொல்வது தவறு. வேதப்பாணியில் சொன்னால் ''ஆவிக்குரிய'' எனும் பதம் ''மாம்சத்திற்குரிய'' அல்லது ''ஜென்ம சுபாவ'' எனும் பதங்களுக்கே எதிர்மறையாகும். ஆராதனை முறைமை, நிர்வாக அமைப்பு, திருமுழுக்கு அல்லது அப்பம் பிட்குதல் எப்படி என்பதல்ல ஒரு சபையை ''ஆவிக்குரியது'' அல்லது அப்படியல்லாதது என்று நிர்ணயிப்பது. குழுவாக அச்சபையின் குணம் எத்தகையது, மற்றும் அதின் உறுப்பினர்களின் வாழ்க்கை முறை எப்படியுள்ளது என்பதே காரியம். சொல்லப்போனால், கொரிந்து சபையானது எல்லா விதத்திலும் ஒரு பெந்தெகொஸ்தே சபைதான். ஆவியின் வரங்கள் அத்தனையும் அங்கு செயல்பட்டுக்கொண்டிருந்தன (1 கொரி 1:7; 14:12அ). ஆனால் அப்போஸ்தலன் பவுலைப் பொறுத்தவரை, அது ஓர் ''ஆவிக்குரிய'' சபையல்ல, ''மாம்சத்துக்குரிய'' சபை (1 கொரி 3:1-3).

இன்றைய நிலைமையை நேர்மையாய்ப் பகுத்துப் பார்த்தால், ஒரு சபையும் 100 சதவீதம் ஆவிக்குரியது அல்லது 100 சதவீதம் மாம்சத்துக்குரியது என்று சொல்ல முடியாதென்பதே ஒருபுறம் சாயாத கணிப்பாயிருக்கும். ஆவிக்குரியதும் மாம்சத்துக்குரியதும் கலந்தே எங்கும் காணப்படுகிறது. சதவீதம் ஒருவேளை வித்தியாசமாயிருக்கலாம். சில பெந்தெகொஸ்தே சபைகள் பெந்தெகொஸ்தேயல்லாத சபைகளைவிட மாம்சத்துக்குரியவைகளாகவும், சில பெந்தெகொஸ்தேயல்லாத சபைகள் பெந்தெகொஸ்தே சபைகளைவிட ஆவிக்குரியவைகளாகவும் இருக்கின்றன. எனது பெந்தெகொஸ்தே நண்பர் சிலருக்கு இங்கு என்மீது கோபம் எழலாம்; ஆனால் உண்மை உண்மைதானே! (கலா 4:16). மட்டுமல்ல, ''ஆவிக்குரிய'' சபைகளென்று அழைக்கப்படும் சில சபைகளில் ''பாரம்பரிய'' சபைகளென்று அழைக்கப்படும் சில சபைகளைவிட வேத அடிப்படையில்லாத பாரம்பரியங்கள் கூடுதலாயிருக்கின்றன என்பதும் நான் கண்டறிந்தது.

மறுபடி பிறந்தபின் ஒவ்வொருவரும் முதிர்ச்சி நோக்கி ''வளர'' அனுகூலமாயிருக்கும் உள்ளூர்ச் சபையொன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். தமது பிள்ளைகள் ஒவ்வொருவரையும் குறித்த தேவ சித்தம் அதுவே. உங்களுக்கென்று ஒரு சபையைத் தெரிந்தெடுக்குமுன் கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்டுக்கொள்ளுங்கள்—

*1. அது வேதத்தைக் கடவுளின் வார்த்தையென்று விசுவா* ] UQÓuõ? திருவசனமாகிய ஞானப்பாலைப் பருகும் அளவைப் பொறுத்தே நமது வளர்ச்சியிருக்கும் (1 பேது 2:3). திடமான வேத போதனை இருக்கும் சபைகளின் உறுப்பினர்கள் விரைவாகவும் வீரியமாகவும் வளருவார்கள். உபதேசத்தில் சிறுசிறு வேறுபாடுகளைப் பொறுத்துக்கொள்ளலாம்; ஆனால் பிரதானமானவைகளில் ஒத்துப்போக முடியாது (எபே 4:4-6). வேதத்தில் உங்களுக்கு அலாதிப் பிரியத்தை உண்டுபண்ணுகிறவரும், பிரசங்க பீடத்தைத் துர்ப்பிரயோகம் செய்யாதவருமான மேய்ப்பர் நடத்தும் சபைக்குச் செல்லுங்கள்.

*2. அங்கு உண்மையான தொழுகை ஊக்குவிக்கப்படுகிறதா?* ''உண்மையாய்த்'' தொழுதுகொள்ளுதலென்றால் ''ஆவியோடும் உண்மையோடும்'' தொழுதுகொள்ளுதலென இயேசு போதித்தார் (யோ 4:23,24). சில சபைகளின் தொழுகையில் ''உண்மை'' அதாவது ''கருத்து'' நிறைவாய் இருக்கும்; மற்ற சபைகளின் தொழுகையில் ''ஆவியில்'' உற்சாகம் அதிகமாயிருக்கும். கருத்தும் வேண்டும்; ஆவியும் வேண்டும் (1 கொரி 14:15).

*3. அங்கு ஐக்கிய உறவு இருக்கிறதா?* நமது ஐக்கியங்கள் பலவற்றில் ''ஐக்கியம்'' கிடையாது. பணிவிடை செய்யப்படவே மக்கள் ஆராதனைக்கு வருகிறார்களே தவிர, ஒருவருக்கொருவர் பணிவிடை செய்ய அல்ல. ''கர்த்தரைப்'' பாடிக் கீர்த்தனம்பண்ணுவது உண்டு; ஆனால் சங்கீதங்களினாலும் கீர்த்தனைகளினாலும் ஞானப்பாட்டுகளினாலும் ''ஒருவருக்கொருவர்'' புத்தி சொல்லுவது கிடையாது (எபே 5:19). ஏதோ ''Praise the Lord'' என்பார்கள், அல்லது கைகுலுக்குவார்கள், அவ்வளவுதான். ஒருவருக்கொருவர் ஊழியஞ் செய்யும் இச்சமதளப் பரிமாணத்தில் சிறிய சபைகள் பலமுள்ளவைகளாய்த் தோன்றுகின்றன. தேவையுள்ளோருக்குப் பொருளாதார நன்மைகளைப் பகிர்ந்தளித்ததே ஆதிச்சபையின் மிகப்பெரிய கவர்ச்சி (அப் 4:32,33). கிறிஸ்தவமே தானதர்மம்தான்! (யாக் 1:27).

*4. அதின் தலைவர்கள் விசுவாசிகளை ஊழியத்திற்குப் பயிற்றுவிக்கிறார்களா?* மேய்ப்பர்தான் கதாநாயகர், சபையாரெல்லாம் பார்வையாளர்கள்தான் என்றிருக்கும் சபையில் எவரும் வளர எதிர்பார்க்கமுடியாது. தங்களுக்கு ஆபத்து வந்துவிடக்கூடாதென்றே



எண்ணிக்கொண்டிருப்பது அநேக சபை மேய்ப்பர்களை முடமாக்கிவிட்டது; அதினால் அவர்கள் மற்றவர்களை நம்பி அவர்களுக்குப் பொறுப்புகளைக் கொடுப்பதில்லை. ''பரிசுத்தவான்களைச் சுவிசேஷ ஊழிய வேலைக்காகப்'' பக்குவப்படுத்துவதற்காகவே திருச்சபையில் ஐவகை ஊழியங்கள் அருளப்பட்டுள்ளன (எபே 4:12,13). வேறு வார்த்தையில் சொன்னால், ஒவ்வொரு விசுவாசியையும் ஓர் ஊழியனாய் மாற்றுவதே ஒவ்வொரு ஊழியனின் ஊழியமாகும். அத்தனையும் பூரணமாய் இல்லாவிட்டாலும், எல்லா உறுப்பினர்களும் தேவனுக்குமுன் ''இராஜாக்களும் ஆசாரியர்களுமாய்'' செயல்படும் சபையில் அங்கமாகுங்கள் (1 பேது 2:5,9). மட்டுமல்ல, தலைமைத்துவம் ஒரே நபர்மீது இராது பகிர்ந்தளிக்கப்படும் சபையே பாதுகாப்பானது.

*5. அது சந்திக்கப்படாதோரைத் தேடிச் செல்கிறதா?* கனடாவில் People's Church எனும் திருச்சபையை நிறுவிய பண்டிதர் ஆஸ்வால்டு J. ஸ்மித் (1890-1986) ''நற்செய்திப் பணியில் தீவிரங்காட்டாத சபை நலிந்து தீய்ந்துபோகும்'' என்பார். நீங்கள் தெரிந்தெடுக்கும் சபையில் நற்செய்திப் பணிக்கும் மிஷனரி ஊழியத்திற்கும் அதிமுக்கியத்துவம் கொடுக்கிறார்களாவெனப் பார்த்துக்கொள்ளுங்கள். மிஷனரிகளை அனுப்பித் தாங்காத அல்லது மிஷனரி இயக்கங்களைச் சாடையாய்த் தாக்குகிற மேய்ப்பரின் சபையில் நீங்கள் இருந்தால் மூச்சு முட்டிச் சாவீர்கள் (அப் 13:1-3). தங்களுக்கு விருப்பமான நற்செய்திப்பணி நிறுவனங்களோடு இணைந்து செயல்பட சபை உறுப்பினர்களுக்கு விடுதலை இருக்கவேண்டும். சபையானது சங்கிலியாகிவிடக்கூடாது.

ஆவிக்குரிய சபையில் எதிர்பார்க்க வேண்டிய இன்னும் சில குணாதிசயங்களுமுண்டு. ஆனால் இவ்வைந்துதான் அடிப்படையானவை. குறைவற்றதை எதிர்நோக்குங்கள்; ஆனால் இருப்பதை ஏற்றுக்கொண்டு அதின் முன்னேற்றத்திற்காய்ச் செயல்பட்டு காரியங்களை மேம்படுத்திக்கொண்டே வாருங்கள். தேவையான அத்தனைக் குணாதிசயங்களும் எந்தவொரு உள்ளூர்ச் சபையிலும் இல்லாததால் உங்கள் தரிசனத்தை விரிவாக்கவும் அறிவைப் பெருக்கிக்கொள்ளவும் பிற சபைகளுக்கும் சென்று வாருங்கள். ஒருவருடைய பலம் மற்றவரின் பலவீனத்தில் உதவும்.

# 54. எதுதான் மணவாட்டி சபை?

ஒருவன் மறுபடி பிறக்கையில் தேவனுடைய பிள்ளையாகிறான் (யோ 1:12). இராஜ்யத்தின் குடிமகனாகிறான் (கொலோ 1:13). கிறிஸ்துவின் உடலில் அங்கமாகிறான் (1 கொரி 11:12,13). அவனது பெயர் பரலோகத்தில் பதிவுபெறுகிறது (எபி 12:13). தேவன் அவனது தந்தையாகிறார். இயேசு அவனது மூத்த சகோதரனாகிறார் (எபி 2:10-13). கர்த்தரால் மீட்கப்பட்ட இந்தக் கூட்டமே சபை என்பது (அப் 2:47; எபி 12:22-24). அதன் அங்கத்தினர் யாவருக்கும் சமநிலை உண்டு.

கிறிஸ்துவோடு இக்கூட்டத்திற்கு இன்றுள்ள ஆன்மீக ஐக்கியத் தைச் சித்தரிக்க சபையானது அவரது சரீரம் என்றழைக்கப்படுகிறது (1 கொரி 12:27; எபே 5:30,32). நாளை வரப்போகிற வெளிப்படை யான நித்திய உறவை விளக்க அது அவரது மணவாட்டி என்றழைக்கப் படுகிறது (வெளி 19:7; 21:2,9). எனவே ஆட்டுக்குட்டியானவரின் கலியாணத்திற்காகத் தங்களை ஆயத்தப்படுத்திக்கொண்டிருக்கும் தேவமக்களின் கூட்டமே மணவாட்டி சபை என்பது.

நாங்கள்தான் மணவாட்டியென ஒரு சபைப் பிரிவும், தனிக் கூட்டமும் தம்பட்டம் அடித்துக்கொள்ள முடியாது. உலகெங்குமுள்ள எல்லாச் சபைகளிலும் அல்லது சபைப் பிரிவுகளிலும் மணவாட்டி சபையின் அங்கத்தினர்கள் உண்டு. அவர்கள் எபேசு சபையிலு முண்டு, கொரிந்து சபையிலுமுண்டு (2 கொரி 11:2). அவர்கள் ஒவ்வொருவரையும் கிறிஸ்து நேசிக்கிறார். ''கறை திரை ஒன்றுமில் லாமல்... அதைத் தமக்குமுன் நிறுத்திக்கொள்ள'' அவர் அவர்களைச் சுத்திகரித்துப் பரிசுத்தமாக்கிக்கொண்டிருக்கிறார் (எபே 5:25-27).

விசுவாசிகளைக் கலியாண ''விருந்தினர்'' என்றும் ''மணவாட்டி'' என்றும் இரு வகுப்பாகச் சிலர் பிரிக்கின்றனர். இது வேதத்தின் சித்திர மொழியைத் தவறாகப் புரிந்துகொள்வதால் உண்டானதாகும். ஆட்டுக் குட்டியானவரின் கலியாணத்திற்கு அழைக்கப்பட்ட விருந்தினர் வெறும் நண்பரல்ல. அவர்கள்தான் மணவாட்டி. இயேசுதாமே தமது சீடர்களை ''மணவாளனின் தோழர்'' என்றழைத்தாரே (மத் 9:15).



அப்படியானால் அந்தச் சீடர் வெறுமனே அவரது கலியாணத்துக்கு வருவார்கள், அவர் அவர்களை மணக்கமாட்டார் என்றா பொருள்? பரிசுத்தவான்கள் தேவனது மாளிகையின் ஜீவனுள்ள கற்களென அழைக்கப்படுகின்றனர் (1 பேது 2:5). அப்படியானால் அவர்கள் மணவாட்டியாக மாட்டார்கள், மணவாளனும் மணவாட்டியும் தங்கும் வீட்டில் வெறுங்கற்களாயிருப்பார்கள் என்றா பொருள்?

மற்ற விசுவாசிகளை ஒதுக்கி பிறருக்கில்லாத ஏதோவொன்று தங்களுக்கு மட்டுமுண்டு என்று சொல்லும் குழுக்கள், சபைகளைக் குறித்து எச்சரிக்கை. அவர்களது உபதேசமெல்லாம் உன்னத வெளிப் பாடுபோல் தோன்றும். ஆனால் உண்மையில் அவை தேவ திட்டத் தைப் பூமியில் நிறைவேற்ற முடியாதபடி தேவமக்களை முடமாக்கும்.

# 55. இரண்டு சபைகளில் அங்கம் வகிக்கலாமா?

திருச்சபை தனது ''ஆதி அன்பை'' இழந்தபோது அதற்குத் தேவ பக்தியின் வல்லமை நீங்கியது, வேஷம்தான் மிஞ்சியது. பின்வாங்கிய இச்சபை முழுவதும் சோரம்போனது. அதுதான் அதின் சரித்திரத்தின் ''இருண்ட காலம்'' ஆகும். சபையானது சோதோம் கொமோரா போல ஆகிவிடாதபடி கர்த்தர் உண்மை விசுவாசிகள் கொஞ்சம் பேரை ''மீதி யாக'' வைத்தார் (ஏசா 1:8,9). சபையானது இழந்த சத்தியங்களையும் வல்லமையையும் திரும்பப் பெற 15ஆம் நூற்றாண்டின் சீர்திருத்தம் அடிகோல் நாட்டியது. மார்ட்டின் லூத்தர் மூலம் விசுவாசத்தினால் நீதிமானாக்கப்படுதலின் சத்தியம் உயிர் பெற்றது. ஜான் வெஸ்லி, சார்லஸ் பின்னி போன்றோரைத் தேவன் பயன்படுத்தி ஆவியான வரால் பரிசுத்தமாகுதல் மற்றும் ஆவியின் வரங்கள் ஆகியவற்றைக் குறித்த சத்தியங்களை மறுமலர்ச்சியடையச்செய்தார். சீர்திருத்தம் இன்னும் முற்றுப்பெறவில்லை. எனவே இன்று எந்தத் தனிச் சபை யும் சபைப்பிரிவும் எல்லாவற்றையும் பெற்றுவிட்ட நிலையடைய வில்லை. ஒவ்வொன்றிற்கும் பலமுள்ள காரியங்களும் பலவீன காரி யங்களுமுண்டு. கிறிஸ்தவர்களுக்கு ஒரு சபையில் திருப்தி ஏற்படா விட்டால், அடுத்த சபைக்குப் போய்விடுகிறார்கள். சில சபைகளில்

அமைப்பு உறுதியாயிருக்கும், ஆனால் ஆவியில் உற்சாகமிருக்காது; மற்றவைகளில் ஆவியின் ஆரவாரம் அதிகமாயிருக்கும், அமைப்போ ஆட்டங்கண்டுகொண்டிருக்கும். எனவே, விசுவாசிகளில் பலர் இரு சபைகளில் அங்கம்வகித்துக் கொண்டிருக்கிறார்கள்— ஒன்று நல்ல அமைப்புள்ள சபையிலும், அடுத்தது விறுவிறுப்பான ஆன்மீகச் சபையிலும். இது சரியா?

இக்கேள்விக்கு வேதத்திலிருந்து நேரடியான பதிலைக் கண்டுபிடிப்பது கடினம். ஏனெனில் புதிய ஏற்பாட்டுக் காலங்களில் ஊருக்கு ஒரு சபைதானிருந்தது (1 கொரி 1:2; 1 தெச 1:1; வெளி 2:1,8,12,...). கலாத்தியா போன்ற பிராந்தியம் அல்லது நாடாக இருந்தால்தான் அங்கு ஒன்றுக்கும் மேற்பட்ட சபைகளிருந்தன (கலா 1:2). இன்றோ ஒரே தெருவில் அல்லது பகுதியிலேயே எத்தனையோ சபைகளிருக்கின்றன. இந்த நிலை தேவனது பரிபூரணச் சித்தமா அல்லது வெறுமனே அவரது அனுமதிச் சித்தமா என்று சொல்வதற்கில்லை. இப்படியிருக்க, நமது கேள்விக்கு அடித்துப் பதில் சொல்ல முடியாது, நடைமுறைக்கேற்றபடியே பதில் கொடுக்க முடியும்.

பெந்தெகொஸ்தே மற்றும் அதுபோன்ற சபைகளிலிருக்கும் உறுப்பினர்களில் கணிசமானோர் புராதனச் சபைகளிலிருந்து வந்தவர்களே. இவர்களில் ஒரு சிலர் தங்கள் தாய்ச் சபைகளை ஒரேடியாக விட்டுவிட்டனர்; மற்றவர்களோ பழைய, புதிய ஆகிய இருவகை சபைகளிலுமுள்ள நன்மையான காரியங்களை அனுபவிக்க விரும்புகின்றனர். பெரும்பாலும் ஆங்கிலத்தில் கல்வி பயிலும் பிள்ளைகள் பிராந்திய மொழிகளைவிட ஆங்கில ஆராதனைகளை விரும்பும்போது பெற்றோர் ஒத்துப்போகத்தான் வேண்டியதிருக்கிறது. சில சபைகள் ஆன்மீக ரீதியில் பலமுள்ளவைகளாயிருக்கும்; ஆனால் அவைகளில் சிறுவருக்கும் வாலிபருக்கும் கிரமமான சிறப்பு ஊழியங்கள் இருக்காது. வாலிபர் தங்களது பிரச்னைகளைத் தெளிவாய்ப் பேசி நடைமுறை ஆலோசனைகள் தரும் துடுதுடுப்பான வாலிப பாஸ்டர் ஒருவரையே பெரிதும் விரும்புவர். மாற்றங்களை எதிர்க்கும் முதியவர்களின் ஆதிக்கத்திலிருக்கும் சபைகளில் வாலிபர் மூச்சுத் திணறுவர்.

இரு சபைகளில் அங்கம் வகிப்பது நினைக்கப்படும் இன்னொரு சூழலுமுண்டு. பெந்தெகொஸ்தே விசுவாசியொருவர் பாப்திஸ்து சபையொன்று மட்டுமே இருக்குமிடத்திற்கு வேலை மாற்றமாகிச் செல்கிறாரென்று வைத்துக்கொள்ளுங்கள். அவர் அவ்வூரிலிருக்கும்



வரை அந்த பாப்திஸ்து சபையிலேயே மகிழ்ச்சியுடன் பங்கேற்க வேண்டும். திருமணம் இன்னொரு காரியம். மெதடிஸ்டு சபைப் பெண் லுத்தரன் சபை மாப்பிள்ளையை மணப்பதால் தனது சபையை விட்டுவிடக் கட்டாயப்படுத்தப்பட வேண்டுமோ?

இன்னும் சில விசுவாசிகள் தங்கள் ஆன்மீக வளர்ச்சிக்காய்ப் புதிய சபைகளில் சேரும்போது, பழைய சபைகளின் அங்கத்தினர்களின் ஆசீர்வாதத்திற்காக அங்கும் தாங்கள் உறுப்பினராய்த் தொடர வாஞ்சிக்கின்றனர். பவுலும் மற்ற அப்போஸ்தலரும் வீடுகளில் புதிய சபைகளைத் துவக்கினாலும் யூதச் சபைகளோடுள்ள தங்கள் தொடர்புகளை முற்றிலும் துண்டித்துக்கொள்ளவில்லை (அப் 2:46; 3:1; 13:14-16; 14:1; 17:1-3; 18:4). இருக்கும் அமைப்புகளைச் சாதகமாக்கிக்கொண்டு திரள்களைச் சந்தித்தனர். ஒருமுறை ஒரு தேவதூதனே அப்போஸ்தலரைப் பார்த்து, ''நீங்கள் போய், தேவாலயத்தில் நின்று, இந்த ஜீவ வார்த்தைகள் எல்லாவற்றையும் மக்களுக்குச் சொல்லுங்கள்'' என்றான் (அப் 5:19,20). ஒரு சந்தர்ப்பத்தில் பவுல் தேவாலயத்தில் சுத்திகரிப்பு நாட்களெனும் சடங்குகளையெல்லாம் நிறைவேற்றினான் (அப் 21:26). தீமோத்தேயுவை விருத்தசேதனம் பண்ணினான் (அப் 16:3). கிறிஸ்தவ வாழ்வில் விருத்தசேதனத்திற்கு இடமேயில்லையென அவனுக்குத் தெரியும்; ஆனால் அவன் நடைமுறை ஞானத்தோடு செயல்பட்டான். யூதருக்கு அவன் யூதனானான்; கிரேக்கருக்கு கிரேக்கனானான். ''எப்படியாகிலும் சிலரை இரட்சிக்கும்படிக்கு'' அவன் ''சுவிசேஷத்தினிமித்தம்'' இப்படிச் செய்தான் (1 கொரி 9:19-23).

எல்லாம் சரியாயிருக்கிறதென ஒரு நிலைமையிருந்தால், விசுவாசிகள் உள்ளூர்ச் சபை ஒன்றில் மட்டும் அங்கம் வகித்து மற்ற சபைகளின் அங்கத்தினர்களோடு சுமூக உறவு வைத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லலாம். ஆனால் இன்றையச் சூழலில், மேற்குறிப்பிட்டது போன்ற நியாயமான காரணங்களிருந்தால், அப்படி அனுமதியுண்டானால், இரு சபைகளில் அங்கம்வகிப்பது குற்றமல்ல. ஒரே சபையில் உறுப்பினராயிருப்பதோ இரு சபைகளில் உறுப்பினராயிருப்பதோ ''ஒரே சரீரத்தில்'' அங்கமாகவும் ''ஒரே மேய்ப்பனின்'' ஆடுகளாகவும் இருக்கும் நமது நிலையைச் சற்றும் மாற்றாது (1 கொரி 12:12,13, 20,27; 1 பேது 2:25; எபி 13:20,21; யோ 10:16). ஆயினும், நான் இங்கு எழுதியிருக்கிறவைகளை ஒருவரும் ஒழுங்கீனத்திற்கோ கேட்க ஆளில்லாமல் அலைவதற்கோ மூடலாகப் பயன்படுத்தக்கூடாது.

## 56. யார் ஞானஸ்நானம் கொடுக்கலாம்?

சுவிசேஷத்தை அறிவிக்கும்படி கர்த்தரால் கட்டளைபெற்ற எவரும் மனந்திரும்புவோருக்கு ஞானஸ்நானம் கொடுக்கலாம் (மத் 28:19; மாற் 16:15,16).

இப்பொழுதெல்லாம் பெரும்பாலும் சபை மேய்ப்பர்கள்தான் ஞானஸ்நானம் கொடுக்கிறார்கள். ஆனால் சுவிசேஷகர்களும், அப் போஸ்தலர் என்றழைக்கப்பட்ட மிஷனரிகளுமே ஞானஸ்நானம் கொடுத்ததை நெடுகவே நடபடிகளில் பார்க்கிறோம். சுவிசேஷகனா கிய பிலிப்பு சமாரிய விசுவாசிகளுக்கும் எத்தியோப்பிய மந்திரிக்கும் ஞானஸ்நானம் கொடுத்தான் (அப் 8). லீதியாளும் குடும்பத்தினரும் பவுல் அல்லது அவனது உடன் மிஷனரி ஒருவரால் திருமுழுக்கு பெற்றனர் (அப் 16). சிறைச்சாலைக்காரனுக்கும் குடும்பத்தினருக்கும் மிஷனரிகள் பவுலும் சீலாவும் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் (அப் 16). இப்படித்தான்.

பவுலுக்கு ஞானஸ்நானம் கொடுத்த அனனியா வெறுமனே ''ஒரு சீடன்'' என்று அறிமுகப்படுத்தப்படுகிறான் (அப் 9:10). குறிப்பிட்ட தேவையும் நடத்துதலும் இருந்தால் அபிஷேகம் பெற்ற எந்த விசுவாசி யும் ஞானஸ்நானம் கொடுக்கலாம். ஆனால் பொதுவாக ஊழியர் ஒருவர் அதைச் செய்வது நல்லது. அவர் முழுநேர ஊழியரா, இல் லையா என்பது காரியமல்ல. ஆனால் பெண்கள் யாரும் ஞானஸ் நானம் கொடுத்ததாக வேதத்தில் இல்லை.

தான் யாருக்கெல்லாம் ஞானஸ்நானம் கொடுக்கிறானோ அவர் களெல்லாரும் தனக்குச் சொந்தம் என்று நினைக்கும் எவரும் இப் புனிதப் பணிவிடைக்குத் தகுதியுள்ளவரல்ல. யாருக்கெல்லாம் ஞானஸ் நானம் கொடுத்தானென்பதே பவுலுக்கு ஞாபகமில்லை! (1 கொரி 1:14-16). முகவரியையும் முதல் காணிக்கையையும் வாங்குமுன் ஆவியானவர் பிலிப்புவை மந்திரியிடமிருந்து தூக்கிக்கொண்டு போய் விட்டார்! (அப் 8:39). தாங்களே ஞானஸ்நானம் கொடுக்க உண்டா கும் சோதனையைப் பிரபல ஊழியர் மேற்கொண்டு, அந்த வேலை



யைத் தங்கள் உடன் ஊழியரிடம் விட்டுவிடவேண்டும். அப்பொழுது தான் ஸ்நானகனல்ல, ஸ்நானமே முக்கியம் பெறும். இயேசுவின் மாதிரியைக் கவனியுங்கள். அவரல்ல, அவரது சீடரே ஞானஸ்நானம் கொடுத்தனர் (யோ 4:3).

சகோதரன் பக்தசிங் அன்னிய பாஷை பேசுவதில்லை என்ற ஒரே காரணத்தால் அவரால் ஞானஸ்நானம் பெற்றவருக்குத் திரும்ப ஞானஸ்நானம் கொடுக்கும் ஒருவகை பெந்தெகொஸ்தேயினர் உண்டு! மணமான ஊழியர் கொடுக்கும் திருமுழுக்கு செல்லாது என்பது இன்னொரு குழுவின் விவாதம்! இவையெல்லாம் தவறான கருத்துக்களென்று கொஞ்சம் பரிசுத்த பொது அறிவு இருந்தால் தெரிந்துவிடும். ஒரு விசுவாசிக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்போது அவன் தேவனோடு நல்மனச்சாட்சியின் உடன்படிக்கைபண்ணிக் கொள்ள அவனுக்கு உதவுகிறோம், அவ்வளவுதான்.

## 57. ஜெபப் புத்தக முறையா, சுயாதீன ஆராதனையா?

சர்வ வல்லவரை ஆராதிப்பதே உன்னதமான கிறிஸ்தவ சேவை. தேவ மகிமையைப் பாடும் ஆராதனைக் குழுக்களை எழுப்புவதே நற்செய்திப்பணி மற்றும் மிஷனரி ஊழியங்களின் முடிவான நோக்க மாகும் (ரோ 10:14; 15:9-11). புதிய சபையினரது ஆராதனையைக் கருத்தாழமும் கிரமுமானதாக்கும் நோக்கோடு திருச்சபைப் பிதாக்கள் சபை கூடிவருதலில் பயன்படுத்தும்படி துதி ஜெப விண்ணப்பங்களை எழுதிக் கொடுத்தார்கள். ஆனால் நாளாவட்டத்தில் அவை அர்த்தமற்ற கடமையும் வறட்டுச் சடங்காகவும் மாறிவிட்டன. இச்சூழலில்தான் A. W. டோசர் போன்ற தீர்க்கர்கள் ஆராதனையைத் ''திருச்சபை தொலைத்துவிட்ட முத்து'' என்றழைக்கலாயினர்! சமீப காலங்களி லோ உலகெங்கிலும் துதி ஆராதனையின் ஆவி ஊற்றப்பட்டு, மூச்ச டைத்துக்கொண்டிருந்த நிலையில் வசந்த காற்று வீசத் துவங்கி யுள்ளது. இதில் பரவசமடைந்த கிறிஸ்தவர் பலர் ஜெபப் புத்தகங்கள் பயன்படுத்தி ஆராதிக்கும் பழைய முறையை அப்படியே தூக்கி யெறிந்துவிட்டு சுயாதீன ஆராதனை முறையைத் தழுவியுள்ளனர். இது முதியவர்களுக்கும் இளைய தலைமுறையினருக்கும் இடையில்

மட்டுமல்ல, புராதனச் சபைகளுக்கும் புதிய சபைகளுக்கும் இடை யிலேயும் ஒருவித இறுக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. இதைச் சரி செய்வது எப்படி?

பொதுவிட ஆராதனைகளுக்கான ஜெபங்களைத் திருச்சபையின் முற்காலத்துத் தலைவர்கள் ஆவியானவரின் அபிஷேகத்தோடுதான் எழுதினார்கள். சபைகளை இந்நாட்களில் குதூகல ஆராதனைக்குள் நடத்துபவர்களை எழுப்பியுள்ளதும் அதே ஆவியானவர்தான். எனவே இருவகை ஆராதனைகளையும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை என்றல்ல, ஒன்றையொன்று மேம்படுத்துபவை என்று ஏற்றுக்கொள் வதே முதிர்ச்சியின் அடையாளமாகும்.

சமாரியப் பெண்மணியோடு உரையாடிக்கொண்டிருந்த இயேசு, ஆராதனையானது ''ஆவியோடும்'' அதே வேளையில் ''உண்மை யோடும்'' (அல்லது, சத்தியத்தோடும்) ஏறெடுக்கப்படவேண்டுமென வலியுறுத்தினார் (யோ 4:24). சபைக் கூடுகைகளில் ஆவியின் வரங்களை அப்பியாசிக்கும் வழிமுறைகளை எழுதிக்கொண்டிருக்கை யில் அப்போஸ்தலன் பவுல், ஜெபிப்பதும் பாடுவதும் ''ஆவியோ டும்'' அதே வேளையில் ''கருத்தோடும்'' இருக்கவேண்டுமெனக் குறிப்பிட்டான் (1 கொரி 14:15). புத்தக ஜெபங்களில் கருத்துச் செறிவு அதிகமென்பதில் சந்தேகமேயில்லை; சுயாதீனமாய் ஆரா திக்கும்போது பெரும்பாலும் ஒரு சில கருத்துக்களே திரும்பத்திரும்ப வருவதாகவும் வேத வெளிப்பாட்டின் குறுகிய பகுதிகளே பயன் படுத்தப்படுவதாகவும் அமைந்துவிடுகிறது. அதே வேளையில் புத்தக ஜெபங்களைப் பயன்படுத்தும்போது ஆராதிப்போரின் உள்ளான உணர் வுகளை விடுதலையோடு வெளிப்படுத்துவது தடைபடுகிறது. ஒன் றுக்கு அடுத்தது தேவை. ஒவ்வொரு வகையினரும் மற்றவரிட மிருந்து கொஞ்சம் சேர்த்துக்கொண்டால்தான் ஆரோக்கியமான சம நிலை கிடைக்கும். எந்த வழிபாட்டு முறையும் மற்றதைவிட உயர்ந் ததோ தாழ்ந்ததோ கிடையாது. ஜெபப்புத்தக வழிபாட்டு முறையி லேயே பழக்கப்பட்டவர்கள் இன்றையப் புதிய அலையைப் புத்துணர் வூட்டுவதாய்க் கருதுவது போலவே, சுயாதீன ஆராதனை முறை யில் திரும்பத் திரும்ப ஒருசிலவற்றையே சொல்லிக் கருத்தாழமின்றி ருக்கும் நிலையினால் புளித்துப்போய் ''பழைய ரசமே நல்லது'' என உணரத் துவங்குவதும் உண்டு! (லூக் 5:39).



தொழுகையில் உடற்பாவனையும் கவனிக்கப்படவேண்டிய தொன்று. எழுந்து நிற்பது, தலை வணங்குவது மற்றும் முழங்காற் படியிடுவது தவிர வேறு உடற்பாவனைகள் புத்தக ஆராதனை முறை களைப் பின்பற்றும் சபைகளில் பொதுவாகக் காணப்படுவதில்லை. அடுத்த வகையினரோ வேதம் போதிக்கும் பிற பாவனைகளான கை களை உயர்த்துதல் (சங் 134:2; 1 தீமோ 2:8), கை தட்டுதல் (சங் 47:1) மற்றும் நடனமாடுதல் (சங் 149:3; 150:4) ஆகியவற்றைச் சரளமாய் அப்பியாசிக்கின்றனர். வேத வசனங்களுக்கிடையே பார பட்சம் காட்டுவதைத் தவிர்க்கவேண்டுமானால் முதற்குழுவினர் தங்களது தயக்கங்களை விட்டு வெளிவரவேண்டும். கலாச்சாரத் திற்கும் இங்கு இடமுண்டு என்பது உண்மை. திருமறையானது மத்திய கிழக்கத்திய கலாச்சாரத்தில் எழுதப்பட்டது. மேற்குறிப்பிடப் பட்டுள்ள எந்த உடற்பாவனையும் எந்தக் கலாச்சாரத்திற்கும் முற்றி லும் முரண்பட்டதாய்த் தோன்றவில்லை. வெறும் உணர்ச்சிவசம் பக்திவிருத்தியற்றது; ஆனால் நமது அன்பை ஆண்டவருக்கும் உடன் மனிதருக்கும் வெளிப்படுத்திக் காட்டவே உணர்ச்சிகள் தேவனால் நமக்கருளப்பட்டுள்ளன (மத் 22:37-39).

ஆயிரம்பேருள்ள பாடகர் குழுவின் பாடல்களை ரசிக்கும் சிலருக்கு பெந்தெகொஸ்தேயினரின் சத்தமான ஆராதனையைச் சகிக்க முடியாது. அது தெய்வீக ஆராதனைக்கு ஒவ்வாத ஒழுங்கீனமெனக் குற்றஞ்சாட்டுவர். இங்குங்கூட வேதம் இரண்டையுமே செய்யப் போதிக்கிறது. ''நீங்கள் அமர்ந்திருந்து நானே தேவனென்று அறிந்து கொள்ளுங்கள்'' என்கிறது சங்கீதம் 46:10. அடுத்த சங்கீதமே நம் மைத் தேவனுக்கு முன்பாகக் ''கம்பீர சத்தமாய் ஆர்ப்பரியுங்கள்'' என்றழைக்கிறது (சங் 47:1). சகரியா 2:10 நம்மைக் ''கம்பீரித்துப் பாடு'' என்றழைக்கிறது; 13ஆம் வசனத்திலோ ''கர்த்தருக்கு முன்பாக மவுனமாயிருங்கள்'' என்று சொல்லப்படுகிறோம்.

பெந்தெகொஸ்தேயினர் ஆராதனையை இன்னும் கூடுதல் ''ஒழுங்கும் கிரமமுமாய்'' நடத்தவேண்டுமென்று அறிவுறுத்துகிறேன் (1 கொரி 14:40). அதே வேளையில் பெந்தெகொஸ்தேயல்லாதவர் தங்களது ஆராதனையை இன்னும் விசையுள்ளதாக்க உற்சாகத்தையும் பரவசத்தையும் கூட்டிக்கொள்ளக் கேட்கிறேன். பரலோகத்தில் அமைதி அபூர்வம் என்பதை எப்பொழுதுமே அமைதியாக ஆராதிப்பவர்களுக்கு

நினைப்பூட்டுகிறேன்! (வெளி 8:1). பெந்தெகொஸ்தேயல்லாதவரின் ஆராதனையைச் செத்தது என்று தீர்த்துக்கட்டுவதைப் பெந்தெகொஸ் தேயினர் நிறுத்தவேண்டும். சத்தத்தை மட்டும் வைத்து உயிரிருக் கிறது என்று நிரூபிக்க முடியாது. ''கர்த்தரின் ஆவி எங்கே உண்டோ அங்கே விடுதலையுண்டு'' என்ற வசனத்தைச் சூழமைவை விட்டு எடுத்து வியாக்கியானிக்காதீர்கள் (2 கொரி 3:17). இங்கு ''விடுதலை'' என்பது மோசேயின் நியாயப்பிரமாணத்திலிருந்து கிடைக்கும் விடு தலைதானேயொழிய தேவ சமூகத்தில் இஷ்டம்போல் நடந்து கொள் வதற்கான அனுமதியல்ல (வச 14-16). ஆராதனையில் ''பய'' பக்தியை ஒருபோதும் விட்டுவிடக்கூடாது (பிர 5:1,2; எபி 12:28,29).

இசையைக் குறித்து ஒரு வார்த்தை: பழங்காலத்து ஆட்களுக்கு அதிரும் இசையும் வேகமான தாளங்களும் பிடிக்காது. சபைகளில் ஒருமனத்தைக் காத்துக்கொள்வதற்காக முதியவர்களின் உணர்வுகளை மதிக்க வேண்டும். அதே வேளையில், இளம் மற்றும் இனிவரும் தலைமுறையினரை நாம் இழந்துபோகாதிருக்க முதியவர்கள் சில காரியங்களைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்; மாற்றம் என்றவுடன் சீற்றம் கொள்ளக்கூடாது.

பழங்காலப் பாமாலை, கீர்த்தனைப் பாடல்களைப் போன்று இறை யியல் கருத்துக்கள் நிறைந்தவை அபூர்வம் (எபே 5:18,19; கொலோ 3:16). ஏராளம் தலைப்புகளின் மீது அவைகள் இயற்றப்பட்டவை. பெரும்பாலான நவீன காலப் பல்லவிகளோ ஒரு சில கருத்துக்க ளையே திரும்பத் திரும்பச் சொல்லுகின்றன; உபதேசக் கண்ணோட் டத்திலும் அவைகளுக்கு ஆரோக்கியம் போதாது. பாடல் இயற்று பவர்கள் தங்கள் பாடல் பல்லவிகளை அரங்கேற்றுமுன் முதிர்ந்த வேதப் போதகர்களுடன் உட்கார்ந்து சரிபார்க்க வருந்திக் கேட்கி றேன். இறையியல் சத்து (= தேவனைப் பற்றிய அறிவு) இல்லாத ஆராதனை தேவனுக்குப் பிடிக்காது (ஓசி 6:3,6). பரலோகத்திற்குச் சென்ற பின்னரும் நாம் மோசேயின் பழங்காலப் பாட்டையும் பாடிக் கொண்டிருப்போம் (வெளி 15:3,4; உபா 32).

நான் உயர் ஆங்கிலிக்கன் திருச்சபைப் பின்னணியிலிருந்து வரு கிறேன்; ஆனால் வெறுமனே ''உதடுகளின்'' சத்தம் அல்லது ''கை களின்'' அசைவு என்றில்லாது ஆராதனையானது ''இருதயத்திலி



ருந்து'' எழுந்து வருமானால் அது பெந்தெகொஸ்தேயினரின் ஆராதனை முறையென்றாலும் சரி, பெந்தெகொஸ்தேயல்லாதோரின் ஆராதனை முறையென்றாலும் சரி, எனக்கு அதில் சந்தோஷமாய்ப் பங்குபெறு வதில் பிரச்னையேயில்லை! (ஏசா 29:13; 1:15).

## 58. நடனமாடி ஆராதிக்கலாமா?

தாளத்திற்கேற்ப, பொதுவாக இசையுடன், உடலை அசைப்பதே நடனமாகும். தொன்றுதொட்டு நடனமானது தொழுகையோடு இணைந்து வந்திருக்கிறது. இஸ்ரவேலரது கீதப் புத்தகமான சங்கீதப் புத்தகம் நடனத்தோடு தேவனைத் துதிக்கும்படி பலமுறை தொழு வோரை அழைக்கிறது (சங் 149:3; 150:4).

நடனமென்பது ஒரு வெற்றிக் கொண்டாட்டமாகும். பார்வோனின் சேனைகள் மீது தேவ மக்களுக்குக் கிட்டிய வெற்றியை இஸ்ரவேல் பெண்கள் மிரியாம் முன்நடத்த நடனத்தோடு கொண்டாடினார்கள் (யாத் 15:19-21). அம்மோனியரை முறியடித்துத் திரும்பிவந்த யெப்தாவை அவனது குமாரத்தி நடனத்தோடு வரவேற்றாள் (நியா 11:34). பெலிஸ்தியரைச் சங்காரம் பண்ணி தாவீது திரும்புகையில் பெண்கள் நடனத்தோடு ஆரவாரித்தார்கள் (1 சாமு 18:6,7).

நடனமென்பது மகிழ்ச்சியையும் குதூகலத்தையும் வெளிக்காட்டும் ஒரு செயலாகும். தேவமக்கள் பின்வாங்கிச் சீர்கெட்டுப்போன போதோ தேவனது வீட்டைவிட்டு மகிழ்ச்சி ஒழிந்துபோனது. ஆடல் பாடலெல்லாம் அங்கலாய்ப்பாய் மாறிவிட்டதென எரேமியா புலம்பி னான் (புல 5:15,16; யோவேல் 1:16). ''உமது மக்கள் உம்மில் மகிழ்ந்திருக்கும்படி நீர் எங்களைத் திரும்ப உயிர்ப்பிக்கமாட்டீரோ?'' என்று தாவீது கதறினான் (சங் 85:6). புலம்பலெல்லாம் ஆடல் பாட லாகும் நாட்களுக்காய் அவன் ஏங்கினான் (சங் 30:11).

தேவனுடைய பெட்டி திரும்ப எருசலேமுக்குக் கொண்டுவரப் படுகையில் தாவீது தேவனுக்குமுன் நடனமாடினான் ( 2 சாமு 6: 12-15). அது சபைக்குத் திரும்பிவரும் தேவமகிமைக்கு முன்னடை

யாளமாகும் (1 சாமு 4:21). நாம் இன்று எழுப்புதலின், ஆதிநிலை யேகுதலின் காலங்களில் இருக்கிறோம். எனவே நடனமாடி தேவ னைத் துதிப்பது உயிர்பெறுகிறதென்பதில் ஆச்சரியமில்லை (எரே 31:11-13).

பாடுவதைப் போலவே, பயிற்சித்தும் நடனமாடலாம், பயிற்சியின் றியும் நடனமாடலாம். ஒன்றைவிட அடுத்தது மேலானதல்ல. யூத மக்கள் தங்களுக்கென்று ஒரு நாட்டியப் பாணியை வளர்த்துக்கொண் டார்கள். மேற்கத்திய நாடுகளின் பாணி வேறு. இந்திய நாட்டியமானது மென்மையும் கலையும் நிறைந்த அசைவுகளுக்குப் பேர்பெற்றது. தொழுகையிலும் சாட்சி பகருதலிலும் தனி நடனங்களும் குழு நடனங்களும் இடம்பெற சபைகள் உற்சாகப்படுத்தவேண்டும். தேவாதி தேவனை ஆதிவாசி விசுவாசிகள் நடனத்தோடு சேர்ந்து ஆராதிப்பதைப் பார்த்திருக்கிறேன். என்னே பரவசமும் பக்திவிருத் தியும் நிறைந்த அனுபவமது!

மிக நேர்த்தியாக அமைக்கப்பட்ட வாத்தியக் குழுவோடு இரட் சணிய சேனையினர் (Salvation Army) தெருக்களில் சுவிசேஷப் பவனி செல்வர். கர்த்தரது புகழைக் கொண்டாடவும், அவரது புண்ணி யங்களை அறிவிக்கவும் அனைத்துக் கிறிஸ்தவக் குழுக்களும் இவ் விதம் ஆடல் பாடலுடன் திறந்தவெளிப் பவனி செல்லவேண்டும் (சங் 68:24,25). குருத்தோலை ஞாயிறு பவனி ஒரு சிறந்த எடுத்துக் காட்டு (மத் 21:8-11). இவ்விதம் தேவனைத் துதிப்பது பரலோகில் சகஜமாயிருக்கும். இப்பொழுதே பயிற்சி பெறுவது நல்லது! (வெளி 7:9,10).

''புலம்ப ஒரு காலமுண்டு, நடனம்பண்ண ஒரு காலமுண்டு'' என்றெழுதினான் பிரசங்கி (பிர 3:4). தற்பரிசோதனையும் கண்ணீ ரோடுள்ள மனந்திரும்புதலையும் அடுத்துப் பொதுவாக ஆனந்த துதியொலி எழும்பும். ஆடல் பாடலுக்கு வழிவகுக்கும் இன்னொன்று ஆத்துமாதாயமாகும். நல்ல அர்த்தத்தில் ''நடனம்'' என்ற சொல் புதிய ஏற்பாட்டில் வரும் ஒரே இடம் இளைய குமாரன் சரிதையாகும் (லூக் 15:22-25). விண்தூதரும் இந்த நடனத்தில் சேர்ந்துகொள்வர்! (வச 10). இந்தியாவின் கிராமப்புறங்களில் அறுவடை நாட்டியங்கள் ஏராளமன்றோ?



ஆனாலும், எவ்வகை ஆராதனை முறையையும் எந்தவொரு சபையின் மீதும் நேரடியாகவோ மறைமுகமாகவோ திணிக்கக்கூடாது. தனது துதிபலிகளைத் தேவனுக்குச் செலுத்தத் தனக்கு விருப்பமான தொழுகை முறையைத் தெரிந்தெடுத்துக்கொள்ள ஒவ்வொரு விசு வாசிக்கும் விடுதலையுண்டு. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவித மனோதத்துவ நிலையுண்டு என்பதையும் மறந்துவிடக்கூடாது. நமது தேவன் பல்வகையில் பிரியப்படுகிறவர். ஒன்றாயிருத்தல் என்றால் ஒன்றுபோலிருத்தல் எனப்படாது. ஆண்களைவிடப் பொதுவாகப் பெண்கள் அதிகம் உணர்ச்சிவசப்படக்கூடியவர்கள். பழைய ஏற்பாட் டில் நடனமாடியது பெரும்பாலும் பெண்கள் என்பதற்கு இது ஒரு காரணமாயிருக்கலாம்!

ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஆராதிக்கும் புதிய ஏற்பாட்டுச் சபைகளில் அந்தந்த கலாச்சாரம் ஒத்துக்கொள்ள முடியாத வழிபாட்டு முறைகள் அகற்றப்பட வேண்டும். சகலமும் ''ஒழுங்கும் கிரமமு மாய்'' செய்யப்பட வேண்டும்! (1 கொரி 14:40).

## 59. அவிசுவாசிகளுடன் விசுவாசிகள் அப்பம் பிட்கலாமா?

எப்படி முடியும்? ''நீதிக்கும் அநீதிக்கும் சம்பந்தமேது? அவி சுவாசியுடனே விசுவாசிக்குப் பங்கேது?'' (2 கொரி 6:14-16).

திருவசனத்தை ஏற்றுக்கொண்டு திருமுழுக்கு பெற்றவரே ஆதிச் சபையில் அப்பம் பிட்குதலில் பங்குபெற்றனர் (அப் 2:42,46). அப்பம் பிட்கக் கூடி வந்தவர்கள் ''சீடர்கள்'' என வாசிக்கிறோம் (20:7).

அப்பமானது கிறிஸ்துவின் சரீரத்தின் ஐக்கியமாகும். அவரது சரீரத் தில் அங்கங்களாகாதவர் அந்த அப்பத்தைப் புசிக்கக்கூடாது (1 கொரி 10:16,17). மறுபடி பிறந்தவர், அதாவது ஆவியானவரால் கிறிஸ்துவின் சரீரத்திற்குள் ஞானஸ்நானம்பண்ணப்பட்டவர் மட்டுமே கர்த்தரின் பந்தியில் பங்கு பெறலாம். கிறிஸ்தவரல்லாதோர் அல்லது பெயர்க் கிறிஸ்தவர் கர்த்தரின் பந்தியில் சேரத் துணிந்தால் மறுபடி பிறந்தவர் அதைவிட்டு அகல வேண்டும். கர்த்தருக்குக் கோபமூட்டக்கூடாது.

கர்த்தரின் பந்திக்கு பஸ்கா ஒரு முன்னடையாளமாகும். ''கர்த்தர் மோசேயையும் ஆரோனையும் நோக்கி: பஸ்காவின் நியமமாவது, அந்நிய புத்திரன் ஒருவனும் அதைப் புசிக்கவேண்டாம். பணத்தினால் கொள்ளப்பட்ட அடிமையானவன் எவனும் நீ அவனுக்கு விருத்த சேதனம் பண்ணினபின் அதைப் புசிக்கலாம். அந்நியனும் கூலியாளும் அதிலே புசிக்கவேண்டாம்'' (யாத் 12:43-45). இன்று விருத்த சேதனமானது இருதயத்தில் செய்யப்படுவது. புது சிருஷ்டியாக மாறியுள்ளோரே புது உடன்படிக்கையின் போஜனத்தைப் புசிக்கலாம்.

உங்கள் சபையில் அப்பமும் இரசமும் மறுபடி பிறக்காதவர்க்கும் பரிமாறப்படுமானால் உங்கள் ஆயரோடு உரையாடி அதை நிறுத்தக் கேளுங்கள். அவர் மறுத்தால், விசுவாசிகளுக்கு மட்டுமே பந்தியை அனுமதிக்கும் வேறொரு சபையில் நீங்கள் அப்பம் பிட்பதைத் தவிர வேறு வழியில்லை.

## 60. பாதம் கழுவுதல் ஒரு நியமமா (ordinance)?

தமது சீடரோடு பஸ்கா பந்தியில் உட்கார்ந்திருந்த இயேசு தாம் இருந்த இடத்திலிருந்து எழுந்து அவர்களுடைய பாதங்களைக் கழுவத்தொடங்கினார். அழகான இந்த அடையாளச் செயலுக்குப்பின் அவர் அவர்களை நோக்கி, ''நீங்கள் என்னைப் போதகரென்றும் ஆண்டவரென்றும் சொல்லுகிறீர்கள்; நீங்கள் சொல்லுகிறது சரியே, நான் அவர்தான். ஆண்டவரும் போதகருமாகிய நானே உங்கள் காலடிகளைக் கழுவினேன் என்றால் நீங்களும் ஒருவருடைய காலடிகளை ஒருவர் கழுவவேண்டும். நான் உங்களுக்குச் செய்ததுபோல நீங்களும் செய்யும்படி உங்களுக்கு முன்மாதிரி காட்டினேன்'' என்றார் (யோ 13:1-15). சில விசுவாசிகள் இயேசுவின் இவ்வார்த்தைகளுக்கு எழுத்தின்படியான அர்த்தம் கொடுத்து அப்பம் பிட்குமுன் பாதம் கழுவுதல் கட்டாயம் என வற்புறுத்துகின்றனர். மற்றவர்களோ இச்செயலில் ஒரு கலாச்சாரப் பழக்கத்திலிருந்து கிறிஸ்து பணியாளத் தத்துவத்தை மட்டுமே விளக்கினார் எனக் காண்கின்றனர். யார் சரி?



எகிப்து, சீரியா, பாலஸ்தீனம் போன்ற நாடுகளில் மக்கள் ஒரு வீட்டிற்குள் நுழையும்போது தூசியகற்ற தங்கள் பாதங்களைக் கழுவுவது வழக்கம் (ஆதி 18:4). வெப்ப காலத்தில் நெடுந்தூரப் பயணத்திற்குப்பின் படுக்கைக்குச் செல்லுமுன் கால்களை குளிர்நீரில் கழுவுவது புத்துணர்வூட்டுவதாயிருக்கும் (ஆதி 19:2). அது நல்வரவேற்புக்கும் ஓர் அடையாளமாயிருந்தது (ஆதி 24:31,32; 43:23,24). இக்காரியத்திற்காகத் தமக்குத் தண்ணீர் தரவில்லையென்று தம்மை விருந்துக்கு அழைத்திருந்த சீமோனை இயேசு மெதுவாகக் கடிந்து கொண்டார் (லூக் 7:44). இன்றும் இந்தியாவின் சில ஆதிவாசிக் கிராமங்களில் நுழையும்போது அக்கிராமத்தினர் வருவோரின் கால்களில் ஊற்றத் தண்ணீர் கொண்டுவராவிடில் அக்கிராமத்திற்குள் நுழைவது பாதுகாப்பல்ல என மிஷனரிகளுக்குச் சொல்லப்படுகிறது. மத்திய கிழக்குப் பகுதியிலுள்ள வசதியான வீடுகளில் இப்படித் தண்ணீர் கொடுப்பது வேலைக்காரர்தான். இயேசுவோ அதை மாற்றி, ''அன்பினால் ஒருவருக்கொருவர் பணியாற்றுங்கள்'' என்பதைக் கற்பித்தார் (யோ 13:14; கலா 5:13ஆ).

ஒன்றை நியமம் (ordinance) எனத் தீர்மானிக்க மூன்று நிபந்தனைகள் உண்டு. அது (1) கிறிஸ்துவால் கட்டளையிட்டிருக்கப்பட வேண்டும் (சுவிசேஷங்கள்); (2) ஆதிச்சபையால் செய்யப்பட்டிருக்க வேண்டும் (நடபடிகள்); (3) அப்போஸ்தலரால் விளக்கப்பட்டிருக்க வேண்டும் (நிருபங்கள்). அப்படியானால் சபையின் நியமங்களெனத் தகுதிபெறுவது திருமுழுக்கும் திருவிருந்தும்தான். ஆனால் தொழுகை ஆராதனையிலோ, திருவிருந்து ஆராதனையிலோ, மற்றெந்தக் கூடுகையிலோ ஒருவரது பாதங்களை ஒருவர் கழுவ விசுவாசிகளுக்கு எவ்விதத் தடையுமில்லை. வாய்ப்பு கிட்டும்போதெல்லாம் இதைச் செய்வது எனக்குப் பிரியம். மிஷனரிகள் தங்கள் சிறப்புக் கூடுகைகளில் ஒருவருக்கொருவர் காலடிகளைக் கழுவுவதைப் பயனுள்ளதாய்க் காணுகின்றனர். இச்செயல் பொருள்நிறைந்ததாய் இருக்கிறது. ஆனால் அதை ஒரு நியமமாக வலியுறுத்த முடியாது. இயேசு தமது சீடர்களின் பாதங்களைக் கழுவியதில் ஆன்மீகப் பொருளை மட்டும் எடுத்துக்கொண்டு எழுத்தின்படி அதை ஒருபோதும் செய்யாதவர்கள் தவறல்ல. இவ்விதக் காரியங்களை அவரவர் விருப்பத்திற்கேற்ப விட்டுவிடுவதே முதிர்ச்சியாகும்.

''பரிசுத்த முத்தத்துடன்'' ஒருவரையொருவர் வாழ்த்தும்படி புதிய ஏற்பாடு குறைந்தது ஐந்து முறை சொல்லுகிறது (ரோ 16:16; 1 கொரி 16:20; 2 கொரி 13:12; 1 தெச 5:26; 1 பேது 5:14). ஆனால் இந்தியாவின் பெரும் பகுதிகளில் கலாச்சாரத்திற்கு இது ஒவ்வாததால் நாம் நமது சபைகளில் இதை அப்பியாசிப்பதில்லை. வாழ்த்துதலுக் கும் வரவேற்புக்கும் அடையாளமான முத்தத்தைப் போன்றதே காலடி கழுவுவதும் (லூக் 7:44,45). கலாச்சாரப் பழக்கங்களைக் குறித்துச் சண்டையிட்டு அன்பு, அங்கீகரிப்பு ஆகிய அருங்குணங்களை இழந்துவிடாதிருப்போம்!

## 61. Reverend, Father போன்ற பட்டங்களைப் பயன்படுத்தலாமா?

எல்லாவிதச் சபைப் பிரிவுகளின் ஆதரவையும் பெற்றுள்ள சபைப் பிரிவு பாகுபாடற்ற ஒரு மிஷனரி இயக்கத்தை நிறுவிய தலைவன் என்ற வகையில் பதில் சொல்ல எனக்கு இது ஓர் இக்கட்டான கேள்வி.

பழைய ஏற்பாட்டில் சாதா மக்களுக்கும் ஊழியருக்குமிடையே வேறுபாடு இருந்தது. தீர்க்கதரிசிகள், ஆசாரியர், இராஜாக்கள் மட் டுமே அபிஷேகிக்கப்பட்டனர். ஆனால் புதிய உடன்படிக்கை யின்கீழ் பரிசுத்த ஆவியானவர் ''மாம்சமான யாவர் மீதும்''—அதாவது தேவ மக்கள் யாவர் மீதும்—''குமாரர், குமாரத்திகள், வாலிபர், வயோதிபர் (மூப்பர்), வேலைக்காரர், வேலைக்காரிகள்''— இறங்கி வருகிறார் (அப் 2:16-18). கிறிஸ்துவுக்குள்ளான விசுவாசிகள் அத்தனை பேரும் இன்றும் நித்தியத்திலும் தேவனுக்கு முன்பாக இராஜாக்களும் ஆசாரி யர்களுமாயிருக்கின்றனர் (1 பேது 2:9; வெளி 1:4-6). ஆசாரியர், ஆசாரியரல்லாத சாதா மக்கள் என்று இரு வகுப்பினர் இன்று கிடை யாது. தேவ மக்கள் அனைவரும் ஆசாரியர்தான். ஒவ்வொரு விசுவாசி யும் பல்வேறு பொறுப்புகளும், வரங்களும் பெற்றுத் தேவனுக்கும் மனிதருக்கும் பணிவிடை செய்யும் ஊழியனாவான்.

புதிய உடன்படிக்கை அமுலுக்கு வருமுன்னரே யூத தேவாலயப் பழக்கமாகிய தனிப் பட்டங்கள், வித்தியாசமான உடைகள் ஆகியவை பயன்படுத்துவதற்கெதிராக இயேசு பேசினார் (மத் 23:1-10). அவரது



இரட்டை விளக்கம் இதுவே: ''பரலோகத்திலிருக்கிற ஒருவரே உங்க ளுக்குப் பிதாவாயிருக்கிறார்... நீங்களெல்லாரும் சகோதரராயிருக் கிறீர்கள்.'' எந்தக் காரியத்திலும் கிறிஸ்துவின் வார்த்தைகளே முடி வானவை. அதை மாற்றத் துணியாதிருப்போம்.

கிறிஸ்துவின் போதனையைச் சபையில் அப்போஸ்தலர்கள் அப் படியே பின்பற்றினர். Rev. பால் என்றோ, Rt. Rev. பீட்டர் என்றோ, Father ஜான் என்றோ நடபடிகளிலோ நிருபங்களிலோ நாம் வாசிப்பதில்லை. பவுலைப் பேதுரு வெறுமனே ''சகோதரன் பவுல்'' என்றே அழைத்தான் (2 பேது 3:15). இந்தியாவில் முக்கிய அப் போஸ்தலர்களில் ஒருவராகிய பக்த்சிங் அவர்கள் (1903-2000) ஒரு வரும் தன்னை Rev. பக்த்சிங் என்று அழைக்க அனுமதிக்கவில்லை. இந்தியாவின் தலைசிறந்த மேய்ப்பர்களில் ஒருவராகிய சென்னை மேய்ப்பர் G. சுந்தரம் அவர்கள் (1908-1989) தனது பெயரை எங்கும் சகோதரன் G. சுந்தரம் என்றே அச்சடிப்பார். ஒரு காலத்தில் புராதனச் சபைகளின் ஊழியர் பல பட்டங்களைப் பயன்படுத்துகிறார்களென்று பெந்தெகொஸ்தே மேய்ப்பர்கள் அவர்களைக் கேலி பண்ணினார்கள். இப்பொழுதோ பெந்தெகொஸ்தே ஊழியரே இவ்விதப் பட்டங் களுக்கு வேட்டையாடித் திரிகிறார்கள். வெட்கம்! நாம் எதையாவது மாற்றினால் அது வேதத்திற்கு நெருங்கிச் செல்வதற்காகத்தான் இருக்க வேண்டுமே ஒழிய இன்னொரு மனிதப் பாரம்பரியத்தைத் தழுவி விடக்கூடாது. யோவானுக்கு வெளிப்படுத்துதலைக் கொண்டுவந்த தூதன்கூட தன்னை ஒரு ''சகோதரன்'' என்றே அறிமுகப்படுத்தினான் (வெளி 19:10; 22:9).

எளிய புதிய ஏற்பாட்டுச் சபையமைப்பை விட்டு மனித ஆளுகை முறைகளுக்குள் சபையானது திசை திரும்பச் சென்ற பிற்காலங்களில் தான் குருத்துவப் பட்டங்களெல்லாம் கொடுக்கப்பட்டன. மாபெரும் சீர்திருத்தத்தையடுத்து சபை முற்றிலுமாக புதிய ஏற்பாட்டுக் கிறிஸ்த வத்திற்குத் திரும்பி வந்துவிட்டதென்று சொல்லமுடியாது. சொல்லப் போனால், சீர்திருத்தம் இன்னும் முற்றுப்பெறவில்லை. சீர்த்திருத்தத் திற்காக எடுத்து வைக்கவேண்டிய ஒவ்வொரு அடியும் வேதனை யுள்ளது, கிரயம் மிக்கது. ஆனால் சபைத் தலைவர்களுக்குக் கொடுக் கப்பட்ட அழைப்பு அதுவே: ''நீ இன்ன நிலைமையிலிருந்து விழுந் தாய் என்பதை நினைத்து மனந்திரும்பு... இல்லாவிட்டால்...'' (வெளி 2:5).

ஊழியப் பிரதிஷ்டை என்பது ஒரு குறிப்பட்ட பணிக்கு ஒரு நபரைப் பிரத்தியேகமாக நியமிப்பதுதானேயொழிய அது ஒரு பட்ட மளிப்பு விழா அல்ல (அப் 13:2,3; தீத் 1:5). எடுத்துக்காட்டாக, அந்தி யோகியாவின் உள்ளூர்ச் சபையில் ''தீர்க்கதரிசிகளாகவும் போதகர் களாகவும்'' இருந்த பவுலும் பர்னபாவும் பரந்த வெளியுலக ஊழியத் திற்காகப் பிரதிஷ்டை செய்து பிரிக்கப்பட்டபோது ''அப்போஸ்தலர்'' என்று அழைக்கப்படலாயினர் (அப் 13:1; 14:14). அப்போஸ்தலன் பவுல், சுவிசேஷகன் பிலிப்பு, மேய்ப்பர் தீமோத்தேயு என்றெல்லாம் சொல்லலாம்; ஏனெனில் இவைகள் வேத அங்கீகாரம் பெற்ற ஊழியப் பெயர்கள். ''Rev'' என்பது ''அவருடைய'' நாமம் (''Holy and Reverend are His Name!'') (சங் 111:9).

இந்தியப் பிரசங்கிமாருக்கு இப்பொழுது டாக்டர் பட்ட பைத்தியம் பிடித்திருக்கிறது. பட்டங்கள் எவரையும் பெரியவராக்கிவிடாது. பெரு வாரியான இன்றைய டாக்டர் பட்டங்களெல்லாம் காசுக்கு இரண்டு! சென்னையிலுள்ள இந்துஸ்தான் வேதாகமக் கல்லூரியினர் (HBI) திருச்சபையினருக்கும் மற்றோருக்கும் நான் ஆற்றியுள்ள தொண் டினைப் பாராட்டி எனக்கு 2000இல் ஒரு டாக்டர் பட்டம் கொடுத்து கவுரவித்தனர். ஆனால் நான் எப்பொழுதும் சகோதரன் ஸ்டான்லி என்றே அழைக்கப்பட விரும்புகிறேன்.

குருத்துவப் பட்டங்களை வைத்திருந்தும் சபைச் சரித்திரத்தில் தேவனால் வல்லமையாகப் பயன்படுத்தப்பட்ட பலருண்டே என்று நீங்கள் விவாதிக்கலாம். ''அறியாமையின் காலங்களின்'' பழக்கவழக் கங்களைத் தொடர்வதற்கு இது காரணமாகாது. தேவன் எதையாவது பொறுத்துக்கொண்டாரென்றால் அவர் அதை ஆமோதித்தார் என்று பொருளாகாது. பழைய துருத்திகளை எவ்வளவு சீக்கிரம் நாம் தூக்கி எறிகிறோமோ அவ்வளவுக்கதிகமாக புதிய இரசத்தின் ஆசீர்வாதங் களை நாம் பருக முடியும்!



## 62. பெண்கள் முக்காடிட்டுக்கொள்ள வேண்டுமா?

கொரிந்தியருக்குப் பவுல் எழுதிய முதல் நிருபத்தின் பெரும் பகுதி அவர்கள் சபையிலிருந்த பிரச்னைகளை அடுத்ததாகும். பத்துக் கும் மேற்பட்ட அவர்களது கேள்விகளுக்கு அவன் தெளிவான பதில் கள் தருகிறான். அப்போஸ்தலன் அச்சபையில் தீர்த்துவைத்த காரி யங்கள் எக்காலத்திற்கும் பொருந்துமாகையால் தேவன் தமது அநாதி தீர்மானத்தின்படி இந்நிருபத்தைத் திருமறையில் சேர்த்துவிட்டார். இந்நிருபத்தின் பதினோராம் அத்தியாயத்தின் முதல் பாதியில் முக் காடு சம்பந்தமானவை விவாதிக்கப்பட்டுள்ளன. கீழ்வரும் விளக்கங் களை வாசிக்கும்முன் முதல் பதினாறு வசனங்களை விருப்பு வெறுப் பின்றிக் குறைந்தது மூன்று முறையாவது உங்களை வாசிக்கக் கேட்கிறேன்.

''பழங்காலம் முதல் பெண்களின் கூந்தல் இச்சிக்கப்படத்தக்கதாக இருந்துவந்தது. முக்காடிடத் தவறுவது ஆண்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவதாகக் கருதப்பட்டது. யூதர் இருந்த பாலஸ்தீனத்திலும் மற்றும் சில பகுதிகளிலும் முக்காடிடும் பழக்கம் இருந்தது. ஆனால் உயர்வகுப்புப் பெண்கள் தங்கள் நாகரீகக் கூந்தலமைப்புகளை வெளிக் காட்ட விரும்பி முக்காடிட்டுக்கொள்ளவில்லை. எனவே உயர்வகுப்பு நாகரீகத்திற்கும் தாழ்வகுப்பு நாணத்திற்குமிடையே எழுந்த மோத லுக்கு அப்போஸ்தலன் பதில் கொடுக்கவேண்டியதாயிற்று'' *(IVP Bible Background Commentary).*

முக்காடுவதற்குச் சாதகமாகவே அப்போஸ்தலன் பேசினான் என்பது தெள்ளத் தெளிவு. தனது முடிவுக்குக் குறைந்தது நான்கு காரணங்கள் கொடுத்தான். முதலாவது, தேவனது, கிறிஸ்துவினது மற்றும் புருஷனது தலைமைத்துவம் (1 கொரி 11:3-8), இரண்டாவது, ஆண் பெண் படைப்பில் தேவனது திட்டத்தைக் குறிப்பிடுகிறான் (வச 9). மூன்றாவது, நமது ஆராதனையைக் கவனித்து, சபையில் தேவனது ஆளுகை மற்றும் ஒழுங்குமுறைகளைக் குறித்துக் கரிசனை கொண்டிருக்கும் தேவதூதர்களைக் குறித்துப் பேசுகிறான் (வச 10). தேவனது தலைமைத்துவத்திற்கெதிராக இரண்டகம் பண்ணிய பிர

தான தூதனே சாத்தானாக மாறினான் என்பதை நினைவிற்கொள்க. இறுதியாக, பவுல் நமது ''சுபாவத்தை'' நினைப்பூட்டுகிறான் (வச 15). அதாவது தனக்குக் கொடுக்கப்பட்ட நீண்ட மயிரை மூடிக் கொள்ளும்போது தேவனது நியமனத்திற்கு அவள் ஆமென் சொல்லு கிறாளென்பதே இவ்வசனத்தின் பொருளாகும்.

முக்காடிடுவதை வெறுமனே கலாச்சாரத்திற்கடுத்தது எனத் தள்ளி வைப்பது முற்றும் ஞானமற்றது. அவ்விதம் வியாக்கியானித்தால் புதிய ஏற்பாட்டின் எத்தனையோ அருமையான பகுதிகளை நமக்கற்றவை என ஒதுக்கிவிட வேண்டியதிருக்கும். எடுத்துக்காட்டாக, அதே அத்தி யாயத்தின் இரண்டாம் பகுதியில் விவாதிக்கப்பட்டுள்ள கர்த்தரின் பந்தியும் யூதக் கலாச்சாரப் பின்னணியில்தான் நியமிக்கப்பட்ட ஓர் அடையாளச் செயலாகும்! நமது கிறிஸ்தவ வாழ்வில் அடையாளங் களின் அர்த்த நிறைவுகளை இழந்துவிடாதபடிப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

நவீன முடியலங்காரங்களும் நாகரீக உடைகளும் ஆண் பெண் வேறுபாடுகளையே அழித்துக்கொண்டிருக்கின்றன. அப்போஸ்தலர் ஒப்புவித்த பாரம்பரியக் கட்டளைகளைக் கைக்கொள்வது பெரும் சரிவிலிருந்து நம்மைக் காக்கும் (வச 2). இன்றையப் போக்கைக் கர்த்தரின் சிந்தையோடு புரிந்துகொள்ளும் எவரும், ஆண்களும் பெண் களும் ஆராதிக்கக் கூடிவரும் தேவனுடைய வீட்டில், அடக்க ஒடுக்க மான பூர்வ நடக்கையையே வற்புறுத்துவர் (எரே 6:16; 1 தீமோ 3:14,15).

மட்டுமல்ல, பெண்கள் சபையில் முக்காடிடுவது பொதுவாக எவ ரையும் புண்படுத்துவதில்லை; ஆனால் முக்காடிடாதிருப்பது ஒரு சிலருக்காவது இடையூறாகத்தானிருக்கிறது. அப்போஸ்தலர் ஆதரித்த பழங்கால அடையாளப் பழக்கத்தைக் கடைப்பிடிப்பதில் நமக்கு என்ன நஷ்டம்? இந்தியாவில் எண்பது சதவீதத்தினர் கிராமங்களில்தான் வாழுகின்றனர்; இதுதான் இன்னும் பெருவாரியாக நற்செய்திமய மாக்கப்படாத உலகாகும். மரியாதைக்கும் பக்திக்கும் அடையாள மாகக் கிராமப் பெண்கள் முக்காடிட்டுக் கொள்வது கலாச்சாரத்தில் ஊறியதொன்றாகும். இவ்வட்டாரங்களில் சபைகளை நிறுவும்போது இக்கலாச்சாரத்தைக் காப்போம்.



முக்காடு குறித்த இக்காரியத்தில் முற்றும் வேறுபட்ட கருத்துள்ள உண்மையான விசுவாசிகள் பலருமுண்டு. இவ்வித வேறுபாடுகளிருந் தாலும் ஆவியின் ஒருமனத்தைக் காத்துக்கொள்ள தனது விவாதத்தின் முடிவில் பவுல் கூறியது நமக்கும் உதவியாயிருக்கும்: ''ஒருவன் வாக்குவாதம் செய்ய மனதாயிருந்தால் எங்களுக்கும் தேவனுடைய சபைகளுக்கும் அப்படிப்பட்ட வழக்கமில்லையென்று அறியக்கட வன்'' (வச 16).

## 63. பெண்கள் கரங்களை உயர்த்தி ஆராதிக்கலாமா?

ஆடவரும் பெண்டிரும் சபையில் எப்படி நடந்துகொள்ளவேண்டு மென நடைமுறை ஆலோசனைகளைத் தீமோத்தேயுவுக்குப் பவுல் எழுதும்போது, ''ஆண்கள் கோபமும் தர்க்கமுமில்லாமல் பரிசுத்தமான கைகளை உயர்த்தி எல்லா இடங்களிலேயும் ஜெபம்பண்ணவேண்டு மென்று விரும்புகிறேன்'' என்று குறிப்பிட்டான் (1 தீமோ 2:8). அடுத்த வசனத்திலேயே பெண்கள் தகுதியான உடையுடுத்தவும், வெளியலங்காரத்திலல்ல நற்குணத்திலேயே அதிகக் கவனம் செலுத்த வும் வேண்டுமென அறிவுறுத்தினான் (வச 9). இப்படி எழுதப்பட்டி ருப்பதால், ஆண்களைப்போல் பெண்களும் கைகளை உயர்த்தி ஜெபிக் கலாமா, ஆராதிக்கலாமா என்ற கேள்வி எழுந்துள்ளது.

பெண்களுக்குக் கரங்களை உயர்த்தி ஆராதிக்க அனுமதியில்லை என்பது இங்கு பவுலின் கருத்தாய்த் தெரியவில்லை. சொல்லப்போ னால், 9ஆம் வசனம் ''பெண்களும்'' என்றுதான் துவங்குகிறதேயன்றி ''பெண்களோ'' என்றில்லை! கரங்களை ஜெபத்தில் ஆண்கள் மட் டுமே உயர்த்தலாம் என்று சொல்ல பவுல் இங்கு விழையவில்லை என்பது தெளிவு.

துதிக்கவும் ஜெபிக்கவும் கரங்களை உயர்த்துவது பொதுவான எபிரெயப் பழக்கம். மோசே பார்வோனிடம், ''என் கைகளைக் கர்த்த ருக்கு நேராக விரிப்பேன்'' என்றான் (யாத் 9:29). ''என் விண்ணப்பம் உமக்குமுன் தூபமாகவும், என் கையெடுப்பு அந்திப் பலியாகவும் இருக்கட்டும்'' என்று தாவீது ஜெபித்தான் (சங் 141:2). ஆலயத்தைப்

பிரதிஷ்டை செய்து ஜெபிக்கும்போது சாலமோன் ‘‘வானத்திற்கு நேராய்த் தன் கைகளை விரித்தான்’’ (1 இரா 8:22). எஸ்றா உபவாசத்துடன் தேவனுக்குமுன் முழங்காலிட்டு அவரை நோக்கித் தன் கைகளை விரித்தான் (எஸ்றா 9:5). யூதாவின் துன்மார்க்கத்தின்மீது கோபங்கொண்ட தேவன், ‘‘நீங்கள் உங்கள் கைகளை விரித்தாலும் என் கண்களை உங்களை விட்டு மறைக்கிறேன்’’ என்றார் (ஏசா 1:15).

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, ஜெபத்தில் கரங்களை உயர்த்தும் அல்லது விரிக்கும் இப்பொதுவான பழக்கம் ஆண்களுக்கு மட்டுமே இருந்ததென்று சொல்ல முடியாது. ‘‘மிரியாம் தன் கையிலே தம்புரை எடுத்துக்கொண்டாள்; பெண்கள் யாவரும் தம்புருகளோடும் நடனத்தோடும் அவள் பின்னே புறப்பட்டுப் போனார்கள்’’ (யாத் 15:20). கைகளையே உயர்த்தாமல் இப்படி நடனமாடிச் செல்வது சாத்தியமா? அப்படியே, புதிய தளபதியை மெச்சிக்கொண்டு அரசன் சவுலை வாழ்த்துவதற்காகப் பெண்கள் ‘‘ஆடல் பாடலுடன் புறப்பட்டு, மேளங்களோடும் கீதவாத்தியங்களோடும் மகிழ்ச்சியாய் எதிர்கொண்டு வந்தார்கள்’’ (1 சாமு 18:6). கைகளைத் தொங்கவிட்டுக்கொண்டோ மடித்துக்கொண்டோ இவ்வளவு குதூகல ஆட்டம் முடியுமா, கற்பனை செய்துபாருங்கள்! குருத்தோலைகளைக் கைகளில் பிடித்துக்கொண்டு இயேசுவுக்கு ஓசன்னா பாட வந்த பெருங்கூட்டத்தில் பெண்களில்லையோ? (யோ 12:12,13).

ஆதிவாசிக் கலாச்சாரத்தில், ஆண்கள் வாத்தியங்கள் வாசிக்க, பெண்கள் நடனமாடுவர். பொதுவாக ஆண்களைவிடப் பெண்கள்தான் நேர்த்தியாய் நடனமாடுவாரென்பது யாவரும் அறிந்த உண்மை. மிஷனரிப் பணித்தளங்களின் ஆராதனைகளில் ஆதிவாசி நடனத்தை ஊக்குவிக்கிறோம். அது அழகாயிருக்கும்!

சேலை உடுத்தும் கலாச்சாரத்தைச் சேர்ந்தவர்களோ, குறிப்பாக முந்தாவணியை வைத்துதான் முக்காடு போடவேண்டியதிருக்கும் நிலையில், பெண்கள் துதிக்கும்போது கரங்கள் உயர்த்துவதை எதிர்ப்பர். சல்வார் அல்லது உடுப்புகள் போடுவோரிடையே இப்பிரச்னை இல்லை. எப்படியென்றாலும் ஆராதிக்கும்போது ஆண்கள் தங்கள் கண்களை மூடித்தானேயிருக்கவேண்டும். ஆனாலும் எந்த உடற்பாவனையும் மறுபாலரைக் கவரும் வகையில் அமையாது பார்த்துக்கொள்ளவேண்டியது ஆண்-பெண் இருவருக்குமுண்டு! அதிலும் இவ்விதமான இறுக்கமான கலாச்சாரத்திலுள்ளவர்கள்?



ஆராதிக்கும்போது சில பெண்களின் உடற்பாவனை வெளிப்பாடுகள் குறைவாகவேயிருக்கும். அவர்களை கரங்களைத் தூக்கவோ நடனமாடவோ நேரடியாகவோ மறைமுகமாகவோ வற்புறுத்தக்கூடாது. துதிக்கும்போது சரளமாய்க் கரங்களைத் தூக்கும் பெண்களைக் குற்றஞ்சாட்டக்கூடாது. இது உபதேசத்திற்கடுத்த காரியமே அல்ல. ‘‘சகலமும் ஒழுங்கும் கிரமமுமாய்ச் செய்யப்படட்டும்’’ (1 கொரி 14:40).

## 64. பெண்கள் பிரசங்கிக்கலாமா?

இறையரசில் பெண்கள் இரண்டாம் தரக் குடிமக்கள் அல்ல. கிறிஸ்து இயேசுவில் ஆணென்றும் பெண்ணென்றுமில்லை (கலா 3:28). தேவனுக்குள் இருவரது நிலையும் சமம். இருதிறத்தாரையும் பிதாவானவர் ஒன்றுபோல் நேசிக்கிறார் (2 கொரி 6:18). கணவனும் மனைவியும் சேர்ந்து நித்திய ஜீவனுக்குச் சுதந்தரவாளிகள் (1 பேது 3:7). ஒருவரில்லாது அடுத்தவரில்லையாதலால் ஆண்களைவிடப் பெண்கள் குறைவானவர்களல்ல (1 கொரி 11:11,12).

இருப்பினும், திருச்சபையின் வாழ்விலும் பணியிலும் தங்கள் நலனுக்காகவும் பொது நலனுக்காகவும் பெண்களுக்குச் சில வரம்புகள் நியமிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்லலாம்— அதாவது, ‘‘பக்திவிருத்தியும், புத்தியும், ஆறுதலும்’’ உண்டாகப் பேசலாம் (அப் 2:17,18; 21:9; 1 கொரி 14:3; 11:5). ஆனால் ‘‘உபதேசம்பண்ண’’ வேதம் அவர்களை அனுமதிக்கவில்லை (1 தீமோ 2:12). அதாவது, சபையில் பெண்கள் உபதேசங்களைப் (doctrines) போதிக்கக்கூடாது. உபதேசத்தைப் போதிப்பதில் அதிகாரமும் பெரிய பொறுப்புமுண்டு (2 கொரி 13:10; யாக் 3:1). பெண்களுக்கு இந்த அழைப்பில்லை. இதற்கான காரணத்தை அப்போஸ்தலன் பவுல் இவ்விதம் விளக்குகிறான்: ‘‘ஆதாம் வஞ்சிக்கப்படவில்லை, பெண்ணே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்குட்பட்டாள்’’ (1 தீமோ 2:14). பொதுவாக ஆண்களைவிடப் பெண்கள் எளிதில் ஏமாற்றப்படக் கூடியவர்கள்.

சபைகளில் பெண்கள் ''பேசுகிறது'' அயோக்கியமென்று பவுல் கொரிந்தியருக்கு எழுதியபோது அவன் தீர்க்கதரிசனம் சொல்லுதலையோ, ஜெபித்தலையோ, சாட்சிபகர்தலையோ குறிப்பிடவில்லை (1 கொரி 14:34,35). சபையில் உபதேசித்துக்கொண்டிருந்தவர்களிடம் அங்குள்ள பெண்கள் இடையிடையே கேள்வி கேட்டுக்கொண்டிருந்தனர். பவுலுக்கு இது அவ்வளவு ஒழுங்காகவும் பாங்காகவும் தெரியவில்லை. எனவே தங்கள் சந்தேகங்களை வீட்டில் கணவரிடம் கேட்டுத் தீர்த்துக்கொள்ள அறிவுறுத்தினான் (வச 35).

ஒவ்வொருவரும் தான் அழைக்கப்பட்ட நிலையில் தேவனுக்கு முன் நிலைத்திருக்கவேண்டும் (1 கொரி 7:24). ஆண்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பொறுப்புகளை பெண்கள் இச்சிக்காது, தேவ மகிமைக்காகத் தங்களது வரங்களும் தாலந்துகளும் அழகாகப் பயன் படக்கூடிய பகுதிகளில் கவனம் செலுத்தவேண்டும். விதவிதமாய்க் கனிகள் தொங்குகையில் விலக்கப்பட்ட கனியைத் தொடுவானேன்?

எடுத்துக்காட்டாக, வீட்டிலும் வெளியிலும் தேவன் தங்களுக்களித்த பொறுப்பை எவ்விதம் நிறைவேற்றலாமெனப் பெண்களுக்குப் பெண்கள் போதிக்கலாம் (தீத் 2:4,5). துதியிலும் தொழுகையிலும் பெண்களை வழிநடத்த மிரியாம்கள் தேவை (யாத் 15:20,21). அன்பைச் செயலில் காட்டும் தொற்காள்களுக்கு எப்பொழுதும் பஞ்சம் (அப் 9:36,39; நீதி 31:20). உள்ளூரிலும் வெளியூரிலும் ஊழியம் செய்யும் குழுக்களில் பெண்கள் உதவியாயிருக்கலாம் (லூக் 8:1-3; பிலி 4:3; ரோ 16:6). கெங்கிரேயா சபையிலிருந்த ஓர் ''உதவிக்காரியைக்'' (deaconess) குறித்து வாசிக்கிறோம் (ரோ 16:1,2). தங்களுக்கே உரிய தாய்மைக் குணத்தினால் சிறுவர் சிறுமியருக்குப் போதிப்பதில் பெண்களுக்கு நிகரில்லை.

மிஷனரிப் பணித்தளங்களில் தேவன் அநேக சகோதரிகளை வெகுவாய்ப் பயன்படுத்தியுள்ளார். இந்தியாவிலெல்லாம், அதுவும் குறிப்பாகக் கிராமங்களில், பெண்களே பெண்களைச் சந்திக்க முடியும். ஏறத்தாழ 50 சதவீத இந்தியர் பெண்களே! மீட்பின் செய்தியை நிறுத்தாது அறிவித்துக் கொண்டேயிருக்கும் அன்னாள் போன்றோர் தேவை (லூக் 2:36-38).



தலைமையைத் தொடாதவரை, பிரிஸ்கில்லாளைப்போல், தங்கள் கணவரின் ஊழியத்தில் ஈடுபட மனைவியருக்குத் தடையில்லை (அப் 18:25,26). ஆண்களுக்குக்கூடத் தேவையான வேளைகளில் திருவசனத்தை விளக்கலாம், ஆலோசனை கூறலாம். ஆனால் சபை கூடிவருகையில் அதிகாரத்துடன் உபதேசிக்க மட்டுமே அவர்களுக்கு அனுமதியில்லை. பக்திவிருத்திக்கான வார்த்தைகளையோ, தேவனது கிருபைக்கு சாட்சிகளையோ எப்பொழுதும் பகிரலாம்.

புதிய ஏற்பாட்டில் ஏறத்தாழ இருபது அப்போஸ்தலர் குறிப்பிடப் பட்டுள்ளனர். அனைவரும் ஆண்கள்தான். அப்படியே மேய்ப்பர் அல்லது மூப்பர் யாவரும் ஆண்கள்தான். ''ஒரே மனைவியுடைய கணவன்'' என்பதைக் கவனிக்க! (1 தீமோ 3:2; தீத்து 1:6). இல்லத்தைப் போலவே சபையிலும் தலைமைப் பொறுப்பு ஆண்களுக்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. தடம் மாறுவது தகாது!

## 65. தசமபாகம் யாருக்கு?

பழைய உடன்படிக்கையின்கீழ் யூதருக்கு நியாயப்பிரமாணத்தில் ஒரு கட்டளையாகத் தசமபாகம் நியமிக்கப்பட்டது. ஆனால் கிறிஸ்துவின் மரணத்திற்குப்பின் வந்த புதிய உடன்படிக்கை (1 கொரி 11:25; எபி 9:16,17) தசமபாகம் செலுத்துதலை ஒரு ''பிரமாணமாகக்'' கிறிஸ்தவருக்குப் போதிக்கவில்லை. கொடுத்தலைப் பற்றி எழுதும் போதும் வைராக்கிய யூதனாயிருந்த பவுல் ஒருமுறைகூட தசமபாகத்தைக் குறிப்படவில்லை. மாறாக, உற்சாகமாய், தாராளமாய், தியாகமாய்க் கொடுக்கவே போதிக்கப்பட்டிருக்கிறோம் (2 கொரி 8:2,3; 9:6,7). புதிய உடன்படிக்கையில் கொடுத்தலைக் குறித்த ''பிரமாணம்'' ஒன்றுமில்லாததால் எங்கு கொடுக்கவேண்டுமென்றும் சட்ட திட்டங்கள் கிடையாது. ஆனாலும், கீழ்க்கண்ட ஆலோசனைகளை வேத அடிப்படையில் தொகுக்கலாம்—

□ வேத வசனத்தை நமக்குப் போதிப்பவர்களைத் தாங்குவதே நமது முதல் பொறுப்பு. வசன உபதேச ஊழியத்தை உத்தமமாய்ச்

செய்கிறவர்களுக்கு ''இரட்டிப்பான கனம்'' கொடுக்கப்படவேண்டும் (1 தீமோ 5:17,18). பிரசங்க பீடத்திலிருந்தும், புத்தகங்கள், பத்திரிகைகள், ஒலி-ஒளித்தட்டுகள், வானொலி, தொலைக்காட்சி போன்றவை வாயிலாகவும், உள்ளூர் மேய்ப்பர் அத்துடன் வெளியூர் ஊழியர் மூலமாகவும் தேவ வசனம் நமக்கு வருகிறது. ஆன்மீக ஆசீர்வாதங்களுக்கு அடையாளமான அப்பமும் ரசமும் கொண்டுவந்த மெல்கிசேதேக்குக்கு ஆபிரகாம் தசமபாகம் கொடுத்தான் (ஆதி 14:18-20). ஆன்மீக நன்மைகளை நமக்கு விதைக்கும் எவருக்கும் நமது பொருளாதார நன்மைகளை அறுக்கும் உரிமையுண்டு (1 கொரி 9:11).

□ அடுத்து, கிறிஸ்தவரல்லாதோருக்கு நற்செய்தி அறிவிக்கச் செல்லுவோரைத் தாங்கவேண்டும். அது கர்த்தரின் நியமனம் (1 கொரி 9:14). மிஷனரியாயிருந்த எபிரெய நிருப ஆக்கியோன் தங்கள் பொருள்களைக் கொள்ளையிட அவனை அனுமதித்த விசுவாசிகளை வெகுவாய் மெச்சிக்கொண்டான் (எபி 10:34). மிஷனரிப் பணியானது பெரும்பாலும் புறவினத்தாரிடையே நடைபெறுவதால் அவர்களிடமிருந்து ஊழியர் பெரிய உதவியொன்றும் எதிர்பார்க்க முடியாது (3 யோ 7,8). மட்டுமல்ல, அதின் தன்மையினால் முன்னோடி மிஷனரிப் பணி செலவு மிகுந்தது.

□ மூன்றாவதாக, வேதாகம மொழிபெயர்ப்பு, அதின் அச்சடிப்பு, போதை மருந்துகளுக்கு அடிமைப்பட்டோர், குருடர், செவிடர், ஊமையர், தொழுநோயாளர், ஊனமுற்றோர், சிறைவாசிகள் போன்றோரிடையே நடக்கும் சிறப்பு ஊழியங்கள் ஆகியவற்றையும் தாங்கவேண்டும். வேத மொழிபெயர்ப்பாளர்கள், வேதாகமச் சங்கங்கள், இன்னும் இதுபோன்ற இலக்கிய ஊழிய நிறுவனங்கள் நன்கு ஆதரிக்கப்படாவிடில் புதிதாய் நிறுவப்படும் சபைகளுக்கும் வளரும் ஐக்கியங்களுக்கும் போதுமான வேதாகமங்களும் பிற புத்தகங்களும் கிடையாமற்போகும்.

□ அடுத்து, தரித்திரரைத் தாங்கவேண்டிய பொறுப்புண்டு. ''ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன் கொடுக்கிறான்'' (நீதி 19:17). சிறப்பாக விசுவாசிகளில் எளியவருக்கு உதவவேண்டும் (கலா 6:10). பரதேசிகள், திக்கற்றோர், விதவைகள் ஆகியோருக்கும் பழைய ஏற்பாட்டுத் தசமபாகம் பங்கிடப்பட்டது (உபா 14:28,29).



பெந்தெகொஸ்தே அருள்மாரியைத் தொடர்ந்து எளியவருக்கு விசுவாசிகள் வாரியிறைத்தனர் (அப் 2:44,45; 4:32,35). பசி தாகத்தால் வாடுவோருக்குக் கொடுப்பது கிறிஸ்துவுக்கே கொடுப்பதாம் (மத் 25:35-40). ஏழை லாசருவைக் கவனியாது விட்டது அந்தப் பணக்காரன் நரகம் சென்றதற்கு ஒரு காரணமாகும் (லூக் 16:19-21,25). நற்செய்திப்பணிக்கு வழியுண்டாக்கும் நிவாரணப்பணி நிறுவனங்கள் நமது பட்டியலில் இடம்பெறவேண்டும்.

□ புதிய உடன்படிக்கையில் லேவியர் என்றொரு தனிக் கோத்திரமோ, ஆசாரியர் என்றொரு தனி வகுப்போ கிடையாது. ''அனைத்து'' விசுவாசிகளும் இன்று ஆசாரியரே (1 பேது 2:9; வெளி 5:9,10). எதற்காக? ''அவரது புண்ணியங்களை அறிவிக்க!'' ஆம், ஒவ்வொரு விசுவாசியும் தன் சுற்றத்திலும் செல்லக்கூடிய இடமெங்கிலும் தேவ மகத்துவத்தையும் கிறிஸ்துவின் மகிமையையும் அறிவிக்கவேண்டும். இந்த ஆத்துமாதாயக நற்செய்திப் பணிக்குக் கைப்பிரதிகள், நற்செய்திப் புத்தகங்கள், இன்னும் பிற சாதனங்களெல்லாம் தேவை. ''கர்த்தருடைய பணத்தை'' தேவனுக்குப் பிரியமான இவ்விதக் காரியங்களுக்குச் செலவிட எவ்விதத் தடையுமில்லை. கூடாரத் தொழில் செய்து வந்த பவுல் தனது சம்பாத்தியத்தைத் தனது ஊழியச் செலவுகளுக்கும் குழு அங்கத்தினர்களுக்கும் செலவுசெய்தான் (அப் 18:3; 20:34). பழைய ஏற்பாட்டிலும் தேவ சமூகத்தில் தங்களுக்குப் பிரியமான வழிகளில் தசமபாகத்தைச் செலவழிக்க மக்கள் அனுமதிக்கப்பட்டிருந்தனர் (உபா 14:22-26).

மல்கியா 3:10ஐக் காட்டி தசமபாகம் உள்ளூர் மேய்ப்பருக்கு மட்டுமே உரியதெனப் போதிப்பாருண்டு. இந்த வியாக்கியானம் தவறு. புதிய ஏற்பாட்டுச் சபையின் ஐவகை ஊழியரில் மேய்ப்பர்கள் ஒன்று மட்டுமே. அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகள், சுவிசேஷகர்கள், போதகர்கள் ஆகியோர் அடுத்த நால்வர் (எபே 4:13). இந்த ஐந்து ஊழியர்களில் ஒரு சிலர் இடம்விட்டு இடம்செல்லும் சலன ஊழியர், மற்றவர் ஒரேயிடத்திலிருக்கும் உள்ளூர் ஊழியர். சலன ஊழியர் பெரும்பாலும் கிறிஸ்துவின் சரீரமாகிய பொதுவான சபைக்கும், தங்கியிருக்கும் ஊழியர் உள்ளூர்ச் சபைக்கும் ஊழியம் செய்கின்றனர். கர்த்தருடைய பணிக்காக எடுத்துவைக்கப்படும் பணம் இந்த இருவகை ஊழியருக்கும் அவர்களது ஊழியத் தன்மைக்கும் அளவுக்கும் ஏற்றாற்போல்

பகிர்ந்துகொடுக்கப்படவேண்டும். ''தசமபாகம் யாவும்'' தனக்குத்தா னென்று உரிமை கொண்டாடும் மேய்ப்பர் மற்ற நான்கு ஊழியருக் கும் சேரவேண்டியதைக் கொள்ளையாடுகிறார் என்றே பொருள்.

நடும் மிஷனரியாகிய பவுலும், நீர்ப்பாய்ச்சும் மேய்ப்பனாகிய அப் பொல்லோவும் விளையச் செய்யும் தேவனாகிய கர்த்தரின் பணத் தைப் பங்கிட்டுக்கொள்ளவேண்டும். தொழுவத்திலிருக்கும் ஆடு களை மேய்க்கும் மேய்ப்பரும் (1 பேது 5:2), தொழுவத்திலில்லாத ஆடுகளைத் தேடிச் செல்லும் மேய்ப்பரும் (மத் 9:36-38) சமமாக முக்கியமானவர்கள். இருவகையினருக்கும் தேவ மக்களின் அன்பும் ஆதரவும் தேவை.

மிஷனரிச் சிந்தையுள்ள மேய்ப்பருக்காகத் தேவனைத் துதிப்போம். தேவ மக்கள் தங்களுக்குக் கொடுப்பதில் தங்களுக்குத் தேவையான குறைந்த அளவை மட்டும் எடுத்துக்கொண்டு மீதமெல்லாவற்றையும் நற்செய்திப் பணிகளுக்குக் கொடுத்துவிடும் அவர்கள் கரங்களில் பெருந்தொகைகளைக் கொடுப்பது பாதுகாப்பு. ஆனால் மிஷனரி இயக்கங்களையும், பிற ஊழியங்களையும் முழுமூச்சாய் எதிர்த்து, வெளிநாடுகளிலுள்ள இவ்வித ஊழிய நிறுவனங்களிலிருந்து வரும் பணத்திற்கு மட்டும் வாயை விரிவாய்த் திறக்கும் பலர் இந்தியாவில் உண்டு! இந்த இரட்டை நிலையேன்? வெளிநாடுகளிலுள்ள தேவ மக்களின் ''தசமபாகக் காணிக்கைகளினாலேயே'' பெரும்பாலும் ஆதரிக்கப்படும் ஊழிய நிறுவனங்களின் பொருளுதவி எங்களுக்கு வேண்டாமென்று சொல்ல இவர்களில் எத்தனைபேருக்கு தைரிய முண்டு?

யாருக்கு எவ்வளவு கொடுக்கவேண்டுமென்பது விசுவாசிக்கும் கர்த்தருக்குமிடையேயுள்ள தனிப்பட்ட காரியம். கர்த்தருக்காகப் பிரித்து வைப்பதில் பாதியை உள்ளூர்ச் சபைக்கும் அடுத்த பாதியை பிற ஊழியங்களுக்கும் பகிர்ந்து கொடுக்க ஒருவர் ஆலோசனை கூறினார். இது நன்றாகத் தோன்றுகிறது. எப்படியானாலும், எந்தப் பயமுறுத்தலுக்கும் வற்புறுத்தலுக்கும் இடங்கொடாது, கிறிஸ்து உண்டாக்கின சுயாதீன நிலையில் உறுதியாய் நில்லுங்கள்!

கிறிஸ்தவரின் விசுவாசத்தை அசைக்கும் நவீனவாதிகளையும், இதவாதிகளையும் பிரசங்கபீடத்தில் அனுமதிக்கும் சபைகளுக்குக் கொடுப்பதில் எச்சரிக்கையாயிருங்கள். இவ்வித வேதப் புரட்டர் களுக்கு ஆதரவு தராதீர்கள் (2 யோ 10,11).



நீங்கள் எங்கு கொடுத்தாலும் அங்கு வரவுசெலவு கணக்கு விபரம் சரிவர வைக்கப்பட்டிருக்கிறதாவெனப் பார்த்துக்கொள்ளுங்கள். எந்த விதமாக வரும் பணத்திற்கும் அதிகார பூர்வமான ரசீது தரப்பட்டு கணக்குகள் தணிக்கை செய்யப்படவேண்டுமென்பது நாட்டின் சட் டம். தாங்கள் கர்த்தருக்கு மட்டுமே கணக்கொப்புவிக்க வேண்டு மென்பவர்களைக் குறித்து எச்சரிக்கை (2 கொரி 8:20,21). தங்கள் சுய சாம்ராஜ்யங்களைக் கட்டி, சுய விருப்பங்களை நிறைவேற்றும் ஊழியர் கையில் கண்மூடித்தனமாகப் பணத்தைக் கொடுப்பதற்குப் பதிலாக தேவ இராஜ்யத்தைக் கட்டும் தியாக ஊழியருக்குத் தோள் கொடுத்துதவுங்கள். சரியான கரங்களுக்குச் செல்லாவிடில் உங்கள் பரலோகக் கணக்கில் அது ஏறாது!

(24ஆம் கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

## 66. பெருங்கூட்ட சபைகளைப்பற்றி...?

சபைகளின் அங்கத்தினர் எண்ணிக்கையை மேய்ப்பர் பலர் தங்களுக்கு அந்தஸ்து எனக் கருதுகின்றனர். யார் சபை பெரிது எனும் எலிப்பந்தயம், குறிப்பாக பட்டணங்களிலும் நகர்களிலும், பெரு வாரியாய் நடக்கிறது. எல்லாச் சபைகளும் பெரிதாகவேண்டுமென் பது தேவ சித்தம் என்பது மறுக்கமுடியாதது. ஆனால் திரளான சபை யாரை மேய்ப்பதற்குச் செலுத்தவேண்டிய கிரயத்தையும் ''சீடர்களின் தொகை பெருகும்போது'' அத்துடன் வரும் பிரச்னைகளையும் சபை மேய்ப்பர்கள் மனதிற்கொள்ள வேண்டும் (அப் 6:1).

நாம் எங்கும் சிதறிச் செல்லவேண்டுமென்பதே தேவனது பொது வான சித்தமாகும். வெள்ளப் பெருக்கையடுத்து கடவுள் நோவாவை யும் அவன் புதல்வரையும் பார்த்து, ''பலுகிப் பெருகி மண்ணுலகை நிரப்புங்கள்'' என்றார் (ஆதி 9:1). மக்களோ தாங்கள் சிதறுண்டு போகாதபடி பாபேல் கோபுரத் திட்டத்தை மேற்கொண்டார்கள். தங்க ளது பெயரை நிலைநாட்ட விரும்பியதால் அவர்கள் கடவுளின் திட் டத்திற்கு முரண்பாடாய்ச் செயல்பட்டனர் (ஆதி 11:4). கடவுள் எவ்

விதம் அவர்களது திட்டத்தைத் தாறுமாறாக்கி எங்கும் அவர்களைச் சிதறடித்தாரென்பதை நாமறிவோம் (வச 7,8). எருசலேமிலிருந்த ஆதித் திருச்சபையும் இது போன்றதொரு தவற்றையே செய்தது. எருசலேமில் தொடங்கி உலகின் கடையெல்லை வரை அவர்கள் சாட்சிகளாய் வெளிக் கிளம்பச் செல்லவேண்டுமென்பதே திருச் சபையின் தலைவர் தமது சீடர்களுக்குக் கொடுத்த வரைபடத் திட்ட மாகும் (அப் 1:8). அவர்களோ தினசரிக் கூடுகை, தினசரித் திரு விருந்து போன்ற ஆன்மீக ஆசீர்வாதங்களில் திளைத்து எருசலேமி லேயே தங்கிவிட்டனர் (அப் 2:46.47). கொடுமையான துன்புறுத்து தலைக் கடவுள் அவர்கள் மீது அனுமதித்தார்; ஏனெனில் அங்கிருந்து அவர்களை எங்கும் செல்ல வைக்க அது ஒன்றுதான் வழியாயிருந் தது! (அப் 8:1).

ஏற்கனவே நமது ஐக்கியங்கள் பலவற்றில் ஐக்கியம் இல்லை. சபையாரின் எண்ணிக்கை பெருவாரியாகும்போது ஒருவரோடொ ருவர் ஐக்கியப்பட்டு ஒருவருக்கொருவர் ஊழியம் செய்வது சாத்திய மற்றதாகவே போய்விடுகிறது. கடவுளை ஆராதித்துப் பக்திப்பரவச மடைவது இருக்கிறது; ஆனால் ஒருவரோடொருவர் அன்னியோன்னி யப்பட்டு ஒருவரையொருவர் பக்திவிருத்தியடையச் செய்வது இல் லையே (எபே 5:18-20). கூடி வருதலின் சமதளப் பரிமாணத்தைத் தியாகம் செய்துவிட்டு மேல் நோக்கியதில் திருப்தியடைந்துவிடு கிறோம். உறுப்பினர்கள் உற்சாகமாயிருப்பார்கள்; ஆனால் வளரமாட் டார்கள் (எபே 4:16). ஒருவருக்கொருவர் இருக்கவேண்டிய தொடர் புகள் ஈரமில்லாது போகின்றன.

ஊழியமானது தங்கள் திறனுக்கு மிஞ்சி வளர்ந்து விடுவதால் மேய்ப்பர் பலர் எரிந்து கரைந்துவிடுகின்றனர். கடவுள் தங்களுக்குத் தந்துள்ள ''விசுவாச அளவை'' அவர்கள் மிஞ்சி அவர் நியமித்துள்ள ''வரம்பை'' தங்களுக்கே தெரியாது கடந்துவிடுகின்றனர் (ரோ 12:3; 2 கொரி 10:13). திரள்கூட்ட சபையினரை மேய்க்க ஒரு சில மேய்ப்பர் களுக்கு அசாதாரண கிருபாவரமுண்டென்பது உண்மைதான்; ஆனால் அவர்களது காலத்தை அடுத்து சபையைப் பொறுப்பேற்பவர்களுக்குப் பொதுவாக அந்த அளவு அபிஷேகம் இருப்பதில்லை; இருக்கிறபடி காரியங்களைக் கவனித்துக்கொள்வதே அவர்களுக்குத் தர்மசங்கட மாகிவிடுகிறது. ஆடுகள் போஷாக்கு குறைவினால் வாடத் துவங்கு



கின்றன. மட்டுமல்ல, பெரிய சபைகளை நடத்தி அதில் இன்பங் கண்டவர்கள் தங்களது உடன் மூப்பர் சிலருக்கு அனுபவமும் வரமும் கூடுதலாயிருந்தாலும் சபைகளைத் தங்கள் மகன்கள் அல்லது மரு மகன்களிடமேயன்றி வேறு யாரிடமும் ஒப்படைக்கத் தயங்குகின் றனர். துக்ககரமான இப்போக்கு பெந்தெகொஸ்தே வட்டாரங்களில் சகஜம்.

சபையாரின் எண்ணிக்கை சில நூறுகளைத் தாண்டும்போது சபையை இரண்டு மூன்றாகப் பிரித்து பல்வேறு இடங்களில் நாட்டு வது நன்று. இப்படிச் செய்வது அடுத்த வரிசையினர் தலைமைத்து வத்தில் வளரவும் பல்வகையில் புதுப்பொலிவுடன் செயல்படவும் வழிவகுக்கும். ''மத்திய'' சபையின் எல்லா ஞாயிறு ஆராதனைகளி லும் ''பிரதம'' போதகர் பங்குபெற விரும்பக்கூடாது. மாறாக, கூடிய மட்டும் மக்களுக்கு முன்னறிவிப்பின்றி, அவர் ''கிளைச்'' சபைகளின் ஆராதனைகள் ஒவ்வொன்றிலும் பங்கு பெறவேண்டும்.

*The Cross and the Switchblade* என்ற பிரபல நூலின் ஆசிரிய ராகிய டேவிட் வில்கர்சன் அவர்கள் அமெரிக்காவில் நியூயார்க் நகரில் நிறுவியுள்ள Times Square Church எனும் பன்னாட்டுச் சபையின் தலைமை மேய்ப்பராயிருந்தார். அடுத்த ஞாயிறு ஆராத னையில் யார் பிரசங்கிப்பதென்பதைத் தனது உடன் மேய்ப்பரோடு முன்னதாகவே கலந்தாலோசித்துத் தீர்மானித்துவிடுவார். ஆனால் பிரசங்கத்திற்கு முந்திய கடைசிப் பாடல் பாடப்படும்வரை இது ஓர் இரகசியமாகவே அவர்களால் வைக்கப்பட்டது! தனது பிரசங்கத்திற் காக மட்டும் மக்கள் அச்சபைக்கு வரக்கூடாது என்பது மேய்ப்பர் வில்கர்சனின் தாற்பரியம்.

ஆங்காங்கே இவ்விதம் சபைகள் நாட்டப்படும்போது சுற்றுப்புற சுவிசேஷப்பணி கூடுதல் கனி நிறைந்ததாயிருக்கும். பாட்டிலிலிருந்து தூவப்படும்வரை உப்பினால் பயனென்ன? நமது கூடுகைகள் இவ் விதம் பிரிக்கப்படாவிடில் பல மக்களினத்தவரிடையே ஊடுருவல் சாத்தியமன்று. வீடுகளிலெல்லாம் சபை கூடிவந்ததே ஆதிச்சபை யின் அமோக வளர்ச்சிக்கு ஓர் இரகசியமாகும் (அப் 2:46,47).

சபையினரைச் சிறுசிறு கூட்டங்களாகப் பிரித்துச் செயல்படச் செய்யாவிட்டால் நேரமும் பலமும் பணமும் பெரிய பெரிய கட்டிடங்

களைக் கட்டுவதிலும் கண்காணிப்பதிலுமே செலவழிக்கப்பட வேண்டியதிருக்கும். யுகத்தின் இறுதிக்குள் வந்துள்ள நாம் சொத்துக்கள் மீதல்ல, மக்கள் மீதே பணத்தை அதிகமதிகமாய்ச் செலவழிக்கவேண்டும். எளிய கட்டிடங்களில் திருப்தியடையவேண்டும். துன்புறுத்துதல் இந்தியாவெங்கும் பெருகி வருகிறது. பத்து சிறிய ஆலயங்களைத் தாக்குவதைவிட ஒரு பிரமாண்டமான கட்டிடத்தைத் தகர்த்துவிடுவது சுலபம். ஆண்டவரது கரம் கூட இருந்ததோடு ஆங்காங்கேயுள்ள ''மக்களது தயவும்'' பெற்றிருந்தது ஆதிச்சபையினருக்குக் கூடுதல் பலமாகும் (அப் 2:46). இராணுவத்தில் உயர் அதிகாரிகளெல்லாரும் ஒரே வாகனத்தில் பயணம் செய்யமாட்டார்கள் தெரியுமா?

அகிலவுலக நற்செய்திமயமே கடவுளின் இறுதிக் கால நிகழ்ச்சி நிரலில் முதலும் பிரதானமானதுமாகும் (மத் 24:14; அப் 1:7,8; 2 பேது 3:9). நமது சபைச் செலவினங்களிலும் இதுவே முதலிடத்தைப் பெறுமானால் நாம் தென்னிந்திய நகர்களிலும் பட்டணங்களிலும் ஆலயக் கட்டிடங்களுக்காய் லட்ச லட்சமாய், கோடிக் கோடியாய்ப் பணத்தை முடக்குவதைவிட நாட்டில் கிறிஸ்தவர்களின் சராசரி சத வீதத்திற்கும் மிகக் குறைவாயுள்ள இராஜஸ்தான் மற்றும் பீஹார் போன்ற மாநிலங்களில் அதைச் செலவிடுவோம் (ரோ 15:20-22). இது சபை மேய்ப்பருக்கிடையேயுள்ள இரகசியப் போட்டிகளையும் நிறுத்தும்.

உலகின் மிகப்பெரிய சபையின் மேய்ப்பரென்று பால் யாங்கி சோ அழைக்கப்படுகிறார். ஊழியர்களுக்கு அவர் ஊக்கந்தருபவர் என்பது உண்மைதான்; ஆனால் உலகிலேயே அவர்தான் பின்பற்றப் படவேண்டிய மாதிரி என்றெண்ணிவிடக்கூடாது. சபைச் சரித்திரம் வேறுவித மாதிரிகளையும் நமக்குமுன் வைக்கிறது. இப்படிச் சொல்வதால் திரள் கூட்ட சபைகளைப் பழிக்கிறோமென்று பொருளல்ல; ஆனால் சபை வளர்ச்சிக்கு வேதாகமத் தத்துவங்களை எடுத்துச் சொல்லுகிறோம்.

சபைகள் மட்டுமல்ல, மிஷனரிச் சங்கங்களும் அளவில் பெரிதாகிக்கொண்டேபோகக்கூடாது. ஆயிரம் மிஷனரிகளைக் கொண்டு ஒரே இயக்கமாய் இயங்குவதைவிட தலா இருநூறு ஊழியரைக்



கொண்டு ஐந்து சங்கங்கள் செயல்படுவது மேல். எந்த அளவிற்கு ''உறுதிப்படுத்த'' முடிகிறதோ அந்த அளவிற்குத்தான் ''நீளப்படுத்த'' வேண்டும் (ஏசா 54:2). இல்லையேல் அது விசுவாசமோ தரிசனமோ அல்ல, துணிகரம்!

பகுதி ஐந்து

# கிறிஸ்தவ ஊழியம்



## 67. முழுநேரக் கிறிஸ்தவப் பணிக்கு ''அழைப்பு'' கட்டாயம் தேவையா?

திட்டவட்டமாய் ''அழைக்கப்பட்டாலொழிய'' ஒருவரும் முழு நேரக் கிறிஸ்தவப் பணிக்குள் நுழையக்கூடாதென்பது பெருவாரி யான கிறிஸ்தவர்களின் கருத்து. மற்றவர்களோ அது ஒவ்வொரு வருடைய ''தெரிந்தெடுப்பைப்'' பொறுத்தது எனக் கருதுகின்றனர். இதைக் குறித்த குழப்பமே அறுவடைப்பணியில் போதுமான ஊழியர் இறங்காததற்கு அடிப்படைக் காரணங்களில் ஒன்றாகும். இதைக் குறித்துத் திருமறை கூறுவதென்ன?

தெளிவான அழைப்பை வலியுறுத்த அடிக்கடி பயன்படுத்தப்படும் திருவசனம் எபிரெயர் 5:4, ''ஆரோனைப்போல தேவனால் அழைக்கப் பட்டாலொழிய ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்திற்குத் தானாய் ஏற்படுகிறதில்லை.'' இங்கு இரு முக்கிய காரியங்களை நாம் கவனிக் கத் தவறக்கூடாது. முதலாவது, இங்கு சொல்லப்படுவது பொதுவான ஆசாரியத்துவப் பணியைப் பற்றியல்ல, ''பிரதான ஆசாரியனாய்'' சிறப்பான பொறுப்பிற்கு நியமிக்கப்படுவதைக் குறிக்கிறது (வச 1). இரண்டாவது, புதிய உடன்படிக்கையில் ஆசாரியத்துவம் மாற்றப் பட்டுவிட்டது. நமது அண்ணன் இயேசு ஆரோனின் வரிசையிலல்ல, மெல்கிசெதேக்கின் வரிசையில் வந்துள்ளார் (எபி 7:11-13). அவர் யூதா கோத்திரத்தில் தோன்றினார். அந்தக் கோத்திரத்தாரைக் குறித்து மோசே ஆசாரியத்துவத்தைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை (வச 14)! எனவே நமது கேள்விக்குப் பதிலளிக்க எபிரெயர் 5:4ஐ மேற் கோள்காட்டுவது பொருத்தமல்ல.

மோசே அல்லது பவுலைப் போல விவரிக்கக்கூடிய வகையில் அழைக்கப்படவேண்டுமென்று நீங்கள் காத்திருந்தால் ஏமாந்து போவீர்கள். இவர்களைப் போன்றோர் யூதச் சமுதாயத்திற்கும் கிறிஸ் தவச் சபைக்கும் அடித்தளமிடும் காலங்களில் முக்கிய பங்கு வகிக்க அழைக்கப்பட்டவர்கள். சபைச் சரித்திரத்தில் இன்றைய நாள் ''பதி னோராம் மணி'' வேளையாகும். ''ஒருவரும் எங்களுக்கு வேலையிட வில்லை'' என்று சாக்குச்சொல்லி நிற்போரை ''நீங்கள் பகல் முழுவ

தும் இங்கே சும்மா நிற்கிறதென்ன?'' என அறுப்பின் ஆண்டவர் கடிந்துகொள்வார் (மத் 20:1-7). அழைப்பு வருமென்று காத்துக் கொண்டு அவர்கள் ''கடைத்தெருவில்'' நின்றுகொண்டிருந்திருக்கக் கூடாது. மாறாக, அவர்கள் திராட்சத் தோட்டத்திற்குச் சென்று வேலைக்குத் தாங்கள் தேவைப்படுகிறார்களாவெனக் கேட்டிருக்க வேண்டும். உலக வேலைகளைத் தேடும்போது ஒரு படி தவறாது ஏறியிறங்கி எந்த வாசல் திறக்கிறதோ அதைக் கர்த்தரின் சித்தமென எடுத்துக்கொள்ளுகிறோமல்லவா? அதே தத்துவத்தைக் கர்த்தரின் பணியில் இறங்கவும் பயன்படுத்தக்கூடாதோ? கிறிஸ்தவர்களில் பலர் வேலையில்லாமல் அல்லது தங்கள் படிப்பிற்கும் பயிற்சிக்கும் குறைந்த வேலையில் இருக்கிறார்கள்; ஆனாலும் போதுமான வேலை யாட்களில்லாத இறையரசுப் பணியைக் குறித்து அவர்கள் கவலைப் படுவதில்லை (மத் 9:37).

''ஆண்டவரே, என்னை அழையும்'' என்று ஜெபிக்காதீர்கள்; ''என்னை அனுப்பும்'' என்று ஜெபியுங்கள் (மத் 9:38). ஏசாயாவைப் பார்த்து ஆண்டவர், ''***உன்னை*** நான் அனுப்பட்டுமா? ***நீ*** நமது காரியமாய்ப் போவாயா?'' என்று கேட்கவில்லை. மாறாக, அவர், ''***யாரை*** நான் அனுப்புவேன்? ***யார்*** நமது காரியமாய்ப் போவான்?'' என்றார் (ஏசா 6:8). ''பொதுவான'' அழைப்பிற்கு ஏசாயா ''தனிப் பட்ட'' பதில் கொடுத்து முன்வந்தான்: ''இதோ, அடியேன் இருக் கிறேன்; என்னை அனுப்பும்!'' அதற்குப் பின்னர்தான் ஆண்டவர் அவனைப் பார்த்து, ''நீ போ'' என்றார் (வச 9). நாம் ''போக'' தன்னார் வமாய் முன்வரும்போதுதான் ஆண்டவர் நம்மை ''அனுப்புவார்.''

''அழைக்கப்பட்டோர் அநேகர்; தெரிந்துகொள்ளப்பட்டோரோ சிலர்.'' சுவிசேஷத்தில் இருமுறை இவ்வாசகத்தை இயேசு மொழிந் தார். ஒன்று திராட்சத்தோட்ட உவமையில்; அடுத்தது கலியாண விருந்து உவமையில் (மத் 20:16; 22:14). இவ்விரு உவமைகளும் தேவ அழைப்பிற்குச் சரியாய்ப் பதில்கொடுக்கவேண்டிய மனிதனின் பொறுப்பை வலியுறுத்துகின்றன. வேறு வார்த்தைகளில் சொன்னால், அழைப்பிற்குக் கீழ்ப்படிவோரே ''தெரிந்துகொள்ளப்பட்டவர்களாம்!''

தங்கள் பிள்ளைகளை ஆண்டவரின் திருப்பணிக்கு அர்ப்பணிக்கும் பெற்றோரின் விருப்பங்களையும் அவர் கனம்பண்ணுகிறார். தனக்



கொரு மகனைக் கர்த்தர் கொடுப்பாரானால் அவனை அவரது பணிக்கே கொடுத்துவிடுவதாக அன்னாள் தானாகவே வாக்கு கொடுத்தாள். அவளது இதய வாஞ்சையைக் கர்த்தர் அருளிச்செய்தார்; அவள் தனது வாக்கைக் காப்பாற்றினாள். அதற்குப் பல ஆண்டுகள் கழித்துதான் கர்த்தர் நேரடியாய்ச் சாமுவேலை அழைத்தார் (1 சாமு 1:11,27,28; 3:8,9). மிகச் சிறிய வயதிலிருந்தே இந்நாட்களில் பெற்றோர் தங்கள் பிள்ளைகளை டாக்டராக அல்லது எஞ்சினியராகவேண்டுமென்று ஊக்குவித்து அப்படியே ஆக்கிவிட அத்தனையையும் செய்யும்போது, அதே விதமாய்க் கர்த்தரின் பணிக்கும் பிள்ளைகளை ஆயத்தப்படுத் தாதது ஏனோ?

நான் முழுநேரப் பணிக்குள் இறங்குவதற்குப் பல ஆண்டுகட்கு முன்னரே தனது முதற்பேறான என்னை எனது அம்மா ஆண்டவரின் பணிக்கு ஒப்புக்கொடுத்துவிட்டார்கள். நான் பொறியியல் துறையில் சிறந்து விளங்கிக்கொண்டிருந்தாலும் எனது தருணம், தாலந்து, தனம் அத்தனையையும் மிஷனரிப்பணியில் வார்த்துவிடவேண்டுமென்ற வாஞ்சை எனக்குள் வளர்ந்துகொண்டேயிருந்தது. இவ்வித ''விருப் பத்தை'' எனக்குள் உண்டாக்கியவர் தேவனே என நான் புரிந்து கொண்டேன் (பிலி 2:13). நான் சத்தம் ஒன்றும் கேட்கவில்லை; தரிசனம் ஒன்றும் காணவில்லை. எனக்குக் கிடைத்தது எளிமையான வழிநடத்துதல் மட்டுமே. எனது தீர்மானத்தை என் மனைவியோடு பகிர்ந்துகொண்டபோது அவள் மனமகிழ்ந்தாள். என் அம்மா கண்ணீ ரோடு என்னை அணைத்துக்கொண்டார்கள். ''கர்த்தர் சித்தம் ஆகட் டும்'' என்றனர் எனது மாமனார் மாமியார். கணவன் முழுநேரப் பணிக் குள் காலெடுத்து வைக்கையில் மனைவியும் அவனோடு செல்வதே பொதுவான சூழலில் விரும்பத்தக்கது. ஆபிரகாமின் அழைப்பே சாராளுக்கும் போதும் (ஆதி 12:5).

''நான் அழைக்காதிருக்க நீ ஏன் வந்தாய்?'' என்று கடவுள் யாரை யும் கேட்டதாய் நான் இதுவரை கேள்விப்பட்டதில்லை. மாறாக, ''நான் அழைத்தபோது நீ ஏன் வரவில்லை?'' என்று ஆண்டவர் வினவக்கூடிய கிறிஸ்தவர்கள்தான் ஏராளம், ஏராளம். கீழ்ப்படியா தவரே கீழ்ப்படிகிறவர்களைவிட அதிகம்!

எல்லாரிடமும் ஆலோசனை கேட்டுக்கொண்டிருப்பதும் நன் றன்று. சில வேளைகளில் மூத்தவர்களும் தீர்க்கதரிசிகளுங்கூட உங்

களை வழிபிசகச் செய்ய முடியும் (1 இரா 13; கலா 1:16; அப் 21: 8-14). *''தீர்மானங்கள் எடுப்பது எப்படி?''* (அத்தியாயம் 9, *கண் திறக்கும் கட்டுரைகள்*) மற்றும் *''திருச்சித்தம் செய்யத் தவறுவ தேன்?''* (அத்தியாயம் 5, *நெஞ்சில் நெருப்பு)* என்ற எனது கட்டுரை களை வாசிப்பது உங்களுக்குப் பயனளிக்கும்.

என்னைத் தவறாய்ப் புரிந்துகொள்ளவேண்டாம். தமது பிள்ளைகள் யாவரும் தங்கள் வேலைகளை விட்டுவிட்டு முழுநேர ஊழியத் திற்கு வந்துவிட தேவன் எதிர்பார்க்கிறாரென்று நான் சொல்லவில்லை. நான் சொல்வது என்னவென்றால்: தேவை மிகுதி, காலம் கொஞ்சம். தெரிந்தெடுப்பு உங்களுடையது. முதல் அடி எடுத்து வையுங்கள். புறப்படுங்கள். நீங்கள் இடதுபுறம் அல்லது வலதுபுறம் சாய்ந்தால், கடவுள் பின்னிருந்து சத்தம் கொடுத்து உங்களை நேர்வழியில் நடத்துவார் (ஏசா 30:21).

## 68. இறையியல் கல்லூரிப் படிப்பு கட்டாயமா?

இளைஞன் இயேசு போதகர்களிடம் கேட்டறிந்து கற்றுக்கொண் டார் (லூக் 2:46). வாலிபன் சவுல் அந்நாட்களில் பெயர்பெற்ற போதக னாகிய கமாலியேலின் பாதத்தில் உட்கார்ந்து பழைய ஏற்பாட்டைக் கற்றுக்கொண்டான் (அப் 22:3; 5:34). பரிசுத்தவான்களுக்குப் பக்தி விருத்தியளித்து, அவர்களை ஊழியத்திற்காய்ப் பயிற்றுவித்துப் பக்கு வப்படுத்தும்படி தேவன் சபையில் ''போதகர்களை'' ஏற்படுத்தியுள் ளார் (எபே 4:11-13). எனவே போதித்தல் என்பது தேவனால் நியமிக் கப்பட்டதாகும். கிரமமாக வேதத்தைக் கற்பது அனைத்து விசுவாசி களுக்கும், குறிப்பாக முழுநேரப் பணியை மேற்கொள்ளுவோருக்கும், இன்றியமையாததாகும். ''வசனத்சை சரியாய்ப் பகுத்துப் போதிக்க'' பயிற்சி பெறாத பிரசங்கிமாரால் பிரசங்க பீடங்கள் பாழாக்கப்பட்டுள் ளன (2 தீமோ 2:15). வேதத்தை எதிர்ப்போரல்ல, அதை எடுத்துரைப் போர் கரங்களிலேயே அது கடும்பாடு படுகிறது என்றார் ஒருவர்!

நாணயத்தின் மறுபக்கமும் கவலைக்குரியதுதான். இதவாதிகளும் நவீனவாதிகளும் எப்படியோ பெரும்பாலான நமது இறையியல் கல்



லூரிகளில் ஆசிரியராகப் புகுந்துவிட்டனர். மறுபிறப்பின் அனுபவம் கூட இல்லாத பேராசிரியர்களிருக்கிறார்களென்பதைக் கற்பனை செய்தும் பார்க்க முடிகிறதா? அனுபவமில்லாத அறிவு! வேதாகமக் காலங்களிலுள்ள போதகர்களோ அப்படியல்ல. போதகனாகிய சாமு வேல் ஜெப ஆவியில் திளைத்திருந்தவன் (1 சாமு 12:23). மக்க ளுக்குப் போதிப்பதற்காக எஸ்றா தன் இருதயத்தைப் பக்குவப்படுத்தி யிருந்தான் (எஸ்றா 7:10). அந்தியோகியாவில் போதகராயிருந்த பவுல், பர்னபா, மற்றும் மூவரும் உபவாச ஜெபத்தில் ஊறியிருந்தனர் (அப் 13:1,2). மனித அறிவினாலல்ல, ஆவியானவரின் அருளாலேயே அப்போஸ்தலர் போதித்தனர் (1 கொரி 2:13). போதிக்கிறவர்கள் முத லாவது அதின்படி செய்கிறவர்களாயிருக்கவேண்டுமென்று இயேசு வலியுறுத்தினார் (மத் 5:19). ஊருக்கு மட்டும் உபதேசம்பண்ணு வோரைப் பவுல் கண்டித்தான் (ரோ 2:21).

இறையியல் கல்லூரியில் நுழைந்தபின் வாலிபர் பலர் ஆதி தரி சனம், விசுவாசம், வேகம், பக்திவைராக்கியம் ஆகியவற்றை இழந்து தரித்திரராகின்றனர். அவர்களில் சிலரை நானறிவேன். இந்தியாவில் எழுப்புதலிலும் நற்செய்திப்பணியிலும் தேவனால் வல்லமையாய்ப் பயன்படுத்தப்படுவோரில் வெகு சிலரே இறையியல் வல்லுநர்கள். உலக அளவிலும் அப்படித்தான். பில்லி கிரஹாம் இறையியல் பட்டம் படித்தவரல்ல, தெரியுமா?

இறையியல் ஆசிரியர் பலர் அறிவாளிகள், ஆனால் அனுபவசாலி களல்ல. தேவசத்தம் கேட்டல், உபவாசித்து ஜெபித்தல், வரங்களை அப்பியாசித்தல், பிசாசுகளைத் துரத்துதல், இவையெல்லாம் எப்படி யெனத் தங்கள் மாணவருக்கு அவர்களால் கற்றுக்கொடுக்க முடி யாது. ''எங்கள் கல்லூரியில் இப்பொழுது மிஷனரிப்பணி எனும் பாடத்தில் டாக்டர் பட்டம் பெற்ற இரு ஆசிரியருண்டு. இருவருக்கும் மிஷனரிப் பணியில் நேரடி அனுபவம் கிடையாது.'' இப்படி நம் நாட்டில் பெயர்பெற்ற இறையியல் கல்லூரி ஒன்றின் கல்வி விபர அறிக்கையில் வாசித்தேன். பயமாயிருக்கிறது!

இவைகளையெல்லாம் நோக்குங்கால், ஒவ்வொருவரும் தங்கள் அழைப்புக்கேற்ற பயிற்சியை தாங்களாகவே ஜெபத்துடன் தெரிந்து கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாக, மிஷனரிப் பணிக்குக் குறுகிய

காலப் பயிற்சியொன்றில் புதிய களங்களில் சபை நிறுவுவதற்கான ஆலோசனைகளைப் பெற்றுக்கொள்ளுதல் பொருத்தமாயிருக்கும். சில கல்லூரிகள், இறையியல் மட்டுமல்ல, கிறிஸ்தவக் கலைத் தொடர்பு, இசை, ஆலோசகப்பணி, நிர்வாகம், வாலிபர் ஊழியம், இன்னும் இதுபோன்றவற்றிற்கான பயிற்சிகளும் அளிக்கின்றன. இவை யெல்லாம் பயனுள்ளவை. கிரமமான பயிற்சியானது சரியாய்ச் சிந்திக்க வழிவகுக்கும். அருமையான பிரசங்கிகள், போதகர், மேய்ப்பரை உருவாக்கியுள்ள கல்லூரிகளுக்காகத் தேவனைத் துதிப்போம்.

ஒழுங்கும், தானாகப் படித்துக்கொள்ளும் திறனும் ஒருவருக்கிருந்தால் கடலளவு உதவி நூல்கள் இன்றுண்டு. ஊழியத்தில் நுழைந்த பின்னரும் வாழ்நாள் முழுவதும் கிரமமாய்ப் படித்துக்கொண்டேயிருக்க வேண்டும்.

## 69. பிறரது பிரசங்கங்களைப் பிரசங்கிக்கலாமா?

நம்மிடமுள்ளது எதுவும் நம்முடையதல்ல. யாவுமே தேவனிடமிருந்து பெற்றவைதான் (1 கொரி 4:7). நாம் யாருமே ''ஒரிஜினல்'' கிடையாது. தேவன்தான் ''ஒரிஜினல்;'' நாமெல்லாரும் அவரது ''சாயல்!''

பவுலுக்கு வெளிப்பாடுகள் பெரும்பாலும் நேரடியாகத் தேவனிடமிருந்து வந்தன. ஆனால் அவன் கற்றுக்கொடுத்ததையே பிறருக்குக் கற்றுக்கொடுக்கும்படி அவன் தீமோத்தேயுவுக்கு எழுதினான். இவ்விதமாய் சத்தியம் கடந்துகொண்டிருக்கட்டும் என்றான் (2 தீமோ 2:2). தேவனது பொதுவான முறை இதுதான்.

எனவே, சொல்லப்போனால், பிறரது பிரசங்கக் குறிப்புகளைப் பயன்படுத்துவதில் தவறேதுமில்லை. ஆனால் நாமாகக் குறிப்பு தயாரித்தால் கூடுதல் அதிகாரத்தோடும் உறுதியோடும் பிரசங்கிக்கலாம். நாம் ஓர் ஒலியாக இருக்கவேண்டுமே ஒழிய வெறும் எதிரொலி ஆகிவிடக்கூடாது!



பிறரது பிரசங்கங்களைப் பிரசங்கிப்பதில் சில ஆபத்துகள் உண்டு. நாமாகவே குறிப்பு தயாரிப்பதில் உள்ள கடின உழைப்பும் ஒழுங்கும் விருத்தியடையாமல் சோம்பலுக்கு அடிமையாக வழியுண்டாகும். பிரசங்க பீடத்தில் ஆவியின் நடத்துதலுக்கேற்ப இசைந்து பேசுவது முக்கியம்; ஆனால் பிறரது குறிப்புகளையே பயன்படுத்தும்போது அது கடினமாகிறது. மட்டுமல்ல, இக்குறிப்புகள் யாருடையவை என நாம் சொல்லத் தவறும்போதும் இன்னொருவருக்குச் சேரவேண்டிய மதிப்பைத் திருடுகிறோம் என்றுதானே பொருள்?

பிரசங்க வேந்தன் சார்லஸ் ஸ்பர்ஜன் போன்றோரின் பிரசங்கக் குறிப்புகளடங்கிய புத்தகங்கள் ஏராளமுண்டு. பொதுப் பிரசங்க ஊழியத்தைத் துவங்கும் எவரும் இக்குறிப்புகளையெல்லாம் படித்துப் பார்ப்பது பிரசங்கம் ஆயத்தம் செய்யவேண்டிய முறையைப் புரிந்துகொள்ள ஏதுவாயிருக்கும். துவக்கத்தில் இந்தக் குறிப்புகளையே சற்று மாற்றம் செய்துகொண்டு பிரசங்கிக்கலாம். ஆனால் எவ்வளவு சீக்கிரம் உதவியில்லாமல் நடக்கப் பழகுகிறோமோ அவ்வளவு நல்லது.

பிறரது உயரிய கருத்துக்களையும் கூற்றுகளையும் பிரசங்கத்தில் சேர்த்தால் ருசியாயிருக்கும். ஒருவரையும் மேற்கோள் காட்டாதவனை யாரும் மேற்கோள் காட்டமாட்டார் என்றார் ஒருவர். தேவன் ஒருவனைப் பிரசங்கிக்க அழைக்கையில் போதுமான கிருபையைத் தருவார். அவன் பிரசங்கம் தயாரிக்கையில் பிறரது குறிப்புகளைச் சேர்த்துக்கொள்ளலாம்; ஆனால் அவனுக்கே உரியதாக தேவன் வனைந்திருப்பதை அவன் இழந்துவிடக்கூடாது.

நான் பொதுவாக மூன்று படிகள் வழியாய்க் கடந்து செல்கிறேன். முதலாவது, எதைப் பேசவேண்டுமென்று தேவனிடமிருந்து வரும் தூண்டுதல் (லூக் 3:2). அடுத்து, வேதத்தையும் ஆராய்ச்சி நூல்களையும் பயன்படுத்தி அக்குறிப்பை நன்கு படிக்கிறேன் (யோ 5:39). இதை விரிவாக்குதல் எனலாம். முடிவாக, அறிவித்தல். இதை ஆவியின் நிறைவோடு நிறைவேற்றுகிறேன் (அப் 4:31). துவக்கமுதல் முடிவுவரை அனைத்தையும் ஜெபத்தில் நனைக்கிறேன்.

(*இன்னும் நேர்த்தியாய்ப் பிரசங்கிப்பது எப்படி?* என்ற எனது 200 பக்க நூலை வாங்கி வாசியுங்கள்.)

# 70. இன்றும் அப்போஸ்தலர் இருக்கிறார்களா?

இக்கேள்விக்கு ''ஆம்'' என்றும் அதே வேளையில் ''இல்லை'' என்றும் பதில் சொல்லவேண்டும்.

வேதத்தில் இருவகை அப்போஸ்தலரைக் குறித்து வாசிக்கிறோம். தமது பூவுலக ஊழியத்தின்போது இயேசு நேரடியாகத் தெரிந்தெடுத்து அப்போஸ்தலர் எனப் பெயரிட்ட பன்னிரண்டு சீடர் முதல் வகையினர் (லூக் 6:13). இக்குழுவினர் பொதுவாக ''பன்னிருவர்'' என்றழைக்கப் பட்டனர் (மத் 26:20; யோ 20:24; 1 கொரி 15:5). இவர்கள் இயே சுவை நெருக்கமாய் அறிந்திருந்தனர். மூன்றாண்டு காலத்தில் நடந்த முக்கிய சம்பவங்களை நேரடியாகக் கண்டிருந்தனர். உயிர்த்தெழுந்த பின்னரும் கர்த்தர் இவர்களுக்குப் பிரத்யேகமாய்த் தரிசனமானார். அப்போஸ்தலரான கிறிஸ்துவிடமிருந்து (எபி 3:1) நிகரற்ற சிலாக் கியம் பெற்ற இக்குழு சிறப்பான அதிகாரம் பெற்றது. ''இஸ்ரவேலின் பன்னிரு கோத்திரங்களை நியாயந்தீர்க்கிறவர்களாகப் பன்னிரு சிங் காசனங்களின்மேல் வீற்றிருப்பீர்கள்'' என இயேசு இந்தப் பன்னிரு வருக்கு வாக்களித்தார் ( மத் 19:28). புதிய ஏற்பாட்டுச் சபையின் அடித்தள ஊழியர் என்ற வகையில் இப்பன்னிரு அப்போஸ்தலரின் பெயர்கள் புதிய எருசலேமின் பன்னிரு அடித்தளக் கற்கள் மீது எழுதப் பட்டிருக்கும் (எபே 2:20; வெளி 21:14). யூதாஸ் தற்கொலை செய்து கொண்டபோது, துவக்க முதல் இயேசுவின் ஊழியத்தை நேரடியாகக் கண்டிருந்த மத்தியாஸ் என்பவனுக்கு அந்த அப்போஸ்தலப் பட்டம் கிடைத்தது (அப் 1:16-26). இவ்விதம் இப்பன்னிருவருக்குப் பிரத் யேகமான ஒரு நிலை கொடுக்கப்பட்டது. இவர்களுக்கு ஊழிய வாரிசு கிடையாது. இவ்வகை அப்போஸ்தலரோடு வேறு எவரையும் திரு மறை சேர்த்துக் கூறுவதாகத் தெரியவில்லை.

ஆனாலும் தேவன் பவுலைச் சிறப்பாகப் புறவினத்தாருக்கு ஓர் அப்போஸ்தலனாகத் தெரிந்துகொண்டு முழு அப்போஸ்தல அதி காரத்தையும் கொடுத்தார். அவனுக்குத் திருச்சபையைக் குறித்த வெளிப்பாடுகள் வேறெவருக்கும் இல்லாத வகையில் கிடைத்தன. தனது அழைப்பைக் குறித்துப் பெருமிதங்கொள்ள அல்லாது, தனது



ஊழியத்தை நிலைநிறுத்துவதற்காக அடிக்கடி தன்னை இயேசுவின் அழைப்பினால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலன் என்று கூறிக் கொண்டான் (கலா 1:1; 1 கொரி 9:1; கலா 1:16).

பன்னிருவரில் ஒருவரல்லாத மற்ற அப்போஸ்தலரைக் குறித்தும் புதிய ஏற்பாடு கூறுகிறது. பர்னபா (அப் 14:14), யாக்கோபு (கலா 1:18,19; அப் 15), மற்றும் பெயர் சொல்லப்படாத பலர் (1 கொரி 15:7) இவ்வகையினர்.

பரமேறிய கிறிஸ்து சபைக்கருளிய ஐந்து வரங்களில் அப்போஸ்த லத்துவம் முதலாவதாகும். ''நாமனைவரும் கிறிஸ்துவின் நிறைவான வளர்ச்சி'' அடையும்வரை சபையில் அப்போஸ்தலரது ஊழியம் தேவை (எபே 4:10-13; 1 கொரி 12:28). இன்று அப்போஸ்தலர் கிடையாது என்று சொல்வோமானால், அதே பட்டியலிலுள்ள சுவிசேஷகர், மேய்ப் பர், போதகரெல்லாம் இன்றும் உண்டென்று சொல்ல நமக்கு இடமில் லையே! வேதத்தின் எப்பகுதியையும் பாரபட்சமாய் வியாக்கியா னிக்கக்கூடாது.

அப்போஸ்தலன் என்ற கிரேக்கச் சொல்லிற்கு ''அனுப்பப்பட்ட வன்'' என்பதே பொருள். புதிய ஏற்பாட்டுக் காலத்தில் அப்பதத்திற்கு சிறப்புத் தூதுவர் என்ற பொருளிருந்தது. அதே கிரேக்கச் சொல்லிற் கான லத்தீன் சொல்லில் இருந்தே ''மிஷனரி'' என்ற பதம் வருகிறது. இவ்விதம், அப்போஸ்தலர் என்பவர் கிறிஸ்துவின் நாமம் சொல்லப் பட்டிராத இடங்களில் சபைக்கு அடித்தளமிட முன்னோடித் தரிசனங் கொண்டு பலவிடங்களுக்குச் செல்லும் சலன ஊழியராவர் (ரோ 15:20,21; அப் 13:1-4). அப்போஸ்தல அழைப்புள்ளோரைப் பாடுபட வும் தியாகம் செய்யவும் அவர்களுக்கிருக்கும் ஆயத்தத்தினாலும் (1 கொரி 4:9-13; 2 கொரி 4:7-12; 6:3-10; 11:23-33; கலா 6:17); தலைமைத்துவம், பயிற்றுவித்தல், ஒழுங்கை நிலைநாட்டுதல் ஆகிய வற்றிற்கான ஆன்மீக அதிகாரத்தினாலும் (1 கொரி 4:21; 5:5; 2 கொரி 7:8,9; 2 தீமோ 2:1-3); அவர்கள் ஊழியங்களில் காணப்படும் அடையாளங்கள், அற்புதங்கள், பலத்த செயல்களினாலும் (2 கொரி 12:12) அடையாளங்கண்டு கொள்ளலாம். அதே வேளையில், எல்லா ரையும் பவுலின் தரத்தைக்கொண்டே நாம் அளந்துகொண்டிருந்தால், நம் நடுவிலிருந்தே உருவாகிக்கொண்டிருக்கும் பல அப்போஸ்த லரை ஏற்றுக்கொள்ளாது போக நேரிடும்.

பெயர் எழுதி ஒட்டுவதைவிட செயல்படுவதே முக்கியம். இன்றும் நமக்கு அப்போஸ்தலர் இருப்பதால் தேவனைத் துதிப்போம். திருச்சபையானது தனது அழைப்பை நிறைவேற்ற அதற்குத் திசை காட்டுவதும், தரிசனம் தருவதும் அப்போஸ்தலரே—முடிவு நாட்களில் இருக்கும் நமக்கு இவர்கள் இன்னும் ஏராளம் தேவை.

## 71. விடுதலை ஊழியத்தை நான் பெற்றுக்கொள்வது எப்படி?

நீங்கள் ஓர் ஆத்துமாதாயக் கிறிஸ்தவராயிருந்தால் ஏற்கனவே விடுதலை ஊழியத்தைத்தான் செய்துகொண்டிருக்கிறீர்கள். ஏனென்றால் பாவத்திலிருந்து இரட்சிப்படைவதே இயேசு மனுக்குலத்திற்குக் கொண்டுவந்த மிகப்பெரிய விடுதலையாகும் (மத் 1:21). நோயுற்றோருக்காய் ஜெபித்து பிசாசுகளைத் துரத்தும் ஊழியத்தைச் செய்வோர் மட்டுமே விடுதலை ஊழியத்தை நிறைவேற்றுகின்றனரென்பது தவறான கருத்து. வேதம் கூறும் முழுமையான விடுதலை ஊழியத்தில் இது ஒரு பகுதி மட்டுமே. வேதத்தின்படியான விடுதலை ஊழியத்தில் குறைந்தது ஏழு அம்சங்கள் உண்டு—

*1) நியாயப்பிரமாணத்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை*

கிறிஸ்து நம்மைப் பழைய ஏற்பாட்டுப் பிரமாணத்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்திருந்தாலும் எண்ணற்ற கிறிஸ்தவர் கிறிஸ்து இயேசுவிலுள்ள சுதந்தரத்தை அனுபவியாதே வாழ்கின்றனர் (ரோ 8:2,3; கலா 5:18). ''தொடாதே, ருசியாதே, தீண்டாதே'' எனும் பிரமாணக் கொள்கையின் நுகத்தடியாலே அழுந்திக்கொண்டிருக்கின்றனர் (கொலோ 2:20-22; கலா 5:1). நியாயப்பிரமாணத்திற்கும் கிருபைக்குமுள்ள வேறுபாட்டைப் புரியாதிருப்பதே இதற்குக் காரணம் (யோ 1:17). அவர்கள் ஒருபோதும் இரட்சிப்பின் மகிழ்ச்சியால் பொங்குவதில்லை. எப்பொழுதுமே சோர்பாகவும் மந்தமாகவும் இருப்பர். பவுலின் நிருபங்களாகிய ரோமர், கலாத்தியர், கொலோசெயர் ஆகியவற்றிற்கு நடைமுறையில் அவர்களுக்கு விளக்கம் கொடுப்பதொன்றே இந்நிலையிலிருந்து அவர்களை விடுவிக்க ஒரே வழி.



*2) பாவத்தின் வல்லமையிலிருந்து விடுதலை*

பாவத்தின் ''தண்டனையிலிருந்து'' விடுதலையென்பது மறுபிறப்படையும் அந்நொடியிலேயே முழுமையாய்க் கிடைப்பது; ஆனால் பாவத்தின் ''வல்லமையிலிருந்து'' விடுதலையென்பது ஒவ்வொரு நாளும் அப்பியாசித்து அனுபவிப்பதாகும். இதுதான் ஆவிக்குள்ளாக நடந்துகொண்டு ஊனியல்பின் செயல்களை மேற்கொள்வதெனச் சொல்லப்பட்டுள்ளது (கலா 5:16-25). ''நிலையின்படி'' நாம் ஏற்கெனவே கிறிஸ்துவுக்குள் பரிபூரணமுள்ளவர்களாயிருக்கிறோம் (கொலோ 2:10); ஆனால் ''நடையின்படியோ'' நாம் பூரணத்தை எட்ட வளருகிறோம் (கொலோ 1:28). நமது பாவ சுபாவம் இம்மண்ணுலக வாழ்வில் நம்மை விட்டு எடுத்துப்போடப்படுவதில்லை; ஆனால் நமக்குள் வாழும் கிறிஸ்துவின் மூலமாகவும் அவரது ஆவியானவரின் மூலமாகவும் அதின் வல்லமையிலிருந்து விடுவிக்கப்படலாம். விடுதலை தரும் இச்சத்தியத்தைப் புரிந்துகொள்ளும்வரை விசுவாசிகள் குற்றவுணர்வுடனும் ஆக்கினைச் சிந்தையுடனுமே பரிதாபமாய் வாழ்ந்துகொண்டிருப்பர் (ரோ 8:1,33,34).

*3) வியாதியின் சாபத்திலிருந்து விடுதலை*

எல்லா வியாதிகளும் தனி நபரது வாழ்க்கையிலுள்ள பாவத்தின் நேரடி விளைவுதான் என்று சொல்ல முடியாதெனினும் நமது ஆதிப்பெற்றோர் பாவம் செய்வதற்குமுன் வியாதியோ மரணமோ இருந்ததில்லை. நற்செய்தியைப் பிரசங்கிக்க இயேசு தமது சீடர்களை அனுப்பிய வேளைகளில் பிணியாளிகளைச் சுகமாக்கவும் அவர்களைப் பணித்தார் (மத் 10:7,8; லூக் 9:2). ''குணமாக்கும் வரங்கள்'' என்பது எல்லாருக்கும் கொடுக்கப்படாவிட்டாலும் எந்த விசுவாசியும் பிணியாளிகள்மீது கரம் வைத்து ''விசுவாசமுள்ள ஜெபத்தை'' ஏறெடுக்கலாம் (1 கொரி 12:30; மாற் 16:18; யாக் 5:15,16). கிறிஸ்துவின் மனவுருக்கச் சிந்தையுடன் செய்யப்படும் மருத்துவப்பணி எதுவும் அற்புத சுகத்திற்குக் குறைவானதல்ல. எப்படியாயினும் சுகமளிப்பவர் தேவனே.

*4) பிசாசின் கொடுமையிலிருந்து விடுதலை*

மெய்த்தேவனை அறியாதோரின் வாழ்க்கையில் பிசாசு புகுந்து விளையாடுகிறான். ''பிசாசின் செயல்களை அழிப்பதற்காகவே'' மனுமகன் இயேசு வந்தார் (1 யோ 3:8ஆ). பிசாசுகளைத் துரத்துவதில்

சிலர் தேவனால் மிகவும் சிறப்பாய்ப் பயன்படுத்தப்படுகின்றனர். ஆனால் சத்துருவின் ''வல்லமை'' மீது எல்லாக் கிறிஸ்தவ விசுவாசி களுக்கும் ''அதிகாரம்'' உண்டு (லூக் 10:19). கிறிஸ்துவின் எழுபது சீடர் சற்றும் எதிர்பாராததபோதும் பிசாசுகள் அவர்களுக்குக் கீழ்ப்படிந் தன (வச 17). நம்மிலிருக்கிறவர் உலகிலிருக்கிறவனிலும் பெரிய வராச்சுதே (1 யோ 4:4). ஆவியானவரால் நிறைந்திருந்து மக்களைப் பிசாசின் கொடும் பிடிப்புகளிலிருந்து விடுவியுங்கள் (அப் 10:38). முதிர்ச்சியடைந்த கிறிஸ்தவர்களிடமிருந்து பிசாசுகளைத் துரத்துவது எப்படி என்று கற்றுக்கொள்ளுங்கள். பிசாசுகளைத் துரத்தப் புறப் படுகையில் ஒரு குழுவாய்ச் செல்லுங்கள்.

*5) சமூகக் கட்டுகளிலிருந்து விடுதலை*

ஏழைகள், அனாதைகள் மற்றும் விதவைகளின் நியாயத்திற்காய்ப் போராடி கொடுமைப்படுத்துவோரிடமிருந்து அவர்களைத் தப்புவிக் கும்படி தேவ மக்களைப் பழங்காலத் தீர்க்கதரிசிகள் அறைகூவியழைத் தனர் (ஏசா 1:17; ஆமோ 5:15,24). ''நான் அநியாயக்காரருடைய கடைவாய்ப் பற்களை உடைத்து, அவர்கள் பறித்ததை அவர்கள் பற் களிலிருந்து பிடுங்கினேன்'' என்று யோபு சாட்சிபகர்ந்தான் (யோபு 29:17,12-16). ராஜாராம் மோகன்ராயுடன் சேர்ந்து மிஷனரி வில்லியம் கேரி ''உடன் கட்டையேறுதல்'' எனும் தீய பழக்கத்திற்கெதிராய்க் குரலெழுப்ப அரசு அதற்குத் தடைச்சட்டம் விதிக்கச் செய்தார். அப் படியே மிஷனரி ஏமி கார்மைக்கல் அம்மையார் கோயில்களில் சிறுமி களைப் பிடித்துவைப்பதற்கு எதிராய்ப் போராடினார். இவ்விதத் துணிச் சலான செயல்களுக்காகவே நாம் ''அபிஷேகம்'' பெற்றிருக்கிறோம் (ஏசா 61:1). மக்களது கண்கள் திறக்கப்பட்டு அவர்கள் மூட நம்பிக் கையின் பயங்களிலிருந்து விடுவிக்கப்பட உங்களாலான அத்தனை யையும் செய்யுங்கள் (ஏசா 42:6,7). சிறைக்கு உள்ளே அல்ல, வெளி யேதான் நிறைய, பெரிய குற்றவாளிகள் இருக்கின்றனர். அகப்பட் டவர்கள் உள்ளே; அகப்படாதவர்கள் வெளியே! சிறைவாசிகளுக்குப் பணியாற்றுவது கிறிஸ்துவின் சிந்தை (லூக் 4:18; எபி 13:3).

*6) கெட்ட பழக்கவழக்கங்களிலிருந்து விடுதலை*

திட்டமான மறுபிறப்பனுபவத்தை அடுத்தும் பலர் புகைத்தல், குடித்தல், போதை மருந்தெடுத்தல் போன்ற அடிமைப்படுத்தும் பழக்



கங்களிலிருந்து வெளிவர முடியாதிருக்கின்றனர். ''ஏன் என்று சொல்ல வேண்டாம்; எப்படி என்று காட்டுங்கள்'' என்பதே இம்மக்களின் கதறல். இவர்களுக்கு உதவவேண்டுமானால் உங்களுக்கு நிறைய பொறுமையும் கனிவிரக்கமும் தேவை. ஒருபோதும் அவர்களைக் குற்றஞ்சாட்டி ஏற்கெனவே நொந்துபோயிருக்கும் அவர்களைத் தாக்க வேண்டாம். வேதத் தியானம், வசன மனனம், ஆவியின் நிறைவு, விசுவாசிகளுடன் நெருங்கிய தொடர்பு, கனிவான மேய்ச்சல், நல்ல புத்தகங்கள் வாசிப்பு, வேலைகளில் விறுவிறுப்பு போன்றவையே அவர்கள் விடுதலைபெற்று வெளிவர ஏதுக்கள். எப்பொழுதுமே விடு தலையென்பது உடனடியாய்க் கிடைத்துவிடுவதல்ல. இவ்வித நபர் களுக்குதவ தங்களை அர்ப்பணித்துக்கொண்ட பொதுநல இயக்கங் களுக்குக் கைகொடுங்கள். இவ்விதப் பங்கேற்பு ஆவிக்குரியதல்ல என்று சொல்லமுடியாது.

*7) உபதேச வஞ்சகங்களிலிருந்து விடுதலை*

உபதேச வஞ்சகம் என்பது பயங்கரமான பிடிப்பாகும். ''பிசாசின் கண்ணியாகிய'' இதிலிருந்து ஒருவன் தப்பவேண்டுமானால் அவன் ''மயக்கம்'' தெளியவேண்டுமெனப் பவுல் கூறுகிறான் (2 தீமோ 2: 24-26). ''பிசாசின் உபதேசங்களைத்தான்'' அநேகப் பிரசங்கிமார் ''வஞ்சிக்கிற ஆவிகளின்'' அபிஷேகத்தோடு கொடுத்துக்கொண் டிருக்கிறார்களென்பது மக்கள் பலருக்குத் தெரிவதில்லை (1 தீமோ 4:1). லூசிபரின் இப்பிரதிநிதிகளை எதிர்த்து, மக்கள் ''அறிவில்லா மையால் சங்காரமாகாதபடி'' அவர்களை வஞ்சக வலைகளிலிருந்து விடுவிக்க தைரியமான வேத போதகர்கள் தேவை (ஓசி 4:6). இந் நாட்களில் பிரசங்கம் அதிகம், போதகம் குறைவு. பீடங்களிலிருந்து திரள்களுக்குப் போதிக்காவிட்டாலும், தனி நபர்களுக்கும் சிறு குழுக் களுக்கும் ஆரோக்கிய உபதேசங்களைப் பகிர்ந்துகொள்ள உங்களை அர்ப்பணியுங்கள். இன்றையச் சபைக்கு அத்தியாவசியமாய்த் தேவைப் படும் விடுதலை ஊழியம் இதுவே.

# 72. சுகமளிக்கும் கூட்டங்களைப்பற்றி...?

சென்றவிடமெல்லாம் இயேசு சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார்; நோயாளிகளைச் சுகமாக்கினார் (மத் 9:35). அவரது ஊழியத்தில் அற்புதங்கள் சாதாரணம். ''அவரது உபதேசத்தைக் கேட்கவும், தங்கள் வியாதிகளினின்று குணமாக்கப்படவுமே'' திரள்கள் அவரிடம் வந்தன (லூக் 6:17). அவரை மேசியாவென நிரூபித்த அடையாளங்கள் இவையே (மத் 11:2-5).

இயேசு பன்னிருவரை சுவிசேஷம் அறிவிக்கப் பணித்தபோது ''வியாதியுள்ளோரைக் குணமாக்குங்கள்'' என்று தெளிவாய்க் கட்டளையிட்டார் (மத் 10:7,8). மாபெரும் கட்டளையிலும் சுகமளிக்கும் ஊழியம் சேர்ந்துள்ளது (மாற் 16:15-18). ஆவியானவர் சபைக்களித்துள்ள ''குணமாக்கும் வரங்கள்'' இன்று கிறிஸ்துவின் குணமாக்கும் ஊழியத்தைத் தொடர்ந்து நிறைவேற்றவே.

ஆனால் இன்று சுகமளிக்கும் கூட்டங்களில் பொதுவாகக் காணப்படும் சில காரியங்கள் நல்ல கிறிஸ்தவர்களைக்கூட இவ்விதக் கூட்டங்களே வேண்டாம் என்று புறக்கணிக்கச் செய்கின்றன. இது சரியல்ல. துர்ப்பிரயோகத்திற்குப் பதில் பிரயோகிக்காமலே இருப்பதல்ல, சரியான பிரயோகமாகும்.

சுகமளிக்கும் ஊழியங்களில் கர்த்தரின் நாமத்திற்கு மகிமையைவிட அவதூற்றைக் கொண்டுவரும் சிலவற்றை இங்கு குறிப்படுகிறேன். கவனமெல்லாம் சுவிசேஷகன் மீதே ஈர்க்கப்படுவதால் கதாநாயக வணக்கம் சாதாரணம். அறிந்தோ அறியாமலோ ஆத்தும இரட்சிப்பைவிட சரீர சுகம் முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. வேதப்பாணியில் ஒத்துக்கொள்ள முடியாத சில காரியங்களைச் சுவிசேஷகர் சொல்லிவிடுகிறார். எடுத்துக்காட்டு: இன்று இடுப்புக்குக்கீழ் சுகவீனமுள்ளவர்களைத் தேவன் சுகமாக்கப்போகிறார்; நாளைக்கு இடுப்புக்கு மேல்! சுகத்திற்காக ஜெபிக்கும் வேளைகளில் புகைப்படத் தந்திரங்கள் சரளம். பத்திரிகைகளில் மிகைப்படுத்தி அறிக்கைகள் துணிந்து வெளியிடப்படுகின்றன. ராஜதந்திர முறையில் பணம் கேட்கப்படும்.



சிறப்புக் காணிக்கைகளுக்கு சிறப்பு ஜெபம். பணக்கணக்கு விபரமெல்லாம் பெரும்பாலும் கிடையாது. மேடைப் பகட்டுக்கு அளவிருக்காது. இவ்விதக் காரியங்கள் நாசரேத்தின் தச்சுப் பிரசங்கி யாருக்குப் பொருந்துமோ?

கிறிஸ்தவர்களுக்கான சுகமளிக்கும் ஊழியம் உள்ளூர்ச் சபைச் சூழலிலேயே பெரும்பாலும் இருக்கவேண்டும் (யாக் 5:14). குணமாக்கும் வரம்பெற்ற ஊழியர் தனிக்காட்டு இராஜாக்களாயிராது சபையின் பிற தலைவர்களோடு பாதுகாப்புக்கும், கணக்கொப்புவிப்புக்கும் இணைப்பு வைத்துக்கொள்ளவேண்டும் (அப் 8:12-17). இப்படிச் செய்தால் சபை வளரும், சபை கட்டப்படும்; சொந்த சாம்ராஜ்யங்கள் கட்டப்படாது.

# 73. ஜெப ஊர்வலம்பற்றி...?

மன்றாட்டு ஜெபம் மற்றும் ஆன்மீகப் போராட்டம் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள மறுமலர்ச்சியோடு பட்டணங்களிலும் நகரங்களிலுமுள்ள தெருக்களைச் சுற்றி அணிவகுத்து நடந்து ஜெபித்துவரும் பழக்கமும் தோன்றியுள்ளது. இது ஜெபப் பவனி அல்லது ஜெப ஊர்வலம் (Prayer Walk) எனப்படுகிறது. அநேக விசுவாசிகளுக்கு இது கவர்ச்சியாயிருந்தாலும் இது வேதத்திற்கு அவ்வளவு உகந்ததாயிராததால் மற்ற சிலருக்குக் கேள்வியாயிருக்கிறது. இந்த ஜெப ஊர்வலங்கள் கூடிக்கொண்டே வருவதால், வேதாகமக் கண்ணோட்டத்தில் அவற்றை அலசிப்பார்ப்பது அவசியமாகியுள்ளது.

இயேசுவைப் பொருத்தவரை, ஜெபமானது பிரதானமாக மறைவிலேயே செய்யப்படவேண்டியதென்பது முதலாவது சுட்டிக்காட்டப்படவேண்டும். அவரது காலத்து மார்க்கவாதிகள் சிலர் ''வீதிகளின் சந்திகளில்'' வேண்டுமென்றே நின்று ஜெபிக்கும் பழக்கத்தை அவர் வன்மையாய்க் கண்டித்தார். ''நீ ஜெபம்பண்ணும்போது, உன் அறை வீட்டுக்குள் நுழைந்து, உன் கதவைப் பூட்டி, மறைவாயிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு; அப்பொழுது மறைவிலுள்ளதைப்

பார்க்கும் உன் பிதா வெளிப்படையாய் உனக்குப் பலனளிப்பார்'' என இயேசு போதித்தார் (மத் 6: 5,6). இரகசிய ஜெபமே ஜெபத்தின் இரகசியம் என்பதே இயேசுவின் கோட்பாடு. பொதுவிடங்களில் அவர் ஜெபித்ததாய் நாம் வாசிப்பதரிது. மாறாக, இப்புனிதப் பயிற்சிக்காய்த் தனிமையான இடங்களைத் தேடிச் சென்றார். நோயாளிகளுக்காய்க் கூட அவர் ஒருபோதும் பொதுவிடங்களில் ஜெபித்ததாய்த் தெரிய வில்லை. அவர்களைக் குணமாக்கினார், அவ்வளவுதான்.

சிற்றூர்களையும் பெருநகர்களையும் நற்செய்திமயமாக்க இயேசு எழுபது சீடரை அனுப்பியபோது, ''நான் உங்களுக்கு இருளில் சொல் லுகிறதை நீங்கள் வெளிச்சத்திலே சொல்லுங்கள்; காதிலே கேட் கிறதை நீங்கள் வீடுகளின் மேலிருந்து பறைசாற்றுங்கள்'' என்றார் (மத் 10:27). அதாவது ஜெபமானது மறைவிடங்களில் ஏறெடுக்கப்பட வேண்டும்; அதைத் தொடர்ந்து வெளியிடங்களில் நற்செய்தி அறி விக்கப்படவேண்டும். எதிர்ப்பு நிறைந்த பகுதிகளிலும் இம்முறை யையே பின்பற்றவேண்டுமென்பது இயேசுவின் போதனை (வச 28).

நகர்களைச் சுற்றி ஜெப ஊர்வலம் வந்ததாக அப்போஸ்தலர் நட படிகளில் எங்கும் நாம் வாசிப்பதில்லை. அத்தேனே நகரானது விக்கி ரகங்களால் நிறைந்திருந்ததைக் கண்ட பவுலின் ஆவி சினமடைந்தது. உடனே அவன் விக்கிரகாராதனையின் ஆவிக்கெதிராய்ப் போராட ஜெப ஊர்வலமொன்றை நடத்திவிடவில்லை. மாறாக, சந்தைவெளி களில் தினமும் மக்களோடு தர்க்கித்துப் பேசினான் (அப் 17:16,17). பேதுரு சிறையிலடைக்கப்பட்டபோது, விசுவாசிகளெல்லாரும் அணி வகுத்து அல்லேலூயா கோஷமிட்டுக்கொண்டு சிறை மதில்களைச் சுற்றி ஜெபப் பவனி வரவில்லை. அவர்கள் கதவுகளைப் பூட்டிக் கொண்டு வீடுகளுக்குள்ளிருந்து ஜெபித்துக்கொண்டிருந்தார்கள்; ஆண்டவர் அற்புதமாய்ப் பேதுருவை விடுவித்தார் (அப் 12:5,12,17).

ஜெப ஊர்வலத்திற்கு ஆதாரமாக அடிக்கடி மேற்கோள் காட்டப் படும் வேதச் சம்பவம் இஸ்ரவேலர் ஏழு நாள் எரிகோ மதிலைச் சுற்றி வந்ததாகும் (யோசு 6). ஆனால் இச்சம்பவம் புதிய ஏற்பாட்டு யுகத்திலுள்ளோருக்கு ஆன்மீகப் போராட்ட ஜெபத்தைப் போதிப்ப தற்காய் எழுதப்பட்டதல்ல. மட்டுமல்ல, அன்று அவர்கள் எரிகோ நகரைச் சுற்றிவந்தது அதை இரட்சிக்க அல்ல, அதை அழிக்க! எபேசி



யருக்குப் பவுல் எழுதிய நிருபத்திலேயே இதற்குரிய முழுமையும் முடிவுமான உபதேசமுண்டு. அவன் எழுதியுள்ளபடி, பொல்லாத சக்திகளின் முக்கிய இருப்பிடம் ''வான மண்டலங்களில்'' இருக்கிறது (எபே 6:12). கிறிஸ்து ''எல்லாத் துரைத்தனத்திற்கும், அதிகாரத்திற் கும், வல்லமைக்கும், கர்த்தத்துவத்திற்கும்... *மேலாய்*... உன்னதங் களில்'' உட்கார்ந்திருக்கிறார் (1:20,21). அவர் மீது விசுவாசம் வைத்தி ருக்கும் நாம் அவரோடு ''உன்னதங்களில்'' வீற்றிருக்கிறோம் (1:3). இப்படியிருக்க, போராட்டமானது சமதளத்தில் அல்ல; மேலிருந்து நாம் எதிரியைத் தாக்குகிறோம். அமலேக்கியருக்கெதிராக தேவ மக் கள் போர்புரிந்த காட்சி இத்தத்துவத்தைத் தெளிவாய் விளக்குகிறது. மலையுச்சியிலிருந்த மோசேயும் ஆரோனும் ஊரும் மன்றாட்டு வீர ரைக் குறிக்கின்றனர்; அமலேக்கியரோடு அடிவாரத்தில் போர்புரிந்த யோசுவாவும் இஸ்ரவேலரும் நற்செய்தியறிவிப்பாளரைக் குறிக்கின் றனர் (யாத் 17).

எருசலேமில் இயேசு வெற்றிப் பவனி வந்ததும் ஜெப ஊர்வலத் திற்கு எடுத்துக்காட்டல்ல. ''ஓசன்னா'' என்றால் ''ஆண்டவரே, எங் களை விடுவியும்'' என்று பொருள். ரோமரின் கொடுங்கோலாட்சியி லிருந்து விடுவிக்கப்பட யூதரின் இதயக் கதறல் அது.

போதுமான அளவு நாம் இன்னும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வில்லை என்பதே எனது நம்பிக்கை. விதை விதைப்பதற்கு மாற்று எதுவும் கிடையாது. ஜெபம் எவ்வளவுதான் முக்கியமானதும் வல்ல மையானதுமாயிருந்தாலும் கிரமமாய், சோர்ந்துபோகாமல் நற்செய்தி யைப் பிரசங்கிப்பதற்கு அது பதிலானதாகாது. பெருக விதைக்காமல் சிறுக விதைப்பதே அறுவடை குறைவாயிருப்பதற்குக் காரணம் (2 கொரி 9:6). ஜெப ஊர்வலங்கள் உற்சாகமாயிருக்கலாம்; ஆனால் அது வேலையைச் சாதிக்காது. அன்றைய இரட்சணிய சேனையினர் போல விசுவாசிகள் திறந்தவெளிப் பிரசங்கத்திற்காய்த் தைரியமாய்ப் புறப்பட்டுச் செல்லவேண்டும். ஜெப ஊர்வலமல்ல, சுவிசேஷப் பவனியே இன்றையத் தேவை. உலகமெங்கும் போய் சுவிசேஷத் தைப் ***''பிரசங்கம் பண்ணுங்கள்''*** என்று இயேசு சொல்லியிருக் கிறார் (மத் 16:15). ''எந்தப் பட்டணத்தில் நுழைந்தாலும்... ***பிரசங்கி யுங்கள்''*** என்றார் அவர் (மத் 10:7, லூக் 10:8,9). எழுபது சீடர் ***''பிர***

***சங்கிக்கும்படி''*** அனுப்பப்பட்டனர். அவர்கள் பிரசங்கித்துக் கொண்டிருக்கையில் சாத்தான் கீழே விழுவதை இயேசு கண்டார்! (லூக் 10:18).

தனி நபர்களாகவும், குழுக்களாகவும் நாம் சமுதாயங்களுக்குள் ஊடுருவிச் சென்று நற்செய்தியைப் பகிர்ந்துகொள்வோம். கிறிஸ்துவின் உபதேசத்தினால் பட்டணங்களை ''நிரப்புவோம்'' (அப் 5:28). நாடுகளிலும் கண்டங்களிலுமுள்ள ''யாவரும்'' சுவிசேஷத்தைக் கேட்டுவிடும்படி மாதக்கணக்கில் வருடக்கணக்கில் இடையறாது நற்செய்தியை அறிவித்துக்கொண்டேயிருப்போம் (அப் 19:10). வீடுகள்தோறும் சந்திப்பு ஊழியம் செய்ய விரைவோம் (அப் 20: 20). இப்படி ஓர் இடம் விடாது அறிவித்துக்கொண்டேயிருந்தால்தான் ''உலகத்தைக் கலக்குகிறவர்கள்'' எனும் பட்டப்பெயர் நமக்குக் கிடைக்கும் (அப் 17:6). இது கடினமெனினும் இது ஒன்றே வழி. வேறெதுவும் பகட்டாயிருக்கும், பரவசமாயிருக்கும், ஆனால் பயனளிக்காது.

கால் மிதிக்கும் தேசமெல்லாம் கிடைக்குமென்பது பழைய ஏற்பாட்டு இஸ்ரவேலருக்குக் கொடுக்கப்பட்ட தேசிய வாக்குத்தத்தமாகும். அது பூகோள சம்பந்தப்பட்டது (உபா 11:24; ஆதி 13:14,15). இந்த நற்செய்தி யுகத்தில் இடங்களல்ல, இனங்களே நமக்கு வாக்கு. மக்களிடம் செல்லும்போதும், நாம் சந்திக்கும் யாவரும் நமது செய்தியை ஏற்றுக்கொண்டுவிடமாட்டார்கள். அப்படி வாக்குத்தத்தம் எதுவும் கிடையாது. விசாலமான வழிக்குப் பதிலாக நெருக்கமான வாசலை வெகு சிலரே தெரிந்துகொள்வர். உலகைக் கிறிஸ்தவமயமாக்க அல்ல; நற்செய்திமயமாக்கவே நாம் அழைக்கப்பட்டுள்ளோம். ''கிறிஸ்துவுக்கு இந்தியா'' என்பது வறட்டுக் கூச்சல்; ''இந்தியாவிற்கு கிறிஸ்து'' என்பதே அர்த்தமுள்ள செய்தி.

முடிவாக நான் சொல்வது: ஜெப ஊர்வலங்கள் தவறல்ல, ஆனால் தேவையற்றவை. அந்த இடத்தில் ஜெபித்தாலும் அறையிலிருந்து ஜெபித்தாலும் ஒன்றுதான். ''நான் சமீபத்திற்கு மாத்திரமா தேவன், தூரத்திற்கும் தேவன் அல்லவோ என்று கர்த்தர் சொல்லுகிறார்'' (எரே 23:23). நமது இருதயங்கள் தேவனுடைய இருதயத்தோடு எவ்வளவு நெருங்கியிருக்கின்றன; அவரது பாரத்தை நாம் எவ்வளவு பகிர்ந்து



கொள்கிறோம் என்பதே காரியம் (ரோ 9:1-3). ஜெபப் பவனிகள் அல்லது ஊர்வலங்கள் நடத்தச் செலவிடும் நேரத்தையும் பலத்தையும் தீவிர நற்செய்தியறிவிப்பு முயற்சிகளில் செலவிட்டால் கிறிஸ்துவின் பேராணையை வெகு சீக்கிரம் நிறைவேற்றிவிடலாம்.

## 74. ஊழியச் சங்கங்களை வேதம் ஆமோதிக்கிறதா?

தேவன் தமது அனாதிக் கிருபை ஞானத்தின்படி, ஊழியச் சங்கங்களை (Para-Church Organisations) இவ்வுலகில் தமது திட்டத்தை நிறைவேற்றப் பயன்படுத்தி வருகிறார். ஆனால் இச்சங்கங்கள் மேய்ப்பர்கள் மற்றும் சபைத் தலைவர்கள் பலரது கண்ணை அரித்துக் கொண்டே இருக்கின்றன. இவ்வித ஊழியச் சங்கங்களுக்கு திருமறையில் அங்கீகாரம் உண்டாவெனத் திரும்பத்திரும்பக் கேட்கப்படுகிறது. இருதிறத்தாரும் அவ்வப்பொழுது உட்கார்ந்து பேசிவருவதால் ஒருவரையொருவர் கூடுதல் புரிந்துகொள்ள வகையேற்பட்டாலும் இழுபறி இல்லாமலில்லை. கடினமான இக்காரியத்திற்குத் திருமறையிலிருந்து ஏதும் வெளிச்சமுண்டா?

மிஷனரி இயக்கங்களுக்கான நாற்றங்கால் அப்போஸ்தலர் 13இல் உண்டென்பது எனது கருத்து. பரிசுத்த ஆவியானவர் பர்னபாவையும் பவுலையும் உள்ளூர்ச் சபையொன்றிலிருந்து ''வெளியே'' இன்னும் பரந்த ஊழியத்திற்காக அழைத்தார். தங்களது முதல் மிஷனரிப் பயணம் முடிந்ததும் தங்களை அனுப்பிவைத்த சபைக்குத் திரும்பிவந்து தேவனது செயல்களை அவர்கள் அறிக்கையிட்டனர். (14:26,27). ஆனால் அதற்குப் பின்னர் பவுலோ அவனது சகாக்களோ எந்தவொரு குறிப்பிட்ட உள்ளூர்ச் சபைக் கட்டுக்குள்ளிருந்து இயங்கியதாகத் தெரியவில்லை. அவர்களது ஊழியப் பாணி ஒரு மிஷனரி இயக்கப் பாணியாய் மாறிற்று.

ஊழியச் சங்கங்கள் பொதுவாக உள்ளூர்ப் பணிக்கு மிஞ்சி வெளியுலகப் பணியில் ஈடுபடுபவை. சபை என்றவுடன் நாம் உள்ளூர்ச் சபை என்று மட்டும் எண்ணி நிறுத்திவிடக்கூடாது. திருச்சபையின்

அனைத்துலகப் பரிமாணத்தைப் புரிந்துகொண்டால்தான் இறையர சில் ஊழியச் சங்கங்களின் இடம் நமக்குத் தெளிவாகும்.

வித்தியாசமான வரங்கள் மட்டுமல்ல, வித்தியாசமான ஊழியங் களுமுண்டு. வித்தியாசமான ஊழியங்கள் மட்டுமல்ல, வித்தியாச மான செயல்பாடுகளும் உண்டு. ஆனால் ''ஒரே'' ஆவியானவர்தான், ''ஒரே'' கர்த்தர்தான், ''ஒரே'' தேவன்தான் (1 கொரி 12:4-6). கிறிஸ் தவ ஊழிய முதிர்ச்சிக்கு இவ்வறிவு அடிப்படையானது. ''நீ எனக்கு வேண்டியதில்லை'' என்று யாரும் யாரிடமும் சொல்ல முடியாது (வச 21). ஒருவருக்கொருவர் போட்டியாக அல்ல, உதவியாக இருக் கவே அழைக்கப்பட்டிருக்கிறோம்.

சபையைக் கட்டிடமாகவும், ஊழியச் சங்கங்களை கட்டிடத்திற் கான சாரமாகவும் நான் புரிந்துகொண்டிருக்கிறேன். மிஷனரி இயக்கங் களின் முடிவான பணி சபை கட்டுதலாகும்; சபையின் முக்கிய பணி மிஷனரி ஊழியமாகும். சபை மேய்ப்பருக்கும் சபையினருக்கும் படிக்க வேதப்புத்தகம் வேண்டுமானால் அதற்கு வேதாகம மொழி பெயர்ப்பாளர்களும் வேதாகமச் சங்கங்களும் தேவை. சபைகளின் சமூகச் சேவைகளில் உதவ நிவாரணப்பணி இயக்கங்கள் தேவை. சபையிலுள்ள பல்வேறு பொறுப்புகளுக்கு நபர்களைப் பயிற்றுவிக்க இறையியல் கல்லூரிகள் தேவை. உள்ளூர்ச் சபைகளின் சுற்றுப்புற நற்செய்திப்பணிகளில் சந்திக்கப்படாது தொலைவிடங்களில் ''மறைந் துள்ள'' மக்களைச் சந்திக்க மிஷனரி நிறுவனங்கள் தேவை. இப்படி எத்தனையோ எடுத்துக்காட்டுகளைச் சொல்லிக்கொண்டே போக லாம். தாதிமார், எக்ஸ்ரே எடுப்போர், இரத்தம் சோதிப்போர் போன்ற Para-medical staff டாக்டர்களுக்கு எவ்விதம் தேவையோ அப்படியே ஊழியச் சங்கங்கள் (Para-church ministries) உள்ளூர்ச் சபைக்குத் தேவை. அவை உள்ளூர்ச் சபைகளுக்குப் பதிலானவை அல்ல, பக்க பலமானவை.

எல்லா வரமும் எங்களிடமுண்டென்று உள்ளூர்ச் சபை எதுவும் பெருமையடித்துக்கொள்ள முடியாது. பல்வேறு சபைகளிலுள்ள வரங் களைப் பொதுவான நிகழ்ச்சிகளுக்காகவும் பரந்த ஊழியத்திற்காகவும் ஒருங்கிணைக்க ஊழியச் சங்கங்கள் உதவுகின்றன. இப்படிச் செயல் பட்டால், நமது சுற்றத்தை மட்டுமல்ல, சமுதாயத்தையே பாதிக்கலாம்.



ஆதிச்சபைக் காலத்தில் ஒரு ஊருக்கு ஒரு சபைதான் என்றி ருந்தது. இன்றோ நிலைமை வேறு. ஏற்கனவே ஒரு ஊரில் பன்னி ரெண்டு சபைகள் இருந்தாலும் ஒவ்வொரு சபைப்பிரிவும் தனது கிளைச் சபை ஒன்றையும் அங்கே நிறுவ முனைகிறது! சபைகளுக் கிடையே ஒருமனத்தையும் ஐக்கியத்தையும் உண்டாக்கும் பொது மேடைகளாகவும் கூடும் மையங்களாகவும் ஊழியச் சங்கங்கள் விளங் குகின்றன. நமது பணத்தையும் பலத்தையும் ஒன்றுசேர்க்கும்போது செய்ததையே திரும்பச் செய்யும் வீணடிப்பு தவிர்க்கப்படும். ஊழியச் சங்கங்களைச் சரியாகச் சொன்னால் ''பொதுச் சபை'' ஊழியங்க ளென்றே அழைக்கவேண்டும்! சபையின் ஒருமைப்பாட்டிற்கும், முதிர்ச்சிக்கும் இன்றியமையாதவையாக அவை தேவனது திட்டத்தில் இயங்குகின்றன.

சிலர் கிறிஸ்துவைப் ''பொறாமையினாலும் விரோதத்தினாலும்'' பிரசங்கித்தபோதுகூடச் சந்தோஷப்பட்டான் பவுல் (பிலி 1:15,18). இறையரசுக்கு இலாபம் கொண்டுவரும் எந்த ஊழியத்திற்காகவும் தேவனைத் துதிப்போம். ''கூடாரத்திற்குள்'' நம்மோடு ஒருவன் இல் லையென்ற ஒரே காரணத்தினால் நாம் ஏன் அவன் தீர்க்கதரிசனம் சொல்லுதலைத் தடுக்கவேண்டும்? யோசுவாவைப்போல் குறுகிய மனப்பான்மையில்லாது மோசேயைப்போல் பரந்த மனப்பான்மை கொள்வோம் (எண் 11:26-29). இயேசு இருந்த காலத்தில் அவரையும் அவரது சீடரையும் தவிர்த்து விடுதலை ஊழியம் நடத்தக்கூடிய வேறு யாரைக் கற்பனை செய்துபார்க்கமுடியும்? அப்படி இருக்க முடியு மென யோவானால் ஒத்துக்கொள்ளமுடியவில்லை. அந்தப் பிரசங்கி யாரை அவன் தடுத்து நிறுத்தியேவிட்டான்! ஆனால் இயேசுவோ ''அவனைத் தடுக்கவேண்டாம்... நமக்கு விரோதியாயிராதவன் நமது பட்சத்திலிருக்கிறான்'' என்றார் (மாற் 9:38-40).

சவுல் இராஜாவுக்கு இதோ ஒரு செய்தி: ''தாவீதை உனக்கு ஆபத்தாக நினைக்காதே. உனது யுத்தங்களில் அவன் உனக்கு ஆதர வாகத்தான் இருப்பான்!''

## 75. சுயாதீன ஊழியங்கள் சரியா?

பழைய உடன்படிக்கையின் காலத்தில் மார்க்க சம்பந்தமான காரி யங்கள் யாவும் தேவாலயத்தையே மையமாய்க் கொண்டு நடந்தன. விரும்பிய இடங்களிலெல்லாம் பலிகளைச் செலுத்த மக்கள் அனு மதிக்கப்படவில்லை (உபா 12:5,13). ஆனால் புதிய உடன்படிக்கை யின் கீழ் இரண்டு மூன்று பேர் இயேசுவின் நாமத்தில் ''எங்கு'' கூடினாலும் அங்கு அவர்கள் நடுவில் அவர் இருப்பார் (மத் 18:20). ஆராதிக்கவோ மார்க்க சம்பந்தமாக வேறு எதைச் செய்யவோ ஓரி டத்தைவிட அடுத்த இடம் புனிதமானது என்று எதுவும் கிடையாது (யோவான் 4:21-23). பழைய உடன்படிக்கையில், ஆசாரியத்துவம் பன்னிரு கோத்திரங்களில் ஒன்றிற்கு மட்டும் சொந்தமாயிருந்தது. இப்பொழுதோ தேவப் பிள்ளைகள் யாவரும் ஆவிக்குரிய பலிகளைச் செலுத்தும்படி தேவனுக்குமுன் ராஜரீக ஆசாரியராய் இருக்கிறார்கள் (1 பேது 2:5,9). இந்தச் சிலாக்கியம் தவறாய்ப் புரிந்துகொள்ளப்பட்டி ருப்பதால் சுயாதீன ஊழியங்கள் ஆயிரக்கணக்கில் முளைத்துவிட்டன.

உள்ளூர்ச் சபைகளுக்கு வெளியேயுள்ள எல்லா ஊழியங்களையும் சபை மேய்ப்பர்கள் சிலர் சுயாதீன ஊழியங்கள் என அழைத்துவிடுவர். இது சரியல்ல. தனிப்பட்ட முறையில் கிறிஸ்தவர்கள் அனைவரும் உள்ளூர்ச் சபைகளின் ஆராதனைகளிலும் பணிகளிலும் ஈடுபட வேண்டும்; ஆனால் அதே வேளையில் உள்ளூர்ச் சபைகளின் நிர்வா கத்திற்குட்படாது எத்தனையோ ஊழியங்கள் நடைபெறலாம். வேதா கம மொழிபெயர்ப்புப் பணிகள், வேதாகமச் சங்கங்கள், நிவாரணப் பணி இயக்கங்கள், மருத்துவ ஊழியங்கள், முன்னோடி மிஷனரிப் பணிகள் போன்றவை இதற்குச் சில எடுத்துக்காட்டுகள். அப்போஸ்த லன் பவுலும் அவனது குழுவும் ஒரு மிஷனரி இயக்கந்தான். எந்த வொரு குறிப்பிட்ட உள்ளூர்ச் சபையினாலும் அவர்கள் நிர்வகித்து இயக்கப்படவில்லை. பயணம் செய்த பாதைகளிலெல்லாம் ஆங் காங்கே இருந்த உள்ளூர்ச் சபைகளோடு ஐக்கியப்பட்டுக் கொண்டனர்.

உள்ளூர்ச் சபை ஊழியமென்றாலும், பொது ஊழியமென்றாலும் ஊழியரிடையே ஒருவருக்கொருவர் பொறுப்புணர்வு என்று இல்லை



யேல் அவ்விதச் சுயாதீனம் வேதத்திற்குப் புறம்பானதே. அப்படியே உள்ளூர்ச் சபைகளைப் பொருத்தமட்டிலும் ஒருவர்தான் தலைவ ரெனும் நிலை சரியல்ல. மேய்ப்பர், மூப்பர் அல்லது கண்காணிகள் என்பவையெல்லாம் ஒரே ஊழிய நிலையைக் குறிக்கும் வெவ்வேறு பதங்களாகும். இவை எப்பொழுதுமே பன்மையில்தான் குறிப்பிடப் பட்டுள்ளன (உ-ம்: அப் 20:17,28). ஊர்விட்டு ஊர் தாண்டிச் செய்யப் படும் ஊழியங்களிலும் பன்மைத் தலைமைத்துவம் இருக்கவேண் டும். இயேசு தமது சீடரை இரண்டிரண்டு பேராய் அனுப்பினார். பவுலுக்கு அவனது மிஷனரிக்குழுவில் எப்பொழுதும் ஒரு சில துணை ஊழியர் இருந்தனர். பணக்காரியங்களில் சுயாதீனம் ஊழலுக்கு வழி வகுக்கும். செய்தியில் சுயாதீனம் வஞ்சகத்திற்கு வழிநடத்தும். ஊழிய முறைகளில் சுயாதீனம் வசனத்திற்கு ஒவ்வாத செயல்பாடுகளுக்கு வழிதிறக்கும். நிர்வாகத்தில் சுயாதீனம் அதிகாரத் துர்ப்பிரயோகத் திற்கு வழியுண்டாக்கும். சுயாதீன ஊழியங்கள் பல குடும்பத் தொழில் களாய் முடிவடைகின்றன.

சுயாதீனமாய்த் தனித்துச் செயல்பட்டால் நாம் அதிகம் சாதிக்க முடியாது (பிர 4:9). சுயாதீனம் நமக்கு வேலை திருப்தியளிக்கலாம்; ஆனால் இறையரசிற்கு அதிக லாபம் கிட்டாது. சுயாதீன ஊழியங்கள் பெருகும்போது ஏற்கனவே செய்யப்பட்டவையே திரும்பத் திரும்பச் செய்யப்பட்டு இறையரசிற்கான பணம், பலம், நேரம் யாவும் வீணா கும். கணக்கொப்புவிப்பு நிறைந்த குழு ஊழியமே புதிய ஏற்பாட்டு முறையாகும். குழு ஊழியமென்பது கடினம்தான். ஆனால் அது சுயத் திற்குச் சாவு மணியடிக்கும். சுயாதீன ஊழியரில் பலர் நிலைப்படுத் தப்பட்டுள்ள நிறுவனங்களிலிருந்து ஒழுங்கீனத்தினாலோ உறவுப் பிரச்னைகளினாலோ வெளிவந்தவர்களே. பண ஆசை இன்னொரு முக்கிய காரணம்.

நான் இங்கு குறிப்பட்டவைகளை வைத்துக்கொண்டு, தேவ ஊழியர் எவரும் சுயாதீனமாய் இயங்கவே முடியாதென முடிவுகட்டி விடக்கூடாது. சில விதிவிலக்குகள் இருக்கலாம். தீர்க்கதரிசிகளை நிறுவன அமைப்புகள் மூச்சுமுட்டச் செய்யலாம். வேதப் போதகர் களைச் சபைப் பிரிவுகளின் அமைப்புகள் விடுதலையோடு போதிக்க விடாது கட்டுப்படுத்தலாம். சிங்கங்களுக்குக் கூண்டுகள் பிடிக்

குமோ? ஆயினும், இவ்வித ஊழியர்களும் தாங்களாகவே இவ்வித வரங்களுள்ள முதிர்ந்த பக்குவமான பிற ஊழியரோடு பரஸ்பர பொறுப்புறவு வைத்துக்கொள்வது பாதுகாப்பானது.

சம்பளம் வாங்குவதில்லை, விசுவாசத்திலேயே வாழுகிறோ மென்று சில சுயாதீன ஊழியர் பெருமையடித்துக் கொள்வதுண்டு. ஊழியச் சங்கங்களில் பணியாற்றுகிறவர்களும் விசுவாசத்தில்தான் வாழுகின்றனர். மாதா மாதம் தேவன் தமது பிள்ளைகள் மூலம் காணிக் கைகளை அனுப்பித் தங்கள் தேவைகளைச் சந்திப்பாரென்று அவர் கள் ''கூட்டு'' விசுவாசத்தை அப்பியாசிக்கின்றனர். அன்றன்றுள்ள ஆகாரத்தை ''எனக்கு'' இன்று தாரும் என்றா ஆண்டவர் போதித்தார்? ''எங்களுக்கு'' என்றுதானே போதித்தார்?

ஊழியரைப் பயிற்றுவிக்கிறவன், பிரசங்கிக்கிறவன் மற்றும் வேதப் போதகன் என்ற முறையில் ஏறத்தாழ 33 ஆண்டுகளாக ஒரு மிஷனரி நிறுவனத்தில் அங்கமாயிருந்ததற்காய் மகிழுகிறேன். எனது ஊழி யத்தை நான் நிறைவேற்றும்படி எனக்குதவிய எனது உடன் தலைவர் களுக்காகவும் உடன் ஊழியருக்காகவும் ஆண்டவரை மண்டியிட்டுத் துதிக்கிறேன். அவர்களுக்குக் கர்த்தர் நிறைவான பலனருளுவார்.

## 76. நிறுவனங்களிலிருந்து ஊழியர்கள் விலகுவதேன்?

''நான் முதலில் ------------------- என்ற ஊழியத்தில் இருந்தேன்; இப்பொழுது ''------------------- .'' இவ்விதம் சொல்லும் கிறிஸ்தவ ஊழியர் பலரை நாம் காண்கிறோம். இது மக்களுக்குக் குழப்பமா யுள்ளது. ஓர் எழுப்புதல் மற்றும் மிஷனரி இயக்கத்தில் முப்பத்து மூன்றாண்டுகள் தலைவனாயிருந்து, இந்தியாவிலும் வெளிநாடு களிலுமுள்ள பல்வேறு கிறிஸ்தவ நிறுவனங்களோடு தொடர்புள்ள வனாக இவ்வித நிகழ்சிகளை வேதனையோடு கவனித்துக் கொண் டிருக்கிறேன். ஊழியங்களை விட்டு வந்தவர் பலரது கூற்றுக்களை அலசிப் பார்த்ததில் அடிப்படையான காரணங்களை இங்கு வரிசைப் படுத்தியுள்ளேன். அவற்றில் பலவற்றிற்கு வேத எடுத்துக்காட்டுகள்



ஒப்பாயிருக்கும். இச்சலனத்தை முழுவதும் நிறுத்த முடியாவிடினும் முடிந்த அளவு குறைக்க என்ன செய்யலாமென்றும் கண்டுபிடிக்க முயலுகிறேன்.

■ முதலாவது, தவிர்க்க முடியாத ***நியாயமான*** சில காரணங் களைக் காண்போம்.

□ சிறப்பான வரங்களும் தாலந்துகளும் பெற்ற ஊழியருக்கு நிறு வனங்களின் கட்டுப்பாடுகள் தங்களைக் கட்டிவைப்பவைகளாய்த் தோன்றுகின்றன. தங்கள் வரங்களைப் பயன்படுத்த போதுமான வாய்ப் புகள் இல்லாததாய் உணருகின்றனர். அவர்களுக்கு மூச்சு முட்டு கிறது. இவ்விதச் சூழலிலும் கடவுள் மிகத் தெளிவாய் நடத்தாவிடில் ஓர் ஊழிய நிறுவனத்தை விடுவது நல்லதல்ல. வெளியேறிவிடு பவர்களுக்கு இரண்டு ஆபத்துக்கள் உண்டு. ஒன்று கவனமான கண்காணிப்பும் உடனடியான கணக்கொப்புவிப்பும் இல்லாமற்போகி றது. அற்புத வரங்களுள்ள ஊழியர் பலர் ஊழிய அமைப்புகளை விட்டு வெளியேறிச் சென்றபின் ஒரக்கொள்கைகளுக்கும் மிதமிஞ் சிய செயல்பாடுகளுக்கும் பலியாகியுள்ளனர். ஊழியத்தில் கிடைக் கும் ஆசீர்வாதங்கள் கிறிஸ்துவின் உடலுக்குப் பயன்படாது ஊழிய னின் சொந்த விருப்பங்களையும் குடும்பங்களையும் திருப்திப்படுத் தவே சென்றுவிடுவது அடுத்த ஆபத்து. இவ்வித ''சுயாதீன'' ஊழியர் பெரும்பாலும் இறையரசையல்ல, தங்கள் சொந்த சாம்ராஜ்யங் களையே இயேசுவின் பெயரைச் சொல்லிக் கட்டிக்கொண்டிருப் பார்கள். தேவனது சித்தத்தின்படியாய் ஊழியத்திலிருந்து விலகுபவர் களும் உண்டு; ஆனால் அவர்களைவிடச் சுயநலனுக்காய் வெளியேறு பவர்கள்தான் அதிகம்.

சிறப்பான வரங்களும் தாலந்துகளும் பெற்ற உடன் ஊழியரை நிறுவனத்திலுள்ள மற்ற எல்லாரையும்போல் நடத்தாது, சட்டதிட் டங்களைச் சற்றுத் தளர்த்திக்கொடுத்து, அன்னார் தங்கள் வரங்களைப் பயன்படுத்தி தங்கள் அழைப்பை நிறைவேற்ற நல்ல வாய்ப்புகளை உருவாக்கித் தருவது தலைவர்களின் தலையாய கடமையாகும். உடன் ஊழியர் ஒருவர் கவர்ச்சிகரமாய்ச் சீக்கிரம் உயர்ந்துவருவாரா னால் தலைவர்கள் பயந்து பொறாமைப்பட்டுவிடக்கூடாது. விதவை களுக்கு ஆகாரம் பரிமாறவே பிலிப்பு தெரிந்தெடுக்கப்பட்டான்.

ஆனால் அவனது வரம் வெளிப்படுவது காணப்பட்டபோது அவன் தயக்கமின்றி ''சுவிசேஷகனாகிய பிலிப்பு'' என்றழைக்கப்பட்டான் (அப் 6:5; 8:5,6; 21:8). ஆனால் பிலிப்பு தன்னைத்தானே பிறருக்கு மேல் முன்னுக்குக் கொண்டுவர முயற்சிக்கவில்லை.

☐ நிர்வாகத்திலுள்ள ஓட்டைகளாலும் ஊழியர் பலர் நிறுவனங்களை விடுகிறார்கள். வேத சத்தியங்களைப் புரிந்துகொள்வதாலும் ஆன்மீகக் கிருபைகளினாலும் தங்களது குணங்களைத் தலைவர்கள் கனிவாக்கிக்கொண்டிராவிடில் அவர்கள் தங்கள் உடன் ஊழியருக்கு, அதிலும் குறிப்பாக இளைஞருக்கு, பெரும் தடைகளாயிருப்பார்கள். எந்தவொரு அமைப்பும் சட்டதிட்டமும் பூரணமானதல்ல; எனவே முன்னேற்றத்திற்கான மாற்றங்கள் வரவேற்கப்படவேண்டும். சாசனங்களும், சட்டதிட்டங்களும் நமக்காய்த்தான் இருக்கின்றனவே தவிர நாம் அவைகளுக்காய் இல்லை (மாற் 2:27). தாமே எழுதியதையே கடவுள் மாற்றிவிட்டார்! புதிய ரசத்திற்குப் புதிய துருத்திகள் தேவை. தலைவர்கள் அதிகாரத் தோரணைக்கு அடிமைகளாகி திருத்தங்களை ஏற்றுக்கொள்ள மறுத்தால் நல்ல ஊழியர் பலரை இழக்க நேரிடும் (மத் 20:25,26).

☐ ஒரு சிலர் ஒரு குறிப்பட்ட பாரத்துடன் கூடிவந்து ஓர் ஊழியத்தைத் தொடங்குவர். சில ஆண்டுகட்குப்பின் அவர்களில் ஒருவர் தன்னைக் கர்த்தர் வேறுவித ஊழியத்திற்கு அழைப்பதாய் உணரலாம். உடனே அவர் அக்குழுவை விட்டுவிடாது மற்ற அங்கத்தினருடன் தனது பாரத்தைப் பகிர்ந்துகொள்ளவேண்டும். அவர்கள் இதைக் குறித்து ஜெபித்துப் பொருள் சார்ந்து கலந்துரையாடவேண்டும். பொதுவான கருத்து இதற்கு ஒத்திருக்குமானால் அந்த நபரை மற்றவர்கள் ஆசீர்வதித்து அனுப்பி வைக்கவேண்டும். உள்ளூரிலுள்ள தீர்க்கதரிசன மற்றும் போதக ஊழியத்தில் இரு கண்கள் போன்ற பவுலையும் பர்னபாவையும் அனுப்பிவைப்பது கடினம்தான். ஆனால் சொந்தக் காரணங்கள் எத்தனை நியாயமாயிருந்தாலும் இறையரசின் தேவைகளே பிரதானமானவை (அப் 13:1-4). எல்லா வகை ஊழியங்களையும் ஒரே குடையின் கீழ் வைத்துவிடவும் முடியாதே!

☐ சுகவீனம் மற்றும் குடும்பச் சிக்கல் காரணமாகவும் நிறுவனங்களிலிருந்து ஊழியர் வெளிவருவதுண்டு. சரியான நபர்களுக்கு விசுவாசிகள் ஆதரவு தரவேண்டும்.



■ அடுத்து, சில ***தவறான*** காரணங்களைக் கவனிப்போம்.

☐ பண ஆசைக்குப் பலியாகி நிறுவனங்களை விடும் ஊழியர் பலருண்டு. கூடுதல் பணத்தை இச்சித்துப் பவுல்களை விட்டோடும் தேமாக்கள் ஏராளம் (2 தீமோ 4:10; பிலி 3:17-19). பொதுவாக, சுயாதீன ஊழியர் தாங்கள் நிறுவனங்களில் இருந்திருந்தால் பெற்றிருக்கும் ஊதியத்தைவிடக் கூடுதல் சம்பாதிக்கிறார்கள். தங்கள் பொருளாசையை ''விசுவாச ஊழியம்'' எனும் போர்வையால் மூடிக் கொள்வார்கள். பொருளாதாரத் தேவைகளைக் குறித்து இயேசு நாம் ''கூட்டாக'' விசுவாசிக்கவேண்டுமென்றே போதித்தார். ''எங்களுக்கு (எனக்கு அல்ல) வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்கு (எனக்கு அல்ல) தாரும்'' என்று நாம் ஜெபிக்கவேண்டுமாம்!

☐ நபர்களுக்கிடையேயுள்ள மோதல்கள் கிறிஸ்தவ ஊழியங்களில் பெருகிவருவது வருந்தற்குரியது. ஆணவமுள்ள தலைவர்களோடு சமாளித்துப்போக முடியாத ஒரே காரணத்தால் எத்தனை ஊழியர் தங்கள் தாய்ச் சங்கங்களை விட்டுப் போகவேண்டியதாயிற்று! சில சமயங்களில் இவ்விதப் பிரச்னைகள் உடன் ஊழியரோடும் இருக்கலாம். ஆனாலும், விட்டுவிட்டு ஓடுவதுதான் பரிகாரம் என்று சொல்ல முடியாது. கடவுள் வேண்டுமென்றே நம்மைக் கடினமான சில நபர்களுடன் இருக்கச் செய்வார். ''இரும்பை இரும்பு கூர்மையாக்கும்'' (நீதி 27:17). நமது ஊழியத்தை வளர்க்கவேண்டுமென்பது நமது கரிசனை; ஆனால் நமது உள்ளத்தை உருவாக்கவேண்டுமென்பது நாதனது கவலை. கொடுமையாய் நடத்தப்பட்ட ஆகார் சாராயிடமிருந்து தப்பியோடியபோது கர்த்தருடைய தூதன் அவளைத் தடுத்து நிறுத்தி, ''நீ உன் தலைவியிடம் திரும்பப்போய் அவளது கையின் கீழ் அடங்கியிரு'' எனறான். ஆனால் சிறிது காலத்திற்குப் பின்னர் கடவுள்தாமே ஆபிரகாமைப் பார்த்து சாராயின் விருப்பப்படி ஆகாரை அனுப்பிவிடச் சொன்னார் (ஆதி 16:5-10; 21:9-14). காலம் வரும் வரை காத்திருக்கத் தெரிந்தோர் பாக்கியவான்கள். எங்கெல்லோம் மனிதர் இருக்கின்றனரோ அங்கெல்லாம் பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். குறைவுள்ள மனிதர் மற்றும் முறைகள் மூலமாகவே கடவுள் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார். ஒரு பிரச்னைக்குத் தப்ப இன்னொரு இடம் ஓடுவது சட்டியிலிருந்து அடுப்பிற்குள் விழுந்த கதை

யாகிவிடும். சுயாதீன ஊழியமல்ல, ஒருவரையொருவர் சார்ந்த ஊழியமே வேதப் பாணியிலானது.

□ ஒரு சில ஊழியர் ஒழுங்கு நடவடிக்கைகளினால் வெளியே அனுப்பப்படுகின்றனர். இத்தகையோர் தாங்கள் அந்த நிறுவனத்தை விட்டு வெளிவந்ததற்கு உண்மையற்ற வேறு காரணங்களை மக்களுக்குச் சொல்லுவார்கள். இவ்வித நபர்களையும், அவர்தம் குடும்பங்களையும், அவர்களது எதிர்கால ஊழியங்களையும் பாதுகாக்கும் நோக்கோடு நிறுவனங்களும் உண்மையான காரணங்களை வெளியே சொல்லுவதில்லை. ஒரு நிறுவனத்தை விட்டு வந்தவர் அந்நிறுவனத்தைப்பற்றிச் சொல்லும் எல்லாவற்றையும் நம்பவேண்டாமென்பது நான் மக்களுக்குக் கொடுக்கும் ஆலோசனை. நம்புவது இறையரசிற்கு எவ்விதப் பயனுமளிக்காது.

□ இன்னொரு படுமோசமான காரணத்தைக் குறிப்பிட்டு முடிக்க விரும்புகிறேன். ஆடு திருடுவதைக் குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறோம்; ஆனால் இன்று மேய்ப்பர்களைத் திருடுவதே மிகச் சாதாரணம். அயல்நாட்டு நிறுவனங்கள் பல தங்கள் டாலர்களைக் காட்டி இந்திய ஊழியர் பலரைக் கவர்ந்துள்ளன. வெள்ளைத் திமிங்கலங்கள் இந்தியாவின் விறுவிறுப்பான ஆத்துமாதாய மீனவர்களை வேட்டையாடும் இடங்களாக அனைத்துலக மாநாடுகள் மாறிவிட்டன. பொருளாதாரத்தில் பின்தங்கிய நாடுகளில் புதிய ஊழியங்களைத் தாங்கள் நிறுவுவதில்லையென்றும், ஏற்கனவே அங்கு ஏராளமாய் இருக்கும் ஊழியங்களையே தாங்குவோமென்றும் மேலைநாட்டு நிறுவனங்கள் தேவனுக்குமுன் உண்மையாய் உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும். மற்றப்படி தேவன் வேதனைப்படுவார். தலைவர்களுக்குக் கர்த்தரின் கட்டளை: ''உன் அயலானுடைய வேலைக்காரனை இச்சியாதிருப்பாயாக!''

மிஞ்சிய பணியை முடிக்க எஞ்சிய நேரம் மிகவும் கொஞ்சம். இந்தியாவைப் போன்றதொரு நாட்டில், இவை போன்றதான நாட்களில், இன்னும் பிரித்துக்கொண்டும், விலகிக்கொண்டும், செய்ததையே செய்துகொண்டும் இருக்க முடியாது, முடியவே முடியாது. ''அவர் பெருகட்டும்; நான் சிறுகட்டும்'' என்பதே நமது கோட்பாடாயிருக்கட்டும்!



# 77. ஒரு தலைவனைப் பின்பற்றலாமா?

''பிரியமான பிள்ளைகளைப் போலத் தேவனைப் பின்பற்றுங்கள்'' என்று வேதம் நமக்குப் போதிக்கிறது (எபே 5:1). இயேசு தமது பிதாவைப் போல அப்படியே இருந்தார். அவர் தமது சீடரை ''என் பின்னே வாருங்கள்'' என்றழைத்தார் (மத் 4:19). அடுத்து மூன்றாம் நிலை வருகிறது. ''நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல, நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருங்கள்'' என்று அப்போஸ்தலன் பவுல் தனது விசுவாசிகளை ஊக்குவித்தான் (1 கொரி 11:1). இச்சங்கிலி அறுபடாது தலைமுறை தலைமுறையாகத் தொடரவேண்டுமென்பதை திருமறைப் போதனை உறுதிப்படுத்துகிறது.

''ஏன் என்று சொன்னது போதும்; எப்படி என்று காட்டுங்கள்'' எனப் புகைபிடித்தலுக்கு அடிமையானவன் ஒருவன் கதறினானாம்! தங்களது முன்மாதிரியின்படி மக்களை நடத்தும் மனிதரே இன்றையத் தேவை. ''என்னைப் பாராதே; இயேசுவைப் பார்!'' என்று பிரசங்கிமார் அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறோம். இது சுத்த மாய்மாலமும் தப்பிக்க வழியுமேயன்றி வேறல்ல. தமது நாட்களிலுள்ள முன்மாதிரியற்ற மார்க்கத் தலைவரைக் குறித்து இயேசு மக்களை இவ்விதம் எச்சரித்தார்: ''நீங்கள் கடைப்பிடிக்கும்படி அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிற யாவையும் கடைப்பிடித்து நடந்துவாருங்கள்; ஆனால் அவர்கள் செய்வதுபோல நீங்கள் செய்யாதீர்கள்'' (மத் 23:3). மாறாகப் பவுலின் சவால் இதோ: ''நீங்கள் என்னோடுகூடப் பின்பற்றுகிறவர்களாகி... என்னிடம் கற்றும் அடைந்தும் கேட்டும் கண்டும் இருக்கிறவைகள் எவைகளோ அவைகளையே செய்யுங்கள்'' (பிலி 3:17; 4:9). தனது ''சிறியருக்கு'' முன்பாக இடறலற்ற, பாராட்டுக்குரிய வாழ்க்கை முறையை வைப்பது தலைமைத்துவப் பொறுப்பிலுள்ள ஒவ்வொருவரின் தலையாய கடமையாகும் (லூக் 17:1,2).

இப்படிச் சொல்வதால், நாம் பின்பற்றுவதற்குப் ''பூரணமான'' தலைவர்களைத் தேடிச் செல்லவேண்டுமென்று பொருளல்ல. அவர்களது வாழ்க்கையின் ஒட்டுமொத்தமான ''முடிவை,'' அதாவது விளைவை, மட்டுமே நாம் கவனிக்க வேண்டும் (எபி 13:7). நீங்கள் பின்

பற்ற விரும்பும் தலைவனைக் குறித்த கீழ்க்கண்ட கேள்விகளைக் கேட்டுப்பாருங்கள்: அவன் வேதத்தின் அதிகாரத்திற்கு அடிபணிந் தவனா? அவன் ஜெப மனிதனா? அவன் எதிர்ப்பாலரோடு பழகும் போது எட்டி நிற்கிறானா? அவன் எளிய வாழ்க்கைக்குத் தன்னை அர்ப்பணித்திருக்கிறானா? அவனது சொந்தக் காரியங்களில் உண்மை யுள்ளவனா? அவன் புகழ் நாட்டத்திற்கும் சுயநல நாட்டத்திற்கும் மரித்திருக்கிறானா? அவன் அனைத்து விசுவாசிகளையும் அணைத் துக்கொண்டு ஒற்றுமைக்காய்ப் பாடுபடுகிறானா? அவன் அகிலவுலக நற்செய்திமயத்திற்காய்த் தாகங்கொண்டுள்ளானா? அவன் அடுத்த வரிசைத் தலைவர்களைப் பயிற்றுவிக்கிறானா? மெச்சத்தகும் இப் பண்புகள் நிறைந்துள்ள ஒரு தலைவனைப் பின்பற்றுவது பொது வாகப் பாதுகாப்பானதாகும்.

ஒவ்வொரு தலைவனுக்கும் அவனது பலங்களும் பலக்குறைவு களும் உண்டு. எல்லாப் பகுதிகளிலும் சகலகலாவல்லவன் எவரு மில்லை. புதிய ஏற்பாடு நெடுகவே பன்மைத் தலைமைத்துவத்தை வலியுறுத்துவதற்கு இது ஒரு காரணமென்பது எனது கருத்து (தீத் 1:5; அப் 20:17). இதனால் ஏதோ ஒரு நபரைக் கதாநாயக வணக்கம் செய்தலும் தவிர்க்கப்படுகிறது. துர்ப்பாக்கியமாக இன்று பின்பற்று வோரைவிட விசிறிகளும், சீடரைவிடப் பக்தகோடிகளுமே அதிகம். (Followers vs. Fans; Disciples vs. Devotees).

ஒரு தலைவனைப் பின்பற்றுவதென்றால் அவனது பிரசங்க மற்றும் ஊழியப் பாணியைக் காப்பியடிப்பதல்ல. பிரசங்க மேடையில் ஒருவர் செய்வதை எளிதில் காப்பியடித்துவிடலாம். தலைவனின் ஜெப அறை மற்றும் தியான ஆராய்ச்சிப் பயிற்சிகளைக் கற்றுக்கொள் வதே முக்கியம். மற்றபடி நாம் ''தண்ணீரற்ற மேகங்கள்'' ஆகிவிடு வோம். பிரபலப் பிரசங்கிமாரைக் காப்பியடிக்கும் பைத்தியத்தில் தேவன் தங்களுக்கென்று வைத்துள்ள தனிப் பாணியை இழந்துவிட்ட வாலிபருக்காய் நான் புலம்புகிறேன்.

முதல் தலைவர்களைத் தாழ்மையோடும் உத்தமத்தோடும் பின் பற்றும் இரண்டாம் வரிசையினரைத் தேவன் தமது அபிஷேகத்தி னாலும் அதிகாரத்தினாலும் அலங்கரிக்கிறார். இவ்விதம் சிரமப்பட்டுக் கற்றுக்கொள்ள இரண்டாம் வரிசையினர் தங்களை ஒப்புக்கொடுக்க



வேண்டும். மோசேயிடமிருந்து யோசுவா கற்றுக்கொண்டான். இயேசு விடமிருந்து பேதுரு, யாக்கோபு, யோவான் கற்றுக்கொண்டனர். பவு லிடமிருந்து தீமோத்தேயு, தீத்து கற்றுக்கொண்டனர். இப்படிப் பலர். தனது ஊழியக் காலத்திலேயே தீமோத்தேயுவைக் குறித்துப் பவுல், ''என்னைப் போல அவனும் கர்த்தருடைய ஊழியத்தை நடப்பிக் கிறான்'' என்று சாட்சியிட்டான் (1 கொரி 16:10).

தலைவன் பின்வாங்கிப்போனால் அவனைப் பின்பற்றினோரின் இதயக் காயம் பெரிதாயிருக்கும். ஆனால் அவர்கள் அவன் பிரசங் கித்த மற்றும் எழுதியவைகளைத் தூக்கியெறிய வேண்டியதில்லை. அரசன் சாலமோனின் வாழ்க்கையில் முடிவாக ஆயிரம் பெண்கள் நுழைந்தனர்; அவன் விக்கிரகங்களுக்கும் திரும்பிவிட்டான் (1 இரா 11:3,4). மற்றவர்களுக்குச் சொல்ல அவனுக்கும் ஞானம் இருந்தது; தனக்குச் சொல்லவோ அவனுக்கு ஞானம் இல்லை. தேவனோ அவன் எழுதியவைகளைப் பரிசுத்த வேதத்திலிருந்து அகற்றவில்லை. அப்படியே 23ஆம் சங்கீதத்திற்கு அடுத்துப் பெரிதும் விரும்பப்படுவது 51ஆம் சங்கீதமே. தாவீது தனது பாவ அறிக்கையாக அதை இயற்றிப் பாடினான். ஒரு தலைவனைப் பின்பற்றுவது நமது சிலாக்கியமானால், அவன் பின்வாங்காது இருக்க அவனுக்காய் ஜெபிப்பது நமது பொறுப்பன்றோ?

## 78. கிறிஸ்தவத் தலைவர்கள் பின்வாங்குவதேன்?

மக்கள் நடுவில் மட்டுமல்ல, ஊழியர் நடுவிலும் பின்வாங்குதல் மலிந்து கிடப்பது துக்ககரமானது. கிறிஸ்தவத் தலைவர்கள் பின் மாற்றமடையும்போது பிசாசு மகிழுகிறான், உலகம் கிறிஸ்தவத்தை எள்ளி நகையாடுகிறது. தலைவர்களின் வீழ்ச்சி திருச்சபையைத் துயரத்தில் ஆழ்த்துகிறது. பிரசங்கிமார் மற்றும் ஊழியர் பின்மாற்ற மடைவதற்கான சில காரணங்கள் இதோ—

1) ஊழியச் சாதனைகள், வெற்றிகளுக்காகத் தேவனைத் துதிப் போம்; ஆனால் அவைகள் மீது சாருவது பெருந்தலைவர் பலரது

விழுகைக்குக் காரணமாய் அமைந்துவிட்டது. தங்கள் அரசாட்சியின் உச்சக்கட்டத்தில் இருக்கும்போதுதான் பழைய ஏற்பாட்டுத் தலைவர்கள், ராஜாக்கள் பலர் தவறினர். அவர்கள் ஆசீர்வதிக்கிறவரை மறந்து ஆசீர்வாதங்களைக் கும்பிடத் தொடங்கியதே அதற்குக் காரணம். இதைச் சத்துரு தந்திரமாய்ப் பயன்படுத்தி அவர்களை வழிவிலகச் செய்தான். ஆனால் அந்த இருபத்தினான்கு மூப்பரோ தங்களுக்குக் கிரீடங்களைக் கொடுத்தது தேவனே என்றாலும் அவைகளை அவரது பாதத்திலேயே திரும்ப வைத்துவிட்டனர் (வெளி 4:10).

2) திறமை, அதிகாரம் ஆகிய ஏணியில் ஏறிக்கொண்டிருக்கும் தலைவர் பலர் தாங்கள் தவறிவிழ முடியாதவர்களென எண்ணிவிடுகின்றனர். ''தன்னை நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதபடிக்கு எச்சரிக்கையாயிருக்கக்கடவன்'' என்ற எச்சரிப்பை அவர்கள் மறந்துவிடுகின்றனர் (1 கொரி 10:12). சோதனைக்கு ஏதுவான இடங்கள், நபர்களைவிட்டு அவர்கள் ஓடுவதில்லை (ஆதி 39:10-12). மாறாக, மாம்சத்துக்கடுத்த இவ்விதச் சோதனைகளெல்லாம் இனி அவர்களைத் தாக்குவதில்லை என்று நினைத்துவிடுகின்றனர். சிறிய காரியங்களில் விழும்போது அது பரவாயில்லை, பரவாயில்லை என்று சொல்லிக்கொண்டு, நாளடைவில் வஞ்சக மயக்கத்திற்கு ஆளாகின்றனர்.

3) வாழ்க்கையில் முக்கியமானவைகளைச் சரிவர வரிசைப்படுத்தாதது அடுத்த காரணமாகும். தலைவன் தனது ஜெப அறையை மறந்து தனது வேலையையே கும்பிடத் தொடங்குகிறான். வேலை வேலை என்று துவக்க காலத் தனித்தியான வேளையையெல்லாம் அசட்டை செய்கிறான். நின்று பெட்ரோல் ஊற்றாமலேயே ஓடுகிறான், பறக்கிறான் (ஏசா 40:30,31). வேதம் வாசிப்பதெல்லாம் பிரசங்கக் குறிப்பு தேடுவதற்காகத்தானே ஒழிய தனது வாழ்வை ஆராய்ந்து பார்ப்பதற்கல்ல. எனவே அவன் தனது உள்ளான மனிதனில் பலமிழக்கிறான். தனது குடும்பத்தோடும் போதுமான நேரம் செலவழிப்பதில்லை. சில நடைமுறைக் காரணங்களினால் ஊழியத்திற்குத் தனியாகவே செல்லவேண்டியதிருக்கிறது (1 கொரி 9:5). இச்சூழலில் அவனது பாலுணர்வுத் தேவைகளுக்குப் பிசாசு மாற்றுக்களைக் காட்டும்போது ஓடிக் களைத்த மானைப்போல ஊழியன் எளிதில் பலியாகிறான் (1 கொரி 7:5).



4) தலைவர்களில் பலர், தாங்கள் அவ்விதம் விரும்புவதால், தனிமையாகவே இருக்கின்றனர். தான் அசாதாரணமானவன் என்று நினைக்கும் எவ்வூழியனும் விழுவது திண்ணம் (மத் 26:33). உடன் தலைவர், உடன் ஊழியர் ஆகியோரின் கண்காணிப்புக்கும், அவர்களிடம் கணக்கொப்புவிப்புக்கும் தன்னார்வமாகத் தங்களை ஒப்புக்கொடாத பிரசங்கிமாரும், தலைவரும் பேராபத்திலிருக்கின்றனர். இவ்வித ஐக்கியம் தேவையில்லை எனும் அளவிற்கு வளர்ந்தவர் எவருமிலர். தலைவனை உடனுக்குடன் திருத்த உடன் ஊழியர் தயங்குவதால் விழுந்த உயர்மட்டத் தலைவர்கள் ஏராளம். பிந்திப் போனால் ஒரு தையலுக்குப் பதிலாக ஒன்பது தையல் போடவேண்டியிருக்கும்!

5) அழிவுக்கு முன்னானது அகந்தை (2 நாளா 26:14-16). ''தேவனுக்கேற்கும் பலிகள் நொறுங்குண்ட ஆவிதான்'' என்று தனது பாவ அறிக்கையில் தாவீது அழுத்தமாகக் கூறினான் (சங் 51:17). தேவன் பெருமையுள்ளவர்களுக்கு எதிர்த்து நின்று தாழ்மையுள்ளவர்களுக்குக் கிருபையளிக்கிறார். ஒரு குற்றத்தில் அகப்பட்டவனிடம் சாந்தத்தோடு இடைபடத் தவறும் தலைவன் தேவனது கோபத்தைச் சம்பாதித்து, அதுபோன்றதொரு சோதனையில் எளிதில் விழுந்துவிடுகிறான் (கலா 6:1).

விழுந்த தலைவர்களுக்காகத் தேவ மக்கள் கண்ணீரோடு மறைவிடங்களில் மன்றாடவேண்டும். தேவன் மறுபடியும் அவர்களை முன்னைவிடக் கூடுதலாகவும் பயன்படுத்தமுடியும் (ரோ 14:4; நியா 16:30). அவர்களது பாவங்களைப் பகிரங்கப்படுத்துவது பிசாசுக்குத்தான் சாதகம். மரிக்கும்போது சவுல் பின்வாங்கியதொரு தலைவனாயிருந்தபோதிலும், ''பராக்கிரமசாலிகள் விழுந்துபோனார்கள். பெலிஸ்தரின் குமாரத்திகள் சந்தோஷப்படாதபடிக்கும், விருத்தசேதனம் இல்லாதவர்களின் குமாரத்திகள் களிகூறாதபடிக்கும் அதைக் காத் பட்டணத்தில் அறிவியாமலும் அஸ்கலோனின் வீதிகளில் பிரஸ்தாபப்படுத்தாமலும் இருங்கள்'' என்றான் தாவீது! (2 சாமு 1:17-19).

# 79. காலத்திற்குமுன் தேவ ஊழியர் இறப்பதேன்?

தேவ ஊழியரின் எதிர்பாரா மரணங்களை விளக்குவதரிது. ஆனாலும், காரணமாயிருக்கக் கூடியவைகளை இங்கு வரிசைப்படுத்த முயலுகிறேன். இது நமக்குப் புத்தி சொல்லுவதற்குத்தானே ஒழிய மரித்தவர்களை நியாயந்தீர்க்க அல்ல.

☐ நாட்கள் பொல்லாதவை. நேற்றைவிட இன்று மோசம்; இன்றையைவிட நாளை மோசமாயிருக்கும். பூமியின்மேல் கொந்தளித்து வரும் பொல்லாப்புக்குத் தமது ஊழியர் எவரையும் தேவன் தப்புவிக்க விரும்பினால் அவர்களை அவர் அழைத்துக்கொள்ளலாம். ''புத்திமான்கள் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள், ஆனாலும் தீங்கு வருமுன் நீதிமான் எடுத்துக்கொள்ளப்படுகிறான் என்பதைச் சிந்திப்பார் இல்லை. நேர்மையாய் நடந்தவர்கள் சமாதானத்துக்குள் பிரவேசித்து, தங்கள் படுக்கையில் இளைப்பாறுகிறார்கள்'' (ஏசா 57:1,2). பரிசுத்தவான்களின் மரணம் கர்த்தரின் பார்வையில் அருமையானது. கிறிஸ்துவுடன் இருப்பது ''அதிக நன்மையாயிருக்கும்'' (பிலி 1:23).

☐ வாழ்க்கையை அளப்பது அதின் காலமல்ல, அதின் தானம். எத்தனை ஆண்டு வாழ்ந்தோம் என்பதல்ல, எப்படி வாழ்ந்தோம் என்பதே தேவனுக்குமுன் காரியம். தேவன் அவனுக்கென்று நியமித்தவைகளை ஓர் ஊழியன் நிறைவேற்றி முடித்துவிட்டால் தேவன் அவனை எடுத்துக்கொள்ளத் தீர்மானிக்கலாம். ''தாவீது தன் காலத்தில் தேவ சித்தத்தின்படி அவருக்கு ஊழியம் செய்தபின்பு நித்திரையடைந்தான்'' (அப் 13:36). தேவனது திட்டத்தில் அவனது பங்கு நிறைவேறியதும் யோவான் ஸ்நானன் தனது முப்பதுகளிலேயே மரித்தான். ''வார்த்தையே'' வந்துவிட்டபின் வெறும் ''சத்தம்'' இருந்து எதற்கு? தமது பணியை முப்பத்தினான்கு வயதிற்கு முன்னரே இயேசு முடித்துவிட்டதால் தமது நாற்பதாவது பிறந்த நாளைக் காணுமுன், அல்லது இந்தியாவிற்கு வருமுன், அவர் மரித்தார் (யோ 19:30).

பாதகமான சில காரணங்களும் இருக்கலாம்—



☐ ஊழியனொருவன் தனது அழைப்பு அல்லது ஆரோக்கிய உபதேசத்திலிருந்து திசைதிரும்பும்போது, நேரடியாகவோ, உடன் ஊழியர் அல்லது பிற தலைவர் மூலமாகவோ, தேவன் அவனை எச்சரிப்பார். அவனோ தன்னைத் திருத்திக்கொள்ள ஆயத்தமாயிராவிடினும், அவன் இன்னும் கூடுதல் வாழ்ந்தால் செய்த நல்லது யாவற்றையும் கெடுத்துவிடுவான், அல்லது இறையரசு வளர இடையூறாய்த்தானிருப்பானென்று தேவன் கருதுவாரானால் அழைப்பு மணியை அடித்துவிடுவார். ஏனெனில், தேவன் ஒருவரே துவக்க முதல் முடிவை அறிந்தவர் (ஏசா 46:10). முக்கிய பொறுப்பிலிருக்கும் தம் மனிதர் தமக்குக் கீழ்ப்படியாது சென்றால் தேவன் கண்டிப்பாயிருப்பார் (1 இரா 13).

☐ நமது தேவன் பட்சிக்கும் அக்கினி; அவர் எரிச்சலுள்ள தேவன் (உபா 4:24). ''என் மகிமையை வேறொருவனுக்கும் கொடேன்'' என்று அவர் திரும்பத் திரும்ப அறிவித்துள்ளார் (ஏசா 42:8). ஒரு பிரசங்கி தன்னைத்தானே உயர்த்திக்கொள்ளும்போதும், மக்கள் தன்னைப் போற்றிப்பாட அனுமதிக்கும்போதும் தேவன் கோபங்கொள்ளுகிறார். புகழ் மாலைகளுக்குத் தப்பியோட பிரசங்கிமார் முடிந்ததையெல்லாம் செய்யவேண்டும் (அப் 14:13-15). உலகிற்கடுத்த சொற்பொழிவாளன் ஒருவன் மகிமையைத் தேவனுக்குக் கொடுக்காததால் அவர் அவனை அடித்திருப்பாரானால், திருவசனப் பிரசங்கிமாரிடம் அவர் எவ்வளவு கண்டிப்பாயிருப்பார்? (அப் 12:21-23).

☐ தேவனுக்கு இன்றியமையாத நபரென்று ஒருவரும் கிடையாது என்பது நாம் அறிந்துகொள்ள தேவன் விரும்பும் இன்னொரு சத்தியமாகும். ஒருவேளை மோசே போன்ற வல்லமையான இன்னொரு தலைவன் இல்லாமலிருக்கலாம்; ஆனால் தேவன் தமது யோசுவாக்களை ஆயத்தமாய் வைத்திருப்பார் (உபா 34:9; யோசு 1:2). ஊழியர் வருவர், போவர், ஆனால் ''அவரது ஆளுகைக்கு முடிவில்லை!'' (ஏசா 9:7).

☐ இன்னும் சில ஊழியர்கள் அளவுக்கு மீறிய வேலையினாலும் பொறுப்புகளினாலும் சுகத்தைக் கெடுத்துக்கொள்ளுகின்றனர். நேரம் தவறி சாப்பிடுதல், போதுமான தூக்கமின்மை, ஓய்வின்மை போன்றவை அவர்களது வாழ்நாட்களைக் குறுக்கிவிடுகின்றன. ஆறுநாள் வேலை செய்த பிறகு தேவன்கூட ஒரு முழுநாள் ஓய்வெடுத்தார்!

# 80. சுவிசேஷத்தைக் கேள்விப்படாமலேயே இறப்போரின் நிலை?

இயேசு கிறிஸ்துதான் சொர்க்கம் செல்ல ஒரே வழியென்றும், அவரின்றி இரட்சிப்பே கிடையாதென்றும் இருக்குமானால் அவரைப் பற்றிக் கேள்விப்படுமுன் இறப்போரின் முடிவு என்ன? (யோ 14:6; அப் 4:12). இது கிறிஸ்தவரையும் கிறிஸ்தவரல்லாதவரையும் குழப்பும் தொன்றுதொட்டதொரு கேள்வியாகும். இதற்குப் பலவித பதில்கள் கொடுக்கப்படுகின்றன; ஆனால் எதுவுமே முழு திருப்தி யாய்த் தெரியவில்லை. மனிதராகிய நாம் இதைத் தெரிந்துகொள்வது அத்தியாவசியமல்ல என்பதாலோ என்னவோ கடினமான இக்கேள் விக்கு நேரடியான பதிலைக் கடவுள் தமது திருமறையில் தரவில்லை. ஆயினும், இப்பொருளைக் குறித்த பொதுவான அறிவு முக்கியமாக கிறிஸ்தவரல்லாதோரைச் சந்திக்கும் பணியில் ஈடுபட்டுள்ளோருக் குப் பயனுள்ளதாயிருக்கும்.

இறைவன் ஓர் இரட்சகர்; அவரது அடிப்படைக் குணம் இப்படி யிருப்பதால் எவரும் சீரழிந்துபோக அவர் விரும்பவே மாட்டார். ''எல்லா'' மனிதரும் இரட்சிக்கப்படவும் சத்தியத்தை அறிகிற அறி வுக்குள் வரவுமே அவர் விருப்பங்கொண்டுள்ளார் (1 தீமோ 2:3,4). எவரும் கெட்டுப்போகாமல் ''எல்லாரும்'' மனந்திரும்பவேண்டு மென்று அவர் வாஞ்சிக்கிறார் (2 பேது 3:9). தாம் சிலுவையிலறையப் படுதலை முன்னறிவித்துக்கொண்டிருந்த இயேசு தாம் உயர்த்தப் படும்போது ''எல்லாரையும்'' தம்மிடம் இழுத்துக்கொள்ளுவே னென்றார் (யோ 12:32). தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு சிலருக்காக மட்டுமல்ல, ''சர்வலோகத்தின்'' பாவங்களுக்காய் அவர் தமது இரத் தத்தைச் சிந்தினார் (1 யோ 2:2). இரட்சிப்பைக் கொண்டு வருவது தேவ கிருபையே; அது ''எல்லா'' மனிதருக்கும் தோன்றியுள்ளது (தீத் 2:11). விசுவாசிகளுக்கு மட்டுமல்ல, ''எல்லா'' மனிதருக்கும் கடவுள் இரட்சகராயிருக்கிறார் (1 தீமோ 4:10).

கடவுள் எல்லா மனிதரையும் சமமாய் நேசிக்கிறாரென்று மேற் குறிப்பட்ட திருவசனங்கள் தீர்க்கமாய் அறிவிக்கின்றன. அவரிடம் பாரபட்சமில்லை. ஒருவன் சுவிசேஷத்தைக் கேள்விப்படவில்லை



யெனில் அது அவனது குற்றமல்ல; அது சபையின் தவறுதல். கொர் நேலியு என்ற இத்தாலியன் கிறிஸ்தவனாவதற்கு முன்னதாகவே அவனது பிரார்த்தனைகள் கேட்கப்பட்டன, தானதருமங்கள் கட வுளின் சந்நிதியில் நினைக்கப்பட்டன. யூத குலமெனும் கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்த பேதுருவே இதைக் குறித்து என்ன சொன் னானென்று பாருங்கள்: ''தேவன் பட்சபாதமுள்ளவரல்ல என்றும், எந்த இனத்தவரிலும் அவருக்குப் பயந்து நேர்மையாய்ச் செயல் படுகிறவன் அவரால் ஏற்றுக்கொள்ளப்படுவான் என்றும் நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்'' (அப் 10:31,34,35).

தனக்குக் கிடைத்துள்ள வெளிச்சத்தின் அளவுக்கே மனிதன் நியா யந்தீர்க்கப்படுவான். கடவுள் நீதியுள்ள நியாயாதிபதி அல்லவா? (ஆதி 18:25; 2 தீமோ 4:8). திருச்சட்டத்தை (நியாயப்பிரமாணத்தை) அறியாமல் பாவம் செய்வோர் அச்சட்டத்தின் தீர்ப்புக்கு உட்படாம லேயே அழிவுறுவர்; திருச்சட்டத்துக்கு உட்பட்டு பாவம் செய்வோர் அச்சட்டத்தாலேயே தீர்ப்பளிக்கப்படுவர் (ரோ 2:11,12). சுவிசேஷத் தைப் பற்றியும் அப்படித்தான். சுவிசேஷத்தை ஒருபோதும் கேட்டி ராதோருக்கான தீர்ப்பு அதைக் கேட்டும் ஏற்றுக்கொள்ளாது தள்ளி விட்டோருக்குக் கிடைக்கும் தீர்ப்பு போலிராது. ''எவனுக்கு அதிகம் கொடுக்கப்பட்டதோ அவனிடம் அதிகம் கேட்கப்படும்'' (லூக் 12:48).

இறைவன் தம்மை இயேசு கிறிஸ்துவில் முழுமையாக வெளிப் படுத்தியிருந்தாலும் (எபி 1:1-3), தமது நன்மையையும் கிருபை யையும் வேறு விதங்களிலும் தெரிவிக்கிறார். ஒன்று இயற்கை, அடுத்தது மனித மனச்சாட்சி. இதற்கான சில முக்கிய திருவசனங்கள் இதோ: ''தேவன் நன்மை செய்துவந்து, வானத்திலிருந்து மழையை யும் செழிப்புள்ள காலங்களையும் நமக்குத் தந்து, ஆகாரத்தினாலும் ஆனந்தத்தினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி, இவ்விதமாய் அவர் தம்மைக் குறித்துச் சாட்சி விளங்கப்பண்ணாதிருந்ததில்லை'' (அப் 14:17). ''வானங்கள் தேவனுடைய மகிமையை வெளிப்படுத்து கின்றன... அவைகளின் சத்தம் பூமியெங்கும் அவைகளின் வசனங் கள் உலகின் கடையெல்லைவரைக்கும் செல்லுகின்றன'' (சங் 19: 1-4; ரோ 10:18). ''நியாயப்பிரமாணமில்லாத புறவினத்தார்... அவர் களுடைய மனச்சாட்சியும்கூடச் சாட்சியிடுகிறதினாலும்... நியாயப்

பிரமாணத்திற்கேற்ற செயல்கள் தங்கள் இருதயங்களில் எழுதி யிருக்கிறதென்று காண்பிக்கிறார்கள்'' (ரோ 2:14,15).

சுவிசேஷத்தைக் கேட்காமல் இறப்போருக்கு ஆவிகளின் உலகில் அதைக் கேட்க ஒரு வாய்ப்பளிக்கப்படுமென்பது சிலரது கருத்து. 1 பேதுரு 3:19ஐ இவ்விதம் அர்த்தப்படுத்துவது ''ஒரே தரம் இறப்பதும் பின்பு நியாயத்தீர்ப்படைவதும் மனிதருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது'' எனும் வேதத்தின் பொதுவான போதனைக்கு ஒவ்வாததாயிருக்கிறது (எபி 9:27). ஏதோவொரு வசனத்தை எடுத்து முழுவதும் அதின் அடிப்படையிலேயே ஓர் உபதேசத்தை உருவாக்குவது முறையன்று.

சுவிசேஷமயமாக்கப்படாதவர்களின் முடிவை முழுவதும் புரிந்து கொள்ள விழுந்துபோன மனிதனின் குறுகிய மூளையறிவு போதாது. மண்ணுலகிற்கு விண்ணுலகம் எவ்வளவு உயரமோ அப்படியே நமது எண்ணங்களைவிட கடவுளின் எண்ணங்கள் உயர்ந்தவை (ஏசா 55:8,9). வேதத்தில் தெளிவாகப் போதிக்கப்பட்டிராதவொன்றைக் குறித்து விவாதித்துக்கொண்டேயிராதபடி நற்செய்தியறிவிக்கப்படா தோரைச் சந்திக்கும் பணியைத் தீவிரமாக்குவோம். சுவிசேஷத்தைக் கேட்டு இறப்போரைவிட அதைக் கேளாமலேயே இறப்போர்தான் எண்ணிக்கையில் மிக மிக அதிகம். இயேசுவைக் குறித்துக் கேள்விப் படாதவன் அவரை எப்படி விசுவாசிப்பான்? (ரோ 10:14). இவ்வளவு பெரிதான இரட்சிப்பை அறிவிப்பது குறித்து விசுவாசிகளாகிய ''நாம்'' கவலையற்றிருப்போமானால் தண்டனைக்கு எப்படித் தப்பித்துக் கொள்வோம்? (எபி 2:3). சுவிசேஷத்தைப் பறைசாற்ற போதுமான சமயம் தருவதற்காகவே விசுவாசிகளாகிய ''நம்மிடம்'' பொறுமையா யிருந்து கிறிஸ்து தமது இரண்டாம் வருகையைத் தாமதிக்கிறார் (2 பேது 3:9). பிந்திவிட்டது, ஆனால் முடியாத அளவு பிந்திவிடவில்லை. தொலைந்துபோன ஆட்டின் உவமையில் ஒன்றுதான் தொலைந் திருந்தது, மற்ற தொண்ணூற்றொன்பது பத்திரமாயிருந்தன. இன்றோ தொண்ணூற்றொன்பது வெளியே! அவற்றைக் கண்டுபிடித்து உள்ளே கொண்டுவரும்வரை நாம் அமரவேண்டாம். நம்மால் முடிந்த தையெல்லாம் செய்துவிட்டு மீதியைக் கடவுள் கரத்தில் விட்டு விடுவோம். இத்தலைமுறைக் கிறிஸ்தவரல்லாதோருக்குப் பொறுப்பு இத்தலைமுறைக் கிறிஸ்தவரே!

பகுதி ஆறு

# பாலுறவும் திருமணமும்



## 81. சுயமாய் விந்தெடுத்தல் பாவமா?

சுயமாய் விந்தெடுத்தல் எனும் அர்த்தங்கொள்ளும் masturbation எனும் செயல் நேரடியாக வேதத்தில் குறிப்பிடப்படவில்லை (''சுய புணர்ச்சி'' என்று 1 கொரிந்தியர் 6:9இல் தமிழாக்கம் செய்யப்பட்டிருப்பது இதுவல்ல). ஆனால் இது வாலிபரின் முக்கியமானதொரு பிரச்னை.

இச்செயல் சரியா தவறா என்பதில் தேவ மனிதரின் கருத்துக்கள் வெகுவாக வேறுபடுகின்றன. பாலுணர்வு அதிகரிக்கும்போது அதை மிதமாக்க இது ஓர் ஏது என்பது சிலரது எண்ணம். கணவன் மனைவி பிரிந்திருக்கும் நாட்களிலும், ஒருவரது பாலுணர்வு சம்பந்தப்பட்ட தேவைகளை நிறைவேற்ற முடியாதபடி அடுத்தவர் சுகவீனம் போன்ற நிலைகளிலிருக்கும்போதும் சுயமாய் விந்தெடுத்தலில் தவறென்ன என்பது அவர்களின் கருத்து. ''இச்செயல் பிறர் எவருக்கும் பாதகம் விளைவிக்காததாலும், ஒருவரது தனிப்பட்ட காரியம் என்பதாலும் இதைக் கண்டனம் செய்வது முறையன்று'' என்று அமெரிக்காவில் பிரபலமான கிறிஸ்தவக் குடும்ப ஆலோசக நிபுணர் Dr. ஜேம்ஸ் டாப்சன் குறிப்பிடுகிறார். அடுத்த சாராரோ இச்செயலானது தேவனது இயற்கைப் பிரமாணங்களுக்கு முரண்பட்டது என்கின்றனர். ''அத்துமீறி சுயமாய் விந்தெடுத்தல் ஒருவரது ஆள்தத்துவத்தையே சீர்குலைத்து அவரைக் குற்றவுணர்வுக்குள் நடத்தி அடிமைப்படுத்தி விடுகிறது'' என்று பக்தன் டேவிட் வில்கர்சன் வாதாடுகிறார்.

சுயமாய் விந்தெடுத்தல் இப்படி கேள்விக்குறியான செயலாயிருப்பதால் அதைத் தவிர்த்துவிடுவதே மேல் என்பது எனது ஆலோசனை. உடலின் விருப்பங்களைக் குறிப்பிடுகையில் ''எல்லாவற்றையும் அனுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது... ஒன்றிற்கும் அடிமைப்படமாட்டேன்'' என்று சாட்சியிட்டான் பவுல் (1 கொரி 6:12-20).

தன்னடக்கம் என்பது திருமணத்திற்கு முன்பும் பின்பும் இன்றியமையாததொரு ஆவியின் கனியாகும் (கலா 5:22,23). விந்தெடுக்க

வரும் விருப்பத்திற்குத் திருமணமாகுமுன் மறுப்பு தெரிவிப்பது சிந் தனா சக்தியை வலுப்படுத்தி, பாலுணர்வு வாழ்வை ஒழுங்குபடுத்து கிறது. மணமானோருக்கு இச்செயல் தன்னலமானதாகும். அடுத்த வருக்கு அதில் பயனில்லையே (1 கொரி 7:33,34).

சுயமாய் விந்தெடுக்கும் பழக்கம் உங்களுக்குண்டானால் உங் களையே நொந்துகொண்டிருக்கவேண்டாம். உதவிக்காக தேவனை நாடுங்கள். சோதனையான படங்களையும் இடங்களையும் அகற்றுங் கள். வசனத்தால் மனதை நிரப்புங்கள் (சங் 119:9). பிற விசுவாசி களின் ஐக்கியத்தை நாடுங்கள். நற்செய்தியறிவிப்புகளிலும் சமூகப் பணிகளிலும் ஈடுபடுங்கள். விளையாட்டுகளை அசட்டை செய்ய வேண்டாம். நல்ல வாழ்க்கைச் சரிதைகளை வாசியுங்கள். சோம்பேறி யாயிருக்கவேண்டாம். அதுதான் ஆபத்து. ஆக்கமான எதையாவது செய்துகொண்டிருங்கள். தவறிவிட்டால் வெட்கி உங்கள் மீது வெறுப்பு கொள்ளாதிருங்கள். திரும்ப எழுந்திருங்கள். இயேசுவை நோக்குங் கள். அவர் புரிந்துகொள்கிறார். முயற்சியை விட்டுவிடாதிருங்கள்.

## 82. பாலுறவு பரிசுத்தமற்றதா?

பாலுறவு தேவனது அழகிய ஈவு. உலகில் பாவம் நுழையுமுன்னரே கணவனும் மனைவியும் உடலால் நெருங்கிய உறவுகொள்ள தேவன் நியமித்துவிட்டார். ஆணும் பெண்ணும் கணவன் மனைவி என்ற வகையில் ஒரே மாம்சம் ஆகும்படி உண்டாக்கப்பட்டவர்கள். ஒருவர் முன் ஒருவர் நிர்வாணமாயிருந்தது அவர்களுக்கு வெட்கமாயிருக்க வில்லை (ஆதி 2:24,25).

தங்குதடையின்றி தங்கள் உடல்களை ஒருவருக்கொருவர் கொடுக்கவேண்டுமென்று கணவன் மனைவிக்கு வேதம் போதிக் கிறது. ''மனைவி தன் சொந்தவுடலுக்கு அதிகாரியல்ல, கணவனே அதற்கு அதிகாரி; அப்படியே கணவனும் தன் சொந்தவுடலுக்கு அதிகாரியல்ல, மனைவியே அதற்கு அதிகாரி'' என்று அது கூறுகிறது. ''இருவரும்'' உடன்பட்டு, அதுவும் முழுவதுமாகத் தங்களை உப வாசத்திலும் ஜெபத்திலும் ஈடுபடுத்திக்கொள்வதற்காகக் குறிப்பிட்ட



காலத்திற்கு ஒதுங்கியிருக்கலாமேயன்றி, மற்றபடி தாம்பத்திய உறவு களை ஒருவருக்கொருவர் மறுக்கக்கூடாது (1 கொரி 7:4,5).

1 கொரிந்தியர் 7:29-31 வசனங்கள் பல சமயங்களில் தவறாக வியாக்கியானப்படுத்தப்படுகின்றன. வாழ்க்கைத் துணை, வாழ்க் கைத் துயரங்கள், வாழ்க்கையின் இன்பங்கள், வாழ்க்கையின் உடமை கள், வாழ்க்கையின் இலாபங்கள் ஆகியவற்றை இப்பகுதி குறிப் பிடுகிறது. இவை யாவும் தற்காலிகமானவை, இகத்துக்குரியவை, நித்தியமானவையல்ல என்பதே இங்கு வலியுறுத்தப்படுகிறது. எடுத் துக்காட்டாக, இறப்போ இழப்போ நேரிடுகையில் அழுவது தவறல்ல; ஆனால் உயிர்த்தெழுதலின் நம்பிக்கையை நாம் இழந்துவிடக் கூடாது. அப்படியே பொருட்களை வாங்குவது தவறல்ல; ஆனால் அவைகளை எப்போதும் நம்முடனேயே வைத்துக்கொள்ளவோ, பர லோகத்திற்கு அவைகளை எடுத்துச் செல்லவோ முடியாதென்பதை மறந்துவிடக்கூடாது. அதே கருத்தோட்டத்தில், கணவன் மனைவி உறவென்பது ''கடந்துபோகிற'' இவ்வுலகிற்கடுத்தது; பரலோகத்தில் அவர்கள் கணவன் மனைவி என்றில்லாமல் தேவதூதர் போலிருப் பார்கள் என்பதே இவ்வசனப் பகுதியில் விளக்கப்பட்டிருக்கிறது (மாற் 12:23-25).

இனவிருத்திக்கு மட்டுமே பாலுறவு நியமிக்கப்பட்டுள்ளதென்பது தவறான கருத்து. தேவன் பாலுறவை இன்பத்திற்காகவும் படைத்தார். ''உன் இளவயதின் மனைவியோடு மகிழ்ந்திரு. அவளே நேசிக்கப் படத்தக்க பெண் மானும், அழகான வரையாடும் போலிருப்பாளாக; அவளது ஸ்தனங்களே எப்பொழுதும் உன்னைத் திருப்தி செய்வதாக; அவளது நேசத்தால் நீ எப்பொழுதும் மயங்கியிருப்பாயாக'' (நீதி 5:18,19). திருமண வரம்புக்குள் பாலுறவு முற்றிலும் முறையானது. அவ்வரம்புக்கு வெளியேதான் பாலுறவு பாவமாகும். அடுத்த வசனத் திலேயே வரும் கேள்வியைக் கவனியுங்கள்: ''நீ அந்நிய ஸ்திரீயின் மார்பைத் தழுவவேண்டியதென்ன?'' (வச 20). ''விவாகம் யாவருக் குள்ளும் கனமுள்ளதாயும் விவாகப் படுக்கை அசுசிப்படாததாயுமிருப் பதாக; வேசிக்கள்ளரையும் விபசாரக்காரரையும் தேவன் நியாயந் தீர்ப்பார்'' (எபி 13:4).

திருமணம் தவிர்க்கப்படவேண்டுமென்பது கடைசிக் காலத்தில் பிசாசுகளின் உபதேசங்களில் ஒன்றாயிருக்குமென பவுல் முன்னறி

வித்தான் (1 தீமோ 4:1-3). இந்த மாய்மாலப் போதகர்கள் ஆழ்ந்த ஆன்மீகம் எனும் போர்வையில் தமது மக்கள் அனுபவிக்கும்படி தேவனே நியமித்தவைகளைக்கூடத் தடை செய்வர். கவனமாயிருங்கள்!

அப்படியானால் ''ஸ்திரீகளால் தங்களைக் கறைப்படுத்தாதவர்கள்'' என்றால் யார்? (வெளி 14:4). முழு வேதத் தாற்பரியத்தின் அடிப்படையிலேயே இவ்வசனத்தை விளங்கிக்கொள்ளவேண்டும். விவாகப்படுக்கை ''அசுசிப்படாதது'' என்று தேவன் தெளிவாகக் கூறிவிட்டபடியால் (எபி 13:4), இவ்வசனத்தில் ''கறை'' எனப்படுவது விபசாரத்தையும் வேசித்தனத்தையுமே குறிக்கும். பன்னிரு அப்போஸ்தலரின் பெயர்கள் நவ எருசலேமின் அடித்தளக் கற்களில் எழுதப்பட்டிருந்தன என்று வாசிக்கிறோம் (வெளி 21:14). இந்த அப்போஸ்தலரில் பெரும்பாலானோர் மணமானவர்கள் மட்டுமல்ல, தங்கள் மனைவிகளை மிஷனரிப் பயணங்களில் கூட்டிச் சென்றவர்களுங்கூட! (1 கொரி 9:5). மேலும், வெளிப்படுத்துதல் புத்தகம் ஒப்புவமைகள் நிறைந்தது. ''ஸ்திரீகள்'' என்ற பதம் இங்கு துன்மார்க்கமான உலகையும் குறிக்கலாம். எனவே, திருமண வாழ்வுக்குள் கொள்ளும் பாலுறவின் புனிதத்தை வேதம் எத்தனையோ இடங்களில் குறிப்பிட்டபின், ஏதோவொரு வசனத்திலிருந்து அதுவும் அது போதிக்காத ஒன்றைச் சொல்லுவது முறையன்று.

உலகமே பாலுறவுக் கவர்ச்சிகளால் நிறைந்துள்ளது. இப்பகுதியில் பிசாசினால் சோதிக்கப்படமுடியாத உயரத்தை எந்த ஆணும் பெண்ணும் எட்டுவதில்லை. எனவே அவனவன் தன் சொந்த மனைவியையும், அவளவள் தன் சொந்தக் கணவனையும் ''உடையவர்களாய்'' இருந்து, ''மறுபடியும்'' மறுபடியும் மறுபடியும் கூடி வாழவேண்டும் (1 கொரி 7:2, 5ஆ).

## 83. அவிசுவாசியை விசுவாசி மணக்கலாமா?

திருமணமென்பது ஒரு நுகம். அந்நிய நுகத்தைத் திருமறை கண்டிக்கிறது (2 கொரி 6:14). ''மாட்டையும் கழுதையையும் பிணைத்து உழாதிருப்பாயாக'' (உபா 22:10).



இரு ஏற்பாடுகளும் அவிசுவாசிகளைக் கலப்புமணம் செய்வதை வெகுவாய் எதிர்க்கின்றன. மனந்திரும்பாதவரோடு ''பரிசுத்த வித்து'' கலந்துவிடுவதைக் ''குற்றம், அக்கிரமம்'' என்றெல்லாம் வேதம் அழைக்கிறது (எஸ்றா 9:1-6). ஒரு விதவைகூட, அவள் விசுவாசியாயிருப்பாளானால், அவிசுவாசியை மணக்க அனுமதிக்கப்படவில்லை. ''கர்த்தருக்குட்பட்ட'' ஒருவனை மாத்திரம் அவள் மணக்கலாம் (1 கொரி 7:39).

காரணம் எதுவாயினும், அவிசுவாசியை மணக்க உங்கள் பெற்றோர் வற்புறுத்தினாலும், நீங்கள் திடமாய் மறுக்கலாம். பெற்றோருக்குக் கீழ்ப்படிதலும் ''கர்த்தருக்குள்''தான் (எபே 6:1). காதலில் ஒருவரோடு விழுந்துவிட்டால், அவனோ அவளோ மெய்யாய் மனந்திரும்பாத பட்சத்தில் அவ்வுறவை அறுத்தெறியுங்கள். திருமணத்திற்கான திருமுழுக்கு ஆபத்து!

ஒரு சில இணைப்புகளில் மனந்திரும்பாத கணவனோ மனைவியோ திருமணத்திற்குப்பின் இரட்சிக்கப்பட்டுவிடுவதுண்டு. ஆனால் இதிலிருந்து தெளிவாய் எதையும் போதிக்கமுடியாது. ''மனைவியானவளே, நீ உன் கணவனை இரட்சிப்பாயோ அல்லவோ உனக்கு எப்படித் தெரியும்? கணவனே, நீ உன் மனைவியை இரட்சிப்பாயோ அல்லவோ உனக்கு எப்படித் தெரியும்?'' (1 கொரி 7:16). விவாகம் விளையாட்டல்ல. ஏற்கனவே அவிசுவாசியை மணந்துவிட்டால், அவனுடைய, அவளுடைய இரட்சிப்புக்காக ஜெபித்து ஆண்டவரை விசுவாசிப்பதைவிட ஒன்றும் செய்வதற்கில்லை.

கிறிஸ்தவரல்லாத குடும்பங்களிலிருந்து வாலிபர் கன்னியர் இரட்சிக்கப்பட்டால், விசுவாசியான வாழ்க்கைத் துணையைக் கண்டுபிடிப்பதில் மிகவும் சிரமப்படுகின்றனர். ஜாதிப்பிசாசு இந்தியக் கிறிஸ்தவத்திலிருந்து இன்னும் விரட்டப்படவில்லை. கிறிஸ்தவரல்லா பின்னணியிலிருந்து வரும் விசுவாசிகளுக்கு மணமுடித்து வைக்க கிறிஸ்தவத் தலைவர்களும் மேய்ப்பர்களும் மிகுந்த சிரத்தையெடுக்க வேண்டும். கிறிஸ்தவக் குடும்பங்களிலுள்ள இரட்சிக்கப்பட்ட வாலிபரும் கன்னியரும் மற்ற பின்னணி விசுவாசிகளை மணம்புரிய முன்வரவேண்டும். கூடாதா? சிலவேளை இப்புது விசுவாசிகளை அவர்களது குடும்பத்தினர் அந்த சமுதாயத்தைவிட்டே துரத்திவிடுவர். இப்படிப்பட்டவர்களுக்குக் கனிவுணர்வுடன் ஆதரவு தருவது திருச்சபையின் கடமை.

# 84. மாற்றுக் கலாச்சாரத் திருமணங்களைப்பற்றி...?

இந்தியா போன்ற நாட்டில் வாலிபருக்கும் நங்கையருக்கும் திருப்பணி செய்துவருபவர்களில் ஒருவனாகிய நான் இக்கேள்வியைத் தவிர்க்க முடியாது; நேர்மையுடன் இதற்குப் பதில் சொல்லியாக வேண்டும். எண்ணற்ற கலாச்சாரங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் இந்தியா வெறுமனே ஒரு நாடல்ல; அது பல நாடுகளை உள்ளடக்கியது. இங்கு இனவுணர்வு செயல்படாத பகுதியென்று எதுவுமே கிடையாது. பொருத்தத்தை நிர்ணயிப்பதில் கலாச்சாரப் பின்னணி திருமணத் துறையில் வெகுவாய்க் கவனிக்கப்பட வேண்டியதாகும்.

நேர்முகமாகவோ மறைமுகமாகவோ திருமறை ஒருபோதும் மாற்றுக் கலாச்சாரத் திருமணங்களுக்கு எதிராய்ப் பேசுகிறதில்லை. விசுவாசியாயிருப்பவன் அவிசுவாசியை மணப்பதை மட்டுமே அது எதிர்த்துப் பேசுகிறது. ''அவிசுவாசியுடனே விசுவாசிக்குப் பங்கேது?'' என்று அது சவாலிடுகிறது (2 கொரி 6:14,15). ''கர்த்தருக்குட்பட்ட'' ஒருவரை மட்டுமே மணக்கலாம் என்பதே திருவசனம் விதிக்கும் ஒரே நிபந்தனையாகும். மற்றபடி தங்கள் ''இஷ்டப்படி'' நபரைத் தெரிந்தெடுக்க எவருக்கும் உரிமையளித்துள்ளது (1 கொரி 7:39ஆ). தனது மகன் ஈசாக்குக்குப் பெண் தேட கானானியரிடம் போகவேண்டாமென்று ஆபிரகாம் தனது ஊழியக்காரனை வேண்டிக்கொண்டது மாற்றுக் கலாச்சாரத் திருமணத்திற்கான எதிர்ப்பல்ல. தன்னை எந்த நாட்டிலிருந்து தேவன் வேறுபிரித்து அழைத்துக்கொண்டாரோ, அந்த நாட்டிற்குத் தனது மகன் திரும்பச் செல்லக்கூடாதென்பதே ஆபிரகாமின் கருத்து (ஆதி 24:1-19). மோசேயின் மாற்றுக் கலாச்சாரத் திருமணத்திற்கெதிராய்ப் பேசிய மிரியாம் மற்றும் ஆரோன் மீது தேவன் சினங்கொண்டார் (எண் 12:1,9). யோசேப்பின் மனைவி எபிரெயப் பெண்ணல்ல (ஆதி 41:45).

தனிப்பட்ட முறையில், மாற்றுக் கலாச்சாரத் திருமணங்களுக்கு நான் எதிரல்ல; அதே வேளையில் அவற்றை அதிகமாய் ஊக்குவிப்



பவனுமல்ல. ஏனெனில், பெண்ணும் மாப்பிள்ளையும் ஒரே கலாச்சாரப் பின்னணியிலிருந்து வந்தாலும், அறிவு, ஆன்மீகம், குணாதிசயம், இப்படிப் பல்வேறு துறைகளிலுள்ள வேறுபாடுகளை அவர்கள் சமாளித்துச் சென்றால்தான் மணவாழ்வு வெற்றியாகும். கலாச்சாரத்திலும் வேறுபாடு என்றால் அது கூடுதல் அழுத்தம் உண்டாக்கும். யூதனென்றும் கிரேக்கனென்றும் இல்லையென்று வேதம் சொல்லும்போது அது இரட்சிப்பையும் தேவனுக்குமுன் நமது நிலையையும் குறிப்பிடுகிறது. யூதனைவிட கிரேக்கன் உயர்குலத்தவனல்ல; கிரேக்கனைவிட யூதன் உயர்குலத்தவனல்ல என்பதுதான் இங்கு கருத்து. ஆனால் சமூக வாழ்வின் வேறுபாடுகள் நொடிப்பொழுதில் மறைந்துவிடாது. அதே வசனப்பகுதியில் கிறிஸ்துவுக்குள் ''ஆணென்றும் பெண்ணென்றும்'' இல்லை என்றும் வேதம் கூறுகிறது! (கலா 3:28). அப்படியானால் அதின் பொருள் என்னவென்பது தெளிவுதானே?

வெள்ளையர்கள் கருப்பர்களையும், கிழக்கத்தியர்கள் மேற்கத்தியர்களையும் மணமுடிக்கும்போது பல குடும்பங்களில் பிள்ளைகள் தாங்கள் எதைச் சேர்ந்தவர்களெனும் குழப்பத்துக்குள்ளாகின்றனர். பெண்ணின் தாய்மொழியும் மாப்பிள்ளையின் தாய்மொழியும் வேறு வேறு என்றால், பொதுவானதொரு மொழியில் அவர்கள் இருவரும் தேறினவர்களாயில்லாவிடில், நெஞ்சோடு நெஞ்சு பேசுவது எம்மொழியிலோ? நாகரீகமடைந்து முன்னேறியுள்ள சமுதாயத்திலுள்ள ஒருவன் மறைந்து வாழும் ஆதிவாசிப் பெண்ணொருத்தியை மணந்தால் தேனிலவு முடிந்தவுடன், இல்லை, அது முடியுமுன்னரே, எல்லாப் பிரச்னைகளும் துவங்கிவிடும்! தென்னிந்தியச் சமுதாயங்களில் பெரும்பாலும் பெண்ணை மாப்பிள்ளை தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிடுவான். வடகிழக்கு மாநிலங்களில் சில பகுதிகளில் பெண் வீட்டிற்கு மாப்பிள்ளை சென்று அங்கேயே இருந்து மாமியாருக்குக் கீழ்ப்படிந்திருக்கவேண்டும்!!! 18 முதல் 21 வயதிற்குட்பட்டவர்களிடையே சமீபத்தில் நடத்திய கருத்துக்கணிப்பீட்டின்படி 84 சதவீதத்தினர் தங்கள் குலத்திற்குள்ளேயே மணமுடிக்க விரும்புகின்றனர் என்பது ஆச்சரியமாயில்லையே! (*India Today*, 27 செப் 1999). இந்தியச் சமுதாயத்தில் 56 கோடியினரான இவ்வாலிபரின் மனப்பான்மையானது பழமைவாதமாய் அல்லது புதுமை வெறுப்பாய்க் காணலாம்; ஆனால் அதில் நடைமுறை ஞானமுண்டு.

முன்னோடி மிஷனரிப் பணியில் புதிய கள விசுவாசிகளிடையே கலப்பு மணங்களை நாங்கள் ஊக்குவிப்பதில்லை; அப்படிச் செய்தால் இனவாரியாக மக்கள் கூட்டங்கள் சுவிசேஷத்தைத் தழுவுவதற்குத் தடையுண்டாகும். அதே வேளையில், முதிர்ச்சியடைந்த கிறிஸ்தவரிடையேயும் பழம் சபைகளிலும் இனவெறி தலைவிரித்தாடுவது பெரும் சாபம். உயர்குல இந்துக் குடும்பங்களிலிருந்து வாலிபர்கள் கிறிஸ்துவிடம் வரும்போது அவர்களது குலங்களிலிருந்தே அவர்களுக்கு வாழ்க்கைத் துணைகளைக் கண்டுபிடிக்க நம்மாலியன்ற அத்தனையையும் செய்யவேண்டும். இல்லையேல் அவர்கள் குடும்பத்தினர் மிகவும் எதிர்ப்பாகி கிறிஸ்தவம் என்றாலே ஆகாது என்ற நிலைக்குள் வந்துவிடுவர். நற்செய்திப்பணியில் சமுதாயச் சீர்திருத்தம் முக்கியமானதல்ல. மற்றபடி தனது காலத்தில் பவுல் அடிமை வியாபாரத்திற்கெதிராய்ப் போராட்டம் நடத்தியிருப்பானே! மாறாக, அவன் யூதருக்கு யூதனைப் போலவும் யூதரல்லாதவருக்கு யூதரல்லாதவனைப் போலவும் மாறிக்கொண்டான் (1 கொரி 9:20,21).

மற்ற காரியங்களெல்லாம் பொருத்தமாயிருக்குமானால், ஜாதி வித்தியாசம் என்ற ஒரே காரணத்தினால் பெண்ணையோ மாப்பிள்ளையையோ வேண்டாமென்று சொல்வது கர்த்தருக்குப் பிரியமாயிருக்காது. ஒரு கலாச்சாரத்தைத் தாண்டிச் செல்லத் திடமாய் மறுப்பவர்கள் பல வேளைகளில் சொந்தத்திலேயே மணமுடித்துவிடுகின்றனர்; மருத்துவ ரீதியில் இது நன்றன்று. நான் பல கலப்புத் திருமணங்கள் நடத்தி வைத்திருக்கிறேன்; அவை நன்றாய்த்தானிருக்கின்றன. எங்கள் மகள் எக்குலத்திலிருந்தும் மணமகனைத் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம்; அது கர்த்தருடைய சித்தமாக மட்டும் இருக்கவேண்டுமென அவளுக்கு எனது மனைவியும் நானும் சுதந்திரம் கொடுத்தோம்.

''புறவினத்தாரிடமிருந்து எங்களை உமக்கு மணவாட்டியாய்த் தெரிந்துகொண்ட இயேசுவே, உமக்கு நன்றி!''



# 85. பெற்றோர் ஒழுங்குபண்ணும் திருமணங்கள்தான் சிறந்தவையா?

இந்தியக் கலாச்சாரத்தில் சமீபகாலம் வரை திருமணங்களைப் பொதுவாகப் பெற்றோரே ஒழுங்குபண்ணுவர். இப்பொழுதோ காதல் திருமணங்களின் எண்ணிக்கை பெருகிவருகிறது. பெற்றோர் திருமணங்களை ஒழுங்குபண்ணுகிறார்களென்பதை மேற்கத்திய நாடுகளிலுள்ளவர்களால் கற்பனை செய்தும் பார்க்கமுடியாது. கிழக்கத்தியக் கலாச்சாரம் இறுக்கமானதெனக் கருதப்பட்டாலும், இங்குதான் விவாகரத்து குறைவு, குடும்பப் பிணைப்புகள் அதிக வலுவானவை. இந்தக் காரியத்தில் நவீன காலத்து வாலிபர் குழம்பிப்போயிருக்கின்றனர்.

பெரும்பாலும் பெற்றோராலேயே திருமணங்கள் ஒழுங்குபடுத்தப்படும் மத்திய கிழக்குக் கலாச்சாரத்திலேயே திருமறை எழுதப்பட்டது. ஆதாம் ஏவாளுக்குப் படைப்பின் ஆண்டவரே பெற்றோராயிருந்தார்; அவரே ஆதாமுக்குப் பெண் கொண்டுவந்தார் (ஆதி 2:22). தனது மகன் ஈசாக்குக்குப் பெண் தேடும் முயற்சியைத் துவக்கியது ஆபிரகாமே (ஆதி 24:1-4). காதல் திருமணங்களும் அக்காலத்தில் இல்லாமலில்லை; யாக்கோபு ஓர் எடுத்துக்காட்டு (ஆதி 29:18-20).

பெற்றோரால் பெண் அல்லது மாப்பிள்ளை தெரிந்தெடுக்கப்படும்போது அவர்களது ஞானமும் அனுபவமும் மிகவும் சாதகமாகின்றன. தங்கள் மகன்களையோ, மகள்களையோ தாங்கள் தெரிந்தெடுத்ததையே ஏற்றுக்கொள்ளவேண்டுமென வற்புறுத்தாதவரைக்கும் இம்முறையை வரவேற்கவேண்டும். பழங்காலங்களில்கூட, பெற்றோர் தாங்கள் குறிப்படும் நபரை ஏற்கவோ மறுக்கவோ பிள்ளைகளுக்கு முழுச் சுதந்திரம் கொடுத்திருந்தனர். இந்திய இல்லங்கள் சிலவற்றில், படித்த பெண்களுக்குக்கூட, இவ்வுரிமை கிடையாது. இது தவறு. ஈசாக்குக்கு ரெபேக்காளை மணமுடிக்கக் கொண்டு போய்விடவேண்டுமென ஆபிரகாமின் வேலைக்காரன் துடியாய்த் துடித்தான். ஆனால் அவளது அண்ணனும் அம்மாவுமோ, ''பெண்ணை அழைத்து அவள் வாய்ப்பிறப்பைக் கேட்போம்'' என்றனர் (ஆதி 24:56,57).

தங்களது குமாரர் குமாரத்திகள் தாங்கள் சொன்னவரையே மணக்க வேண்டுமென, ''பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள்'' என்ற வசனத்தைப் பெற்றோர் மேற்கோள் காட்டக்கூடாது (எபே 6:1). அவர்கள் சொல்லலாம்... ஊக்குவிக்கலாம்... ஆனால் ஒருபோதும் கட்டாயப்படுத்தவே கூடாது. மண வயதிலிருக்கும் மகனோ மகளோ சிறு குழந்தையல்ல; வயது வந்த அவர்களே தெரிந்தெடுப்பைக் குறித்த முடிவான தீர்மானத்திற்கு முழுப்பொறுப்பு எடுக்கவேண்டும். வேதத்தின் இரு ஏற்பாடுகளும் இத்தத்துவத்தையே கூறுகின்றன (1 கொரி 7:39; எண் 36:6).

காதலிப்பது பாவமல்ல; ஆனால் கண்டவுடன் காதல் பேராபத்து. மெதுவாய்ச் செல்லுங்கள். நன்மை தீமைகளை சிந்தித்துப்பாருங்கள். உங்கள் பெற்றோர், நம்பத்தகுந்த பெரியோர், மூத்த கிறிஸ்தவர் ஆகியோருடன் கலந்தாலோசிக்குமுன் வாக்கு கொடுத்துவிடாதீர்கள். காரியத்தைக் கர்த்தரிடம் ஒப்படைத்து கொஞ்சக்காலம் அவருக்கு முன் காத்திருங்கள். இதைக்குறித்து உங்கள் இருதயத்தில் அமைதியும் சமாதானமும் இருக்கிறதாவெனப் பாருங்கள். நீங்கள் திறந்த மனதுடனிருந்தால், உறுதிப்பாடுகளுடன் தேவன் உங்களை வழி நடத்துவார். ஏதோவொரு காரணத்தினால் உங்கள் பெற்றோர் மறுத்தால், ஆனால் இது தேவசித்தம்தான் என உங்களுக்குத் தெரிந்தால், நேரமெடுத்து உங்கள் பெற்றோர் ஏற்றுக்கொள்வதற்கு ஆனதெல்லாம் செய்துபாருங்கள். பெற்றோரின் ஆசி அருமையானது. இந்தியக் கலாச்சாரத்தில் திருமணமென்பது இரு நபர்களை மட்டுமல்ல, இரு குடும்பங்களைச் சேர்க்கிறதென்பதை மறந்துவிடாதீர்கள். தேவையற்ற குழப்பங்களைத் தவிர்த்திடுங்கள்.

காதல் திருமணங்கள் இந்தியாவில் பெருகிக்கொண்டிருந்தாலும், சில பெரிய நகர்களில் எடுக்கப்பட்ட புள்ளிவிபரப்படி, ஏறத்தாழ 80 சதவீத வாலிபர், நங்கையர் தங்களுக்கு வாழ்க்கைத் துணையைப் பெற்றோர் தெரிந்தெடுக்கவே விரும்புகின்றனராம். இது ஊக்கந்தருவதாயிருக்கிறது. ஆனாலும், ஒரேவிதமாய் இரு வாலிபர் சிந்திப்பதில்லை. ஒரே குடும்பத்திற்குள்ளேயே பிள்ளைக்குப் பிள்ளை அவ்வளவு வேறுபடும். அரசன் சவுலுக்கு மேராப், மீகாள் என்று இரு குமாரத்திகள் இருந்தனர். மேராப்புக்குத் திருமணம் ஒழுங்குபண்ணியது பெற்றோர்; அடுத்தவளுக்கோ காதல் மணம் (1 சாமு 18:19,20).



முடிவாக, எனது சொந்தக் கருத்தைக் கூறுகிறேன். வளர்ந்த தங்கள் மகன்கள் மகள்களுடன் பெற்றோர் உட்கார்ந்து அவர்களே தங்கள் வாழ்க்கைத் துணையைத் தெரிந்தெடுத்துக்கொள்ள விரும்புகிறார்களா, அல்லது பெற்றோர் தெரிந்தெடுத்துக்கொடுக்க விரும்புகிறார்களாவென்று கேட்கவேண்டும். முதல் முறையைப் பிள்ளைகள் விரும்பினால், பையனும் பெண்ணும் ஒருவருக்கொருவர் ஒப்பந்தத்திற்குள் வருமுன் துவக்கத்திலேயே பெற்றோருக்கு அதைத் தெரிவித்துவிடவேண்டுமென்ற ஒப்புதல் இருக்கவேண்டும். மணமகன் அல்லது மணமகளைப் பெற்றோரே தெரிந்தெடுக்க பிள்ளைகள் விரும்பினால், பிள்ளைகளது முழு விருப்பமின்றி அக்காரியத்தில் அடியெடுத்து வைக்கமாட்டோமென்று பிள்ளைகளுக்குப் பெற்றோர் உறுதியளிக்கவேண்டும். தெரிந்தெடுப்பது யாரென்றாலும், அவசரப்பட்டு மணமுடிப்பவர் நிதானமாய் மனமடிவர்!

(எனது மனைவி எழுதியுள்ள *''வாலிபர் உலகம்''* எனும் நூலிலுள்ள 7ஆம் அத்தியாயத்தில் இப்பொருள் இன்னும் விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளது.)

## 86. மணமகள் மூத்தவளாயிருக்கலாமா?

ஆதாமுக்கு ஏவாள் இளையவள்! மனைவியைவிடக் கணவன் மூத்தவனாயிருக்கும்போது அவனது தலைமையும், அவளது கீழ்ப்படிதலும் இயல்பாகவே இலகுவாகிவிடுகின்றன. ஆனால் மனைவியும் அதே வயதுடையவளாய் அல்லது மூத்தவளாயிருந்தால், இருவரின் முதிர்ச்சியையும் அறிவுத் திறனையும் கல்வியையும் பொறுத்தே இருவருக்கிடையில் நல்ல உறவு இருக்கமுடியும்.

கணவன்-மனைவி தாம்பத்திய உறவுக்கும் வயது வித்தியாசம் முக்கியமானதொன்றாய்க் கணிக்கப்படுகிறது. இந்தியாவில் சராசரியாகப் பெண்களுக்கு 13 வயதில் மாதவிடாய் துவங்கி 45 வயதில் அது நின்றுவிடுகிறது. மாதவிடாய் நின்றபின் கொஞ்சங்கொஞ்சமாய்ப் பாலுறவு விருப்பங்கள் குறையத் துவங்குகின்றன. பையன்கள் பொதுவாக 14ஆம் வயதில் பருவமடைகிறார்கள். 50 வயதைத் தாண்டும்போது ஆண்கள் பலருக்குப் பாலுறவு வீரியம் தணியத்

துவங்குகிறது. எனவே ஏறத்தாழ ஐந்து வருட வயது வித்தியாசம் விரும்பத்தக்கது எனக் கருதப்படுகிறது.

ஆண்கள் பொதுவாக 25 முதல் 30 வயதுக்குள்ளும் பெண்கள் 20இலிருந்து 25க்குள்ளும் மணமுடிக்கிறார்கள். குழந்தை பெற்றெடுப்பு போன்ற கடினமான அனுபவங்களின் வழியாய்ச் செல்லுவதால் பெண்கள் ஆண்களைவிடச் சீக்கிரம் வயது சென்றவர்களாய்க் காணப்படுகின்றனர். 35 வயதிற்குமேல் பிள்ளைப்பேறு உசிதமல்ல என்றே மருத்துவத் துறையும் கூறுகிறது.

பெற்றோரால் நியமிக்கப்படும் திருமணங்களின் எண்ணிக்கை குறைந்துவரும் இக்காலத்தில் பையன்களும் பெண்களும் தங்களுக்கு ஜோடிகளை கல்லூரி வளாகங்களிலும் தங்கள் வயது நண்பர்களிடையேயும் தெரிந்து கொள்கின்றனர். பழங்காலம் போலில்லாது, பெண்களும் 17 வயதிற்குப்பின் ஐந்து முதல் ஏழு ஆண்டுகள் கல்லூரியில் செலவழிக்கின்றனர். இவ்விதச் சமூக மாற்றங்களினால் தம்பதியருக்கிடையேயுள்ள வயது வித்தியாசம் குறைந்துகொண்டே வருகிறது.

தன்னைவிட மூத்தவளை மணந்துகொள்ள வேதம் வெளிப்படையாய் எத்தடையும் விதிக்கவில்லை. வாரிசு வேண்டுமென்பதற்காக ஒரு கணவனின் இளைய சகோதரர்கள் அவனது விதவையை மணப்பது சகஜம். ஒரு சமயம் ஒருவனது விதவையை அவனது ஆறாவது இளைய சகோதரன் மணந்தான்! (மத் 22:24-26).

இந்தியாவிலுள்ள சில வட்டாரங்களில் வழக்கத்தின்படியான பாரம்பரியக் கலியாணம் ஒன்று நடத்தவேண்டுமானால் அந்தப் பெண்ணும் சில ஆண்டுகள் சம்பாதித்துத் தனது தந்தையின் சேமிப்பைக் கூட்டவேண்டும். தங்களது சமுதாயத்திலுள்ள கட்டுப்பாட்டுப் பிரச்னைகளினாலும், கிறிஸ்தவப் பையன்கள் ஒன்று சீக்கிரம் மணமுடித்துவிடுகிறார்கள்; அல்லது தங்களைவிட மூத்த புறமத விசுவாசியான பெண்களை மணக்க விரும்பாததாலும், புறமத விசுவாசிப் பெண்கள் அநேகரது திருமணங்கள் அளவுக்குமீறிப் பிந்திக்கொண்டே போகின்றன. இப்படிப்பட்ட சூழல்களில் கிறிஸ்தவப் பையன்கள் வயது வித்தியாசம் என்பதைச் சற்றுத் தளர்த்திக்கொடுக்கலாம். எல்லாமே சரியாயிருப்பதுதான் மிகச் சிறந்தது என்று சொல்வதற்கில்லை.



## 87. திருமணங்களில் ரொக்கம் வாங்கலாமா?

மணமகனின் பெற்றோர் மணமகள் வீட்டாரிடமிருந்து பெருந்தொகைகளை நிபந்தனையாய் வாங்கும் பழக்கமானது நியாயமான குடிமகன் எவனும் உத்தமக் கிறிஸ்தவன் எவனும் எதிர்க்கவேண்டிய சமூகத் தீங்காகும். ரொக்கத்திற்கெதிரான அரசியல் சட்டம் அமுலாக்கப்பட்டும் இன்னும் இக்கலாச்சாரம் ஒழிந்தபாடில்லை. கணவன் மாரும் அவர் தம் வீட்டாரும் பணம் பணம் என்று படுத்தும் பாடுகளைத் தாங்கமுடியாது தங்களைத் தீக்கொளுத்திக்கொள்ளும் பெண்களைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் நிறையவுண்டு. இம்முக்கியமான காரியத்திற்குக் கிறிஸ்தவர்களின் பதிலென்ன?

அக்காலத்து மத்திய கிழக்கு நாடுகளில் மணமகளின் தகப்பனாருக்கு மணமகன் ஒரு பரிசம் கொடுக்கவேண்டும் (ஆதி 34:12). ''ரொக்கம்'' (dowry) என்ற சொல் இவ்விதம் முதலாவது ''பெண்ணின் விலை'' என்றே பொருள்பட்டது. இன்றோ அது மாப்பிள்ளையின் விலையாகிவிட்டது! பெண்ணிற்கான தொகை எப்பொழுதுமே பணமாய்த்தான் கொடுக்கப்பட்டதென்றில்லை. லாபானின் மகள் ராகேலை மணமுடிக்க யாக்கோபு அவனிடம் ஏழாண்டு வேலை செய்தான் (ஆதி 29:18). தாவீது நூறு பெலிஸ்தியரைக் கொன்றுவிட்டான் என்ற நிரூபணம் தவிர தனது மகளை மணக்க தாவீது வேறே பரிசம் எதுவும் தரவேண்டியதில்லையெனச் சவுல் கூறினான் (1 சாமு 18:25). பெண்ணின் தகப்பனும் அவளுக்கு வெகுமதிகள் கொடுத்தான். அவற்றை அவள் தான் புகுந்த வீட்டிற்குக் கொண்டு வந்தாள். லாபான் தனது மகள்களுக்கு வேலைக்காரிகளைக் கொடுத்தான் (ஆதி 29: 24,29). காலேப் தனது மகளுக்கு வயலையும் நீரூற்றுகளையும் கொடுத்தான் (யோசு 15:24:53). கிறிஸ்து தமது மணவாட்டியாகிய சபையை நேசித்து அவளுக்குத் தம்மையே கொடுத்துவிட்டார் (எபே 5:25). கிறிஸ்துவாகிய மணவாளனை நமக்குத் தந்துவிட்ட தந்தையாகிய கடவுள் நன்மையான வேறெதையும் நமக்கு மறுப்பதில்லை (ரோ 8:32).

மணமுடிப்பில் பணப்பேச்சு பெரிதாயிருக்குமானால் எல்லா வகைத் தீங்குகளும் உள்ளே நுழைந்துவிடும். ''காசேதான் கடவுளடா''

எனும் உலகப் போக்கிற்குக் கிறிஸ்தவத் திருமணங்களில் இடமே யிருக்கக்கூடாது. திருமணச் சந்தையில் பெற்றோரது வற்புறுத்தலுக் குப் பலியான கிறிஸ்தவ வாலிபர் பலருக்கு நிறையப் பொன் கிடைத்து விட்டது; ஆனால் நல்ல பெண் கிடைக்கவில்லை. பணமோ மணமோ அல்ல, குணமே நிலைக்கும் (நீதி 31:30). பெற்றோருக்குமேல் பிடிவாதமாயிருக்க வாலிபருக்கு முதுகெலும்பு தேவை. பெற்றோர் மேலேயே எல்லாப் பழியையும் சுமத்துவது ஆண்மையல்ல.

சில வட்டாரங்களில் பெற்றோரின் சொத்தில் பெரும்பகுதி மகன் களுக்கே கொடுக்கப்படுகிறது; மகள்கள் மாற்றாந்தாய்ப் பிள்ளைகள் போலவே நடத்தப்படுகின்றனர். இதுவும் வேதத் தத்துவங்களுக்கும் சமவுரிமைச் சட்டத்திற்கும் எதிரானது. மகன்களையும் மகள்களையும் பெற்றோர் ஒன்றுபோல் நடத்துவார்களெனில், ரொக்க ஒழிப்பு தீவிர மடையும்.

எனது மனைவியும் நானும் ரொக்கம் கொடுக்கல் வாங்கல் பழக் கத்திற்கு எதிரானவர்கள். எங்கள் திருமணம் இதற்கொரு சாட்சியா யிருக்கவேண்டுமென விரும்பினோம். ஆனால் நான் படிப்பை முடித்த அதே மாதத்தில் அவளை எனக்குப் பேசினார்கள். அரசின் கல்வியுதவிக் கடன் திட்டத்தில் நான் படித்துமுடித்திருந்தேன்; பெற் றோரிடம் சேமிப்பு என்று எதுவும் கிடையாது. எனவே, ‘‘கொஞ்சக் காலம் பொறுத்திருக்க முடியுமா? அவன் இன்னும் வேலையிலேயே சேரவில்லை. அவனுக்குக் கல்யாண சூட் தைக்கவே காசில்லையே’’ என எனது தந்தை அவளது பெற்றோரிடம் கேட்டார். அதற்கு அவள் தந்தை, ‘‘எங்களுக்குத் தேவை உங்கள் மகன்தானே ஒழிய வேலை யல்ல’’ என்றார். திருமணச் செலவுகளுக்காய் ரூ. 20,000/- என் தந் தையிடம் முன்வந்து கொடுத்தார். பொறியியலில் முதல் மதிப்பெண் களுடன் முதுநிலைப்பட்டம் பெற்ற ஒருவனுக்குப் பல இலட்சங்கள் கொடுக்கப் பலர் காத்திருந்த அந்நாட்களில் இச்சிறு தொகையில் திருப்தியடைந்த என் பெற்றோருக்காய்த் தேவனைத் துதிக்கிறேன். ஆனாலும் இந்தக் காரியம் எனக்குப் பிடிக்கவில்லை. திருமணம் முடிந்ததும் எனது மாமனாரிடம், ‘‘நான் வேலை பார்த்துச் சேமித்து அப்பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்.’’ என்றேன். அவ ரோ, ‘‘அத்தொகை பெரியதுமல்ல; வற்புறுத்திக் கேட்கப்பட்ட ரொக்க முமல்ல. திருமணச் செலவுகளுக்காய் இதற்கும் குறைவாய் உங்கள்



பெற்றோருக்கு நான் உதவியிருக்க முடியாது. நீங்கள் ஒன்றும் நினைக் காமல் சுத்த மனச்சாட்சியோடு செல்லலாம்’’ என்று பதிலுரைத்தார்.

லேமென்ஸ் இவாஞ்சலிக்கல் ஃபெல்லேஷிப்பை (LEF) நிறுவிய சகோதரன் N.டேனியல் அவர்கள் 1950ஆம் ஆண்டுகளில் தனது மனந்திரும்புதலின் செய்திகளில் ரொக்கம் கொடுக்கல் வாங்கலை வெகுவாய்க் கண்டித்தார். அதற்குப் பிரதிபலனாகக் கணவன்மார் பலர் தேவனோடும் மனிதரோடும் ஒப்புரவாகும்படித் தங்கள் மாம னார்களுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள், அல்லது காரியத்தைச் சரிசெய்துவிட்டார்கள். இன்றையப் பிரசங்க பீடங் களிலோ சமூகத் தீங்குகள் கண்டிக்கப்படுவதேயில்லை. மாறாக, அதிலும் தங்களுக்குப் பத்திலொன்று கிடைக்கும்படி ரொக்கப் பணத்தை ஜெபித்து ஆசீர்வதிக்கும் சபை மேய்ப்பர்கள் உண்டு. வெட்கம்!

இதுதான் வழக்கம் என்று நிற்காது, வசதியுள்ள குடும்பம் அடுத்த குடும்பத்திற்கு உதவித் திருமணத்தைச் சிறப்பாய் நடத்தச் செய்ய வேண்டும். எளிய குடும்பத்தைக் கடனுக்குள்ளாக்குவது கிறிஸ்தவ மரபன்று. பூமிக்கு உப்பாகிய கிறிஸ்தவர்கள் முன்மாதிரிகளாயிரா விடில் வேறு யார்தான் சமுதாயத்தைச் சீர்ப்படுத்தமுடியும்?

## 88. குடும்பக் கட்டுப்பாடு தவறா?

குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் நவீன காலத்தில் தோன்றியது. எனவே இது குறித்து நேரடிப் போதனையை வேதத்தில் காணமுடி யாது. ஆனால் பிள்ளைகளைப் பெற்றெடுப்பது குறித்து வேதத் திலுள்ள பொதுவான தாற்பாரியங்களைத் தொகுத்து இன்றையச் சூழலுக்கேற்ற ஆலோசனையைப் பெற்றுக்கொள்ளலாம்.

பலுகிப் பெருகி பூமியை நிரப்பும்படி தேவன் ஆதாம் ஏவாளுக்குச் சொன்னார் (ஆதி 1:28). பூமியில் மனிதரில்லாதபோது முதல் தம்பதி யருக்குத் தரப்பட்ட குறிப்பான கட்டளையாகும் இது. இன்றோ இந்தியா போன்ற நாடுகளில் மக்கள் தொகை ஏற்கனவே நிரம்பி

வழிகிறது! மக்கள் பெருக்கத்தைக் குறைப்பதிலும், அதற்குச் சம்பந்தப்பட்ட பிரச்னைகளைத் தவிர்ப்பதிலும் அரசோடு ஒத்துழைக்கும் பொறுப்பு மற்ற குடிமக்களைப் போன்று கிறிஸ்தவருக்கும் உண்டு.

ஒரு கோபுரத்தைக் கட்டுமுன்பும், ஓர் எதிரிக்கெதிராக போர் தொடுக்குமுன்பும், கணக்குப் பார்க்கவேண்டுமென இயேசு போதித்துள்ளார் (லூக் 14:28-31). அப்படியே பிள்ளைகளைப் பெற்றெடுக்குமுன்பும் கணக்குப் பார்க்கவேண்டாமோ? குடும்பத்தின் அளவைத் திட்டமிடும்போது தம்பதியர் ஒவ்வொருவரும் குறைந்தது மூன்று காரியங்களைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்—

□ முதலாவது, உடல்நடலம். பலவீன பாண்டமாகிய மனைவியின் உடல் நலனைக் கணவன் மிக முக்கியமானதாகக் கருதவேண்டும் (1 பேது 3:7). அவனுக்கு அது பெரும் இன்பம்; அவளுக்கோ பெரும் இன்னல் (ஆதி 3:16). இரண்டு மூன்று குழந்தைகளுக்கு மேல் பெற்றெடுக்கும் இன்றையப் பெண்களில் பெரும்பாலானோரின் உடல்நிலை நிரந்தரமாகப் பாதிக்கப்பட்டுவிடுகிறது. மருத்துவ ஆலோசனைகளை மதிக்கவேண்டும்.

□ அடுத்து, பொருளாதாரம். நம்மில் பெரும்பாலானோர் நடுத்தர அல்லது குறைந்த வருவாய் வகுப்பினைச் சேர்ந்தவர்கள். இது அகவிலையின் காலம். பிள்ளைகள் அதிகமானால் ஒவ்வொரு பிள்ளைக்குரிய பங்கும் குறையும் (2 கொரி 12:14). ‘‘கர்த்தர் பார்த்துக்கொள்வார்’’ என்று தங்கள் பொருளாதார நிலைக்கு மிஞ்சி பிள்ளைகளைப் பெறுவது பொறுப்பின்மையேயன்றி வேறல்ல.

□ மூன்றாவது, நேரம். உலகம் விரைவாகச் சென்றுகொண்டிருக்கிறது. செலவுகளைச் சந்திக்கவேண்டுமானால், கணவனும் மனைவியும் இல்லத்திலும் வெளியிலும் பல மணிநேரங்கள் உழைக்கவேண்டியதிருக்கிறது (நீதி 31:13-24). தந்தை, தாய் இருவரும் ஒவ்வொரு குழந்தையோடும் போதுமான நேரம் புத்துணர்வோடு செலவழிக்காவிடில், அவர்கள் பெற்றோர் பொறுப்பில் தவறுகின்றனர் (1 தீமோ 3:4,12; தீத் 1:6; 2:4,5). பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம் என்பதும் இவர்கள் பந்தியைச் சுற்றிலும் ஒலிவ மரக்கன்றுகள் போலிருப்பார்கள் என்பதும் உண்மைதான்! (சங் 128:3). ஆனால் தந்தைக்கு



அப்பிள்ளைகளோடு சாவகாசமாய் பந்தியில் உட்கார்ந்து உறவாட நேரம் கிடைக்கிறதா? இல்லையேல், மேற்கண்ட வசனங்களைச் சொல்லவேண்டாம் — தயவுசெய்து!

மணவாழ்வு வேண்டாமென்று இறையரசுக்காகத் தாங்களாகவே தனி வாழ்வைத் தெரிந்துகொள்வோருண்டென இயேசுவும் பவுலும் குறிப்பிட்டனர் (மத் 19:12; 1 கொரி 7:32-35). அப்படியே, இறையரசுக்குக் கூடுதல் நேரமும், காலமும், பலமும் செலவழிக்கலாமென்று குடும்பத்தின் அளவைச் சிறியதாய் வைத்துக்கொள்வோரும் இருக்கலாமே. கூடாதா?

கருத்தடைக்கு எதிராக எடுத்தாளப்படும் வசனங்களில் ஒன்று ஆதியாகமம் 38:8-10 ஆகும். தேவன் ஓனானிடம் கோபப்பட்டது அவன் தன் வித்தைத் தரையிலே விழவிட்டதால் அல்ல, கணவனின் சகோதரன் என்ற வகையில் அவனது பொறுப்பில் தவறினதாலேயே (உபா 25:5-10). ஓனான் மாய்மாலம்பண்ணித் தாமாரையும் யூதாவையும் ஏமாற்றினான்.

குடும்பக் கட்டுப்பாட்டின் செயற்கை முறைகளை எதிர்த்து ஆனால் இயற்கை முறைகளைக் கையாளுவோருமுண்டு. இதுவும் கருத்தடைதானே! மட்டுமல்ல, இரண்டாவது வகை முறையினால் மனநிலைப் பிரச்னைகள் உருவாகும். இன்னும் சிலர் குடும்பக் கட்டுப்பாட்டை முழு மூச்சாய் எதிர்ப்பார்கள்; ஆனால் அதிகம் பெற்றபின் ஞானமடைவார்கள்!

கருத்தடைக்கு எதிராக வேதத்தில் ஒன்றுமில்லை என்று நாம் சொல்லுகிற அதே வேளையில் கருச்சிதைப்பை ஒத்துக்கொள்ள முடியாது. கருவுற்றதும் அது உயிராகிவிடுகிறது.

குடும்பக் கட்டுப்பாட்டைக் குறித்து இங்கு சொல்லப்பட்டிருப்பதற்கு மாறான கருத்துள்ள அருமையான விசுவாசிகள், ஊழியர் பலருண்டு. அதை மதிக்கிறேன். வாக்குவாதங்களால் பக்திவிருத்தி கிடைப்பதில்லை. ஒவ்வொரு தம்பதியரும் தங்களுக்கு நலமானதை ஜெபத்துடன் தீர்மானித்துக்கொள்ளவேண்டும்.

# 89. குழந்தையின்மை சாபமா?

''பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம்'' (சங் 127:4). ஆனால் புரிந்துகொள்ளமுடியாத காரணங்களால் பக்தியுள்ள தம்பதியர் பலருக்குப் பிள்ளையில்லை.

பிறவிக் குருடனைக் கண்ட சீடர் இயேசுவிடம், ''யார் செய்த பாவம், இவனா இவன் பெற்றோரா?'' என்று வினவினர். ''அது இவன் செய்த பாவமுமல்ல, இவன் பெற்றோர் செய்த பாவமுமல்ல, தேவச் செயல்கள் இவனிடம் வெளிப்படும்படி இப்படிப் பிறந்தான்'' என்றார் இயேசு (யோ 9:1-3). குழந்தையில்லாத் தம்பதியர் குற்றவுணர்வுடையத் தேவையில்லை. கண் தெரியாமை, காது கேளாமை போல கருத்தரியாமையும் ஓர் உடற்குறைவேயன்றி வேறல்ல.

குழந்தையின்மைக்கு வேத எடுத்துக்காட்டுகளில் ஏராளம் குழந்தையற்றோருக்கு ஊக்கந்தருவதாய் உள்ளன. தேவன் அழைத்தபோது ஆபிரகாமுக்குப் பிள்ளையில்லை. அவனுக்கு ஒரு மகன் கிடைக்கும்வரை அவன் சாபத்துக்குள்ளிருந்தானென்று வேதம் எங்கும் குறிப்பிடவில்லை. தேவாசீர்வாதம் பெற்ற ஈசாக்கும் இருபதாண்டுகள் பிள்ளையில்லாதிருந்தான்.

குழந்தையில்லாத் தம்பதியர் சோர்ந்துபோகாது சாதகமான சில காரியங்களைச் செய்யவேண்டும். ஆபிரகாம், சாராள் போல விசுவாசித்துக்கொண்டேயிருங்கள் (ரோ 4:19-21; எபி 11:11). ராகேல், அன்னாள் போல ஜெபித்துக்கொண்டேயிருங்கள் (ஆதி 30:22; 1 சாமு 1:15). சகரியா, எலிசபெத்து போல தேவனோடு நடந்துகொண்டு அவரைச் சேவித்துக்கொண்டேயிருங்கள் (லூக்1:6-8). தேவன் தமது வேளையில், தமது வழியில் வாக்குகளை நிறைவேற்றுவார்.

கணவன் மனைவி இருவரும் மருத்துவப் பரிசோதனை செய்துகொள்ளவேண்டும். ஆனால் அதற்குமுன் ஒருவரையொருவர் குற்றஞ்சாட்டமாட்டோமென்று தீர்மானித்துக்கொள்ளுதல் அவசியம். மனைவியிடம்தான் குறைவு எனத் தெரியவந்தால், எல்கானா போல கணவன் அவளிடம் கூடுதல் பாசம் காட்டவேண்டும் (1 சாமு 1:5).



குறைவு கணவனிடமென்றால் மனைவியானவள் கணவன் மீது தனது மதிப்பு குறைவதில்லையென்று அவனுக்கு உறுதிகூறவேண்டும். கோபத்துக்கும் கசப்புக்கும் இடம் தராமல் எல்லாவற்றையும் ஜெபத்தில் ஊற்றிவிடுங்கள் (ஆதி 30:1,2; 1 சாமு 1:10).

மருத்துவ முறைப்படி சரிசெய்யமுடியாத நிலையென்றால், அற்புதத்திற்காய்த் தேவனை விசுவாசித்துக்கொண்டே, ஒரு குழந்தையைத் தத்தெடுக்கலாம். பெற்றால்தான் பிள்ளையா? காலந்தாழ்த்தக் கூடாது. பராமரிக்க ஓர் இல்லம் நாடும் வேண்டாக் குழந்தைகள் ஏராளம். பிள்ளையில்லாத் தம்பதியரைவிடப் பெற்றோரில்லா பிள்ளைகளே அதிகம். தூதர் போன்ற இச்சிறுவருக்கு உதவுவது தேவனைக் கனப்படுத்துவதாம் (மத் 18:10; மாற் 10:14). பிள்ளையொன்றைத் தத்தெடுத்தபின், விஞ்ஞான ரீதியில் உடலில் ஏற்படும் மாற்றங்களினாலோ அல்லது தேவன் அவர்களது செயலைக் கனப்படுத்துவதினாலோ, பலர் கருத்தரிக்கின்றனர். அது கூடுதல் ஆசீர்வாதந்தானே!

தத்தெடுக்கக் கணவனும் மனைவியும் ஒருமனப்பட முடியாவிடில், அவர்கள் நேரங்களைக் கூடுதலாக தேவ காரியங்களில் செலவிட்டு ஆன்மீகக் குழந்தைகளைப் பெற்றெடுக்கலாம் (ஏசா 54:1-4; கலா 4:27). தங்களது நிந்தையை நினைத்துப் புலம்பிக்கொண்டிருக்கத் தேவையில்லை. பிள்ளையில்லையா என்று ஒவ்வொருவரும் கேட்கும்போது ஈட்டி பாய்ந்தாற்போல்தான் இருக்கும். ஆனால் தேவ கிருபை போதும்.

இதோ, மலடிகள் பாக்கியவதிகளென்று சொல்லப்படும் நாட்கள் வரும்! (லூக் 23:29).

பகுதி ஏழு

# சமூக வாழ்வு



## 90. என் விரோதிகளை நேசிப்பது எப்படி?

கிறிஸ்தவனொருவனுக்கு விரோதிகளென்றால், பெரும்பாலும் சிலுவைக்கு விரோதிகளும், நற்செய்திப்பணியை எதிர்க்கிறவர்களுமே (மத் 5:44). ஆனால் சில வேளைகளில் தங்கள் விருப்பு, வெறுப்பு, சுபாவம் இவைகளையடுத்து நீங்கள் செய்பவை அல்லது உங்கள் செய்முறையை விரும்பாது உங்களைப் பகைப்போரும் இருக்கலாம். ஒரு சில சமயங்களில் இவ்வித மக்களோடு சமாதானமாயிருப்பது கூடாததாகவே போய்விடுகிறது. எனவேதான் வேதம் இப்படிச் சொல்லுகிறது: *''கூடுமானால்* உங்களாலான மட்டும் எல்லா மனிதரோடும் சமாதானமாயிருங்கள்'' (ரோ 12:18).

என்னை எதிர்க்கிற அல்லது வெறுக்கிறவர்களோடுள்ள எனது உறவை மேம்படுத்த கீழ்க்கண்ட வழிமுறைகள் எனக்குப் பயனளித்துள்ளன—

முதலாவது, அவர்கள்மீதும் உள்ள தேவன்பை எண்ணிப் பார்க்க வேண்டும். ''அவர் தீயோர் மீதும் நல்லோர் மீதும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளோர் மீதும் அநீதியுள்ளோர் மீதும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார்'' (மத் 5:45). ஒவ்வொருவரும் தேவனுக்கு அருமையானவர்கள். நல்லவன் அல்லது கெட்டவன் என்றழைக்கப்படும் ஒவ்வொருவருக்காகவும் கிறிஸ்து மரித்தார்.

இரண்டாவது, நம்மீது தேவன் எவ்வளவு பொறுமையாயிருக்கிறார் என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்: எத்தனைமுறை நாம் அவரை ஏமாற்றியும் அவர் நம்மை விட்டுவிடவில்லையே. இரக்கத்தில் செல்வந்தராகிய அவர், நாமும் பிறரைக் குறைந்தது ஏழெழுவது தடவையாவது மன்னிக்க எதிர்பார்க்கிறார்.

மூன்றாவது, நமது விரோதிகளுக்காக ஜெபிக்க வேண்டும் (மத் 5:44). ஜெப மண்ணில் அன்பு தழைத்தோங்கும். நம்மை வெறுக்கும் நபருக்காக ஜெபிக்கத் துவங்குகையில் அவரை நேசிப்பது எளிதாகிறது. என்னால் நேசிக்க முடியவில்லையேயென்று தேவனிடம்

அறிக்கையிட்டால், சாதாரணமாக நம்மால் முடியாத நிலையிலும் எதிர்ப்போரை நேசிக்க அவர் தமது ஆவியின் மூலம் தமதன்பை நம்மில் ஊற்றுவார்.

பிசாசைக்கூட சபிக்க தேவன் நம்மை அனுமதிக்கவில்லை (யூதா 9). எவரையும் சொல்லால் பழித்துவிடாதீர்கள். கசப்பான வேருக்கு இதயத்தில் இடம் கொடாதீர்கள். அது உங்களையும் பிறரையும் நாச மாக்கும் (எபி 12:14,15). பழிவாங்குதல் கர்த்தருக்குரியது. அந்த ஆயுதத்தை உங்கள் கையில் எடுக்காதீர்கள். அதனாலோயே நீங்க ளும் மடிவீர்கள் (மத் 26:52). உங்களைத் துன்புறுத்துவோருக்கு நன் மையொன்று செய்யத் தருணம் நோக்கியிருங்கள். வெற்றி உங்க ளுக்கே (ரோ 12:19-21).

''ஒருவனது வழிகள் கர்த்தருக்குப் பிரியமாயிருந்தால், அவனது சத்துருக்களும் அவனுடன் சமாதானமாகும்படிச் செய்வார்'' (நீதி 16:7).

## 91. வைபவங்களில் கொஞ்சம் குடித்துக்கொள்ளலாமா?

வெறிகொள்ளும் அளவுக்குத்தான் குடிக்கக்கூடாது என்று ஒரு வேளை அர்த்தப்படுத்தக்கூடிய எபேசியர் 5:18ஐக் குறிப்பிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன்!

மதுவைக்குறித்த ஒரு சில வசனங்களோடு துவங்குகிறேன். ''திராட்சரசம் பரியாசம் செய்யும், மதுபானம் அமளி பண்ணும்; அத னால் மயங்குகிற ஒருவனும் ஞானவானல்ல'' (நீதி 20:1). ''மதுபானம் இரத்த வருணமாயிருந்து, பாத்திரத்தில் பளபளப்பாய்த் தோன்றும் போது, நீ அதைப் பாராதே; அது மெதுவாய் இறங்கும். முடிவில் அது பாம்பைப்போல் கடிக்கும். விரியனைப்போல் தீண்டும்'' (நீதி 23:31,32).

சில நாடுகளில் சாதாரண உணவு வகைகளோடு மதுவும் பரிமாறப் படுவது உண்மைதான். ஆனால் அது எங்கே போய் முடிந்துள்ளது என்றும் நமக்குத் தெரியும். ஏதோ ஒரு சில வேளைகளில் குடித்ததே அநேகரைக் குடிக்கு அடிமையாக்கிவிட்டது. இதோ பவுலின் கோட் பாடு: ''எல்லாவற்றையும் அனுபவிக்க எனக்கு அதிகாரமுண்டு, ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது... எல்லாம் பக்திவிருத்தியை உண் டாக்காது... நான் ஒன்றிற்கும் அடிமைப்படமாட்டேன்'' (1 கொரி 6:12; 10:23).



பொல்லாங்காய்த் தோன்றுபவற்றை நாம் அகற்றிவிட வேண்டும் (1 தெச 5:22). ஆபத்தான துவக்கங்களுக்கு எச்சரிக்கை! முதலில் வெறுமனே அங்கு ''நடப்போம்,'' பின்பு அங்கு ''நிற்போம்,'' முடிவில் அங்கேயே ''உட்கார்ந்துவிடுவோம்'' (சங் 1:1). நாம் தீமோத்தே யுவைப்போல் இருக்கவேண்டும். அவன் திராட்சரசத்தை அறவே அகற்றினபடியாலல்லவோ அவனது பலவீனத்திற்காக மருந்துபோல் சற்று திராட்சரசம் சேர்த்துக்கொள்ளும்படி பவுல் எழுதவேண்டிய திருந்தது (1 தீமோ 5:23).

ஏதோ ஒருசில வேளைகளில் சிகரெட் குடிக்கலாமா என்றும் ஒரு கேள்வி எழலாம். அதற்கும் பதில் அதேதான். வேண்டாம்! ''புகைப் பது சுகத்திற்குக் கேடு'' என்று ஒவ்வொறு சிகரெட் பெட்டியிலும் அச்சடிக்கப்பட்டுள்ளதே. புகைப்பதும் குடிப்பதும் நம்மையும் பிற ரையும் பாதிக்கும். அவையிரண்டும் சமூக, ஆன்மீகத் தீங்குகளாம். அவைகளை நெருங்காதீர்கள்!

## 92. விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைச் சாப்பிடலாமா?

இந்தியரில் 80 சதவீதத்தினர் விக்கிரகங்களை வணங்குகின்றனர். இந்நாட்டில் கிறிஸ்தவர்கள் 3 சதவீதத்திற்கும் குறைவு. கிறிஸ்தவரல் லாதோரை, அதிலும் குறிப்பாகப் பெரும்பான்மையினரான இந்துக் களை, நண்பராக்கிக் கடவுளது அன்பின் செய்தியை அவர்களுக்குப் பகிர்ந்தளிக்கும்படி நாம் சவாலிடப்படுகிறோம். நாம் அழைக்கும் போது அவர்கள் மகிழ்ச்சியுடன் நமது பிறந்தநாள் கொண்டாட்டங்கள் அல்லது கிறிஸ்துமஸ் விருந்துகளில் கலந்துகொள்ளுகின்றனர். நாம் தேவனுக்கு நன்றி செலுத்திவிட்டு எல்லாருக்கும் பரிமாறும் உண வைச் சாப்பிடுவதில் அவர்களுக்குப் பிரச்னையில்லை. ஆனால் அவர்கள் நம்மைத் தங்கள் பண்டிகை விருந்துகளுக்கு அழைக்கும்

போதும் நமக்குப் பொங்கல் அல்லது இனிப்பு வகைகள் அனுப்பும் போதும் நாம் தயங்குகிறோம்; அது அவர்களைப் புண்படுத்துகிறது. உறவுப் பிரச்னை உருவாகிறது. சில விசுவாசிகள் எதையும் சாப்பிடு வார்கள்; மற்றவர்களுக்கோ தயக்கங்கள் உண்டு. இதைக் குறித்துத் திருமறை கூறுவதென்ன?

புதிய ஏற்பாட்டு நிருபங்கள் எழுதப்பட்ட காலத்தில் இன்றைய நிலைமைகள் போன்றவை இருந்தன. இளம் சபைகளுக்கு எழுதும் போது விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைச் சாப்பிடுவது குறித்த காரியம் முக்கிமானதொன்றாயிருந்தது. கொரிந்தியருக்குப் பவுல் எழு திய முதல் நிருபத்தில் இரண்டு முழு அத்தியாயங்களில் (8 & 10) இக்காரியத்தையே அவன் விவாதிக்கிறான். அவற்றைக் கவனமாய்ப் படியுங்கள். அவைகளிலிருந்து நாம் கற்பவை இதோ—

☐ சரியாய்ச் சொன்னால், விக்கிரகமானது ''ஒன்றுமில்லை'' (1 கொரி 8:4; ஏசா 37:19; எரே 16:20). எனவே விக்கிரகங்களுக்குப் படைக்கப்படும் எந்த ஆகாரமும் கறைப்பட்டுபோவதில்லை. ஆயி னும், விக்கிரகாராதனைக்காரர்களுக்கு அதில் தெய்வீக அர்த்த முண்டு. அவர்களது மனப்பான்மையைக் குறித்துப் பேசும்போது விக் கிரகங்களைப் பவுல் ''பேய்கள்'' என்றழைக்கிறான் (1 கொரி 10:20). இந்த அடையாளம் அவர்கள் மனதிலுண்டு. ஆகாரமானது விக்கிரகங் களுக்குப் படைக்கப்படும்போது அது புனிதமடைகிறதென்பது விக் கிரகாராதனைக்காரரின் விசுவாசம். இந்தப் பாணியில் அல்லது இந்தக் கண்ணோட்டத்தில் விக்கிரகாராதனைக்காரர் எவரும் படைக்கப்பட்ட ஆகாரத்தைக் கொடுத்தால் கிறிஸ்தவர் எவரும் அதை ஏற்றுக்கொள்ள முடியாது (1 கொரி 10:20,21,27). அதை ஒரு புன்முறுவலோடு, பண்பாக வாங்க மறுத்துவிடலாம். அவர்கள் இன்னும் வற்புறுத் தினால் அதைப் பெற்றுக்கொண்டு பின்னர் பட்டினியால் வாடும் யாராவது ஒருவருக்கு அமைதியாய்க் கொடுத்துவிடலாம்.

☐ விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட ஆகாரம் வழங்கப்படும் மூன்று இடங்களைப் பவுல் குறிப்படுகிறான் (அ) கோவில்கள் (ஆ) வீடுகள் (இ) கடைகள். ''விக்கிரகக் கோவிலுக்குள்'' எக்காரணத்தை யிட்டும் கிறிஸ்தவனொருவன் பந்தியிருக்க முடியாது (1 கொரி 8:10). வெளிப்படையான இச்செயல் கிறிஸ்துவை அவமானப்படுத்துவ தாகவும், விக்கிரகங்களை விட்டு உயிருள்ள தேவனிடம் திரும்பி



யுள்ள புது விசுவாசிகளை உற்சாகமிழக்கச் செய்வதாகவும் அமையும். ஆனால் விக்கிரகாராதனைக்காரர் ஒருவரின் வீட்டில் குடும்ப விருந்து ஒன்றிற்கு அழைக்கப்பட்டால் நாம் போய் ''ஒன்றையும் விசாரி யாமல்'' சாப்பிடலாம் (1 கொரி 10:27). உண்மை நண்பர் எவரும் பிலேயாமைப் போலவோ யேசபேலைப் போலவோ நமக்குக் கண்ணி வைக்கமாட்டார் (வெளி 2:14,20). அடுத்து, கடைகளில் விற்கப் படுகிறது வருகிறது. மிருகங்களை அறுக்குமுன் முகமதியர் ஓது வார்கள். உணவகங்கள் அல்லது கடைகளில் இந்துக்கள் இனிப்பு, கார வகைகளைச் செய்தவுடன் தேவர்கள் தேவதைகளின் படங் களுக்கு முன்தான் வைப்பார்கள். நாம் இதையெல்லாம்பற்றி ஒன்றும் நினைக்காமல், பூமியும் அதின் நிறைவும் கர்த்தருடையதானதால் ''விற்கப்படுகிற எதையும்... ஒன்றையும் விசாரிக்காமல்'' வாங்கிச் சாப்பிடலாம் (1 கொரி 10:25,26). படைப்பின்படி மிருகங்கள், பறவைகள், செடி கொடி மரங்கள் யாவும் ஆண்டவருக்குச் சொந்த மானவை; நாம் அவருக்குச் சொந்தமானவர்களானதால் அவை யாவும் நாம் அனுபவிக்கவே! எல்லாம் திருவசனத்தினாலும் துதி ஜெபத்தி னாலும் பரிசுத்தமாக்கப்படுகிறது (1 தீமோ 4:4,5).

☐ 1 கொரிந்தியர் 8,10 அத்தியாயங்களிலும் ரோமர் 14இலும் பவுல் போதிக்கும் அடிப்படைத் தத்துவம் என்னவென்றால், சத்தியத் தின் அறிவும் கிறிஸ்துவுக்குள்ளான சுயாதீனமும் நமது சகோதர சகோதரிகளின் ''பலவீன மனச்சாட்சியைப் புண்படுத்தாமலும்'' அவர் களுக்குத் ''தடுக்கலாய்'' இராதபடிக்கும் பார்த்துக்கொள்ளவேண்டும் (1 கொரி 8:9,12). நமக்கு பரிமாறப்படும் எந்த ஆகாரத்தையும் சாப்பிடுவதில், தீர்க்கமாய்ச் சொல்லின், எத்தவறுமில்லை. எனினும், நமது சகோதரனுக்கு ''இடறலுண்டாக்கி'' அவன் ''கெட்டுப்போக'' நாம் காரணமாயிருந்தால் அது பாவமே (1 கொரி 8:13,11). நாம் செய்யும் எதுவும் மற்றவர்களுக்கு இடையூறாயிருக்கக்கூடாது (1 கொரி 10:24,32,33; ரோ 14:14,15,21).

தொகுத்துக்கூறின்: சத்தியத்தைத் தளர்த்தி ஒத்துப்போகக்கூடாது; விக்கிரக வணக்க நண்பர்களை விரோதித்துவிடக்கூடாது; பலவீன விசுவாசிகளை அற்பமாயெண்ணக்கூடாது. 1 கொரிந்தியர் 10:32ஐப் ''பெயர்க்கிறிஸ்தவர்க்கும், கிறிஸ்தவரல்லாதவர்க்கும், மறுபடி பிறந்த கிறிஸ்தவர்க்கும் இடறலற்றவர்களாயிருங்கள்'' என்று விளக்க மொழி யாக்கம் செய்யலாம்!

# 93. விசுவாசிகள் திரைப்படம் பார்க்கலாமா?

இக்கேள்வி பல்லாண்டுகளுக்கு முன், ''கிறிஸ்தவர்கள் சினிமா தியேட்டருக்குப் போகலாமா?'' என்றிருந்தது. இதற்குச் சங்கீதம் 1:1ஐச் சுட்டிக்காட்டி கிறிஸ்தவப் பெரியோர்களும் பிரசங்கிமாரும் ''கூடவே கூடாது'' எனப் பதில் தந்தனர். ''பரியாசக்காரர் உட்காரும் இடத்தில்'' தேவ மக்களுக்கு என்ன வேலை என்பதே விவாதமாயிருந்தது. இன்றோ நிலை முற்றிலும் மாறிவிட்டது. திரைப்படம் பார்க்கத் திரையரங்கத்திற்குப் ''போக'' வேண்டியதில்லை; திரையரங்கமே நமது வீடுகளுக்குள் ''வந்து'' விட்டது. தொலைக்காட்சி மற்றும் கணினிப் புரட்சியானது சூழ்நிலையை அப்படியே மாற்றிவிட்டது.

திரையரங்கங்களுக்குச் செல்வது பயங்கரமான பாவம் எனக் கருதப்பட்ட குடும்பத்திலேயே நான் வளர்க்கப்பட்டேன். சினிமாதான் ''சின்-மா'' (Sin-ma); அதாவது பாவங்களுக்கெல்லாம் தாய் என்றார்கள் சபைத்தலைவர்கள். ஆயினும், எனது தம்பியும் நானும் ஆண்டுக்கு ஒரு படத்திற்காவது அனுப்பும்படி அம்மாவை அரிப்போம். விருப்பமின்றி அவர்களும் சம்மதித்து தரை டிக்கட்டிற்கு நாலணா கொடுப்பார்கள். படம் முடிந்து வீடு திரும்பியதும், நாங்கள் தியேட்டரிலிருந்த மூன்று அல்லது நான்கு மணிநேரம் ஆபாசமான காட்சிகளால் எங்கள் மனது கறைப்பட்டுவிடக்கூடாதென்று எவ்விதம் அவர்கள் முழங்காலிலேயே கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தார்களென்று அம்மா சொல்லுவார்கள். அந்த நாட்களை நான் பின்திரும்பிப் பார்க்குங்கால், அவ்விதக் கண்டிப்பான வளர்ப்பிற்காய் இன்று வருந்தவில்லை.

திரைப்படம் எதையும் பார்ப்பதேயில்லை என்று மறுபடி பிறந்த வாலிபர் இன்று உறுதியாய்த் தீர்மானிப்பார்களானால் அது நன்றே. அதினால் அவர்கள் வாழ்க்கையில் எதையும் இழந்துவிடமாட்டார்கள். அதே சமயத்தில், திரைப்படங்கள் அத்தனையையும் ஒட்டுமொத்தமாய்க் கண்டனம் செய்வதும் சரியல்ல. சன்மார்க்கம், ஒழுங்குநெறிகள், சமுதாயம், அரசியல், புரட்சிகரத் தத்துவங்கள் மற்றும் கலாச்



சாரத்தைத் தழுவிய உயரிய கருத்துக்களைச் சீரிய முறையில் வழங்கும் படங்களும் உண்டு. இவ்விதப் படங்கள் நமது சிந்தனைக்கு உணவூட்டி நமக்குச் சவாலிடுகின்றன. அர்த்தமற்ற பாரம்பரியங்கள், சடங்காச்சாரங்கள் மற்றும் சம்பிரதாயங்கள் இக்கதைகளில் தூக்கியெறியப்படுகின்றன. பண்டைக்காலக் குடும்ப நன்னெறிகள் மற்றும் காலம் போற்றும் தத்துவங்களைச் சமுதாயத்திற்குள் திரும்பக் கொண்டுவரும் நோக்கோடு படங்கள் தயாரிப்போருமுண்டு. *''ஜோனி''* என்ற கிறிஸ்தவ ஆங்கிலப் படமும், *''மயூரி''* போன்ற பொதுவான படங்களும் ஊனமுற்றோரை உற்சாகப்படுத்தி அங்கவீனரை அயராது முயற்சிக்க ஊக்குவிக்கின்றன. இவ்விதப் படங்களைப் பார்க்க மாணவ மாணவியரை ஆசிரியர்களே அழைத்துச் செல்வது வரவேற்கத்தக்கது.

புதிதாய் வெளிவரும் ஒவ்வொரு படத்திற்கும் பொருள் சார்ந்த விமர்சனங்களைச் சேர்த்து திரைப்பட வழிகாட்டி எனும் நூலாக அவ்வப்போது வெளியிடும் நிறுவனங்கள் முன்னேற்றமடைந்த நாடுகளில் உண்டு. பயங்கரம் மற்றும் பால்வினை போன்றவை ஒவ்வொரு படத்தில் எவ்வளவு இருக்கின்றனவென்றும் எந்தெந்த வயதினர் அதைப் பார்க்கலாமென்றும் எப்புறச் சாய்வுமின்றி இவ்விமரிசனர் விளக்குவர். இக்குறிப்புகளைப் பெற்றோர் நன்கு வாசித்துத் தங்கள் பிள்ளைகளோடு உட்கார்ந்து பேசி அப்படத்தை அவர்கள் பார்க்கலாமா கூடாதா என்று தீர்மானிப்பார்கள். இவ்வழக்கம் நமது நாட்டில் அதிகமில்லை. எனவே படங்களைத் தெரிந்தெடுப்பதில் இளைஞர் அதிகக் கவனமாயிருக்கவேண்டும். திரைப்படப் பொழுதுபோக்கு தங்களுக்கு வேண்டுமென்று விரும்பும் இளைஞர் புதுப்படமொன்று வெளிவந்தவுடனேயே பார்க்க விரையாது, அப்படம் தங்களுக்குப் பயனளிக்குமாவென விசாரித்துத் தெரிந்துகொள்ளச் சற்றுக் காலதாமதம் செய்யவேண்டும். சுவரொட்டிகளையும் தொலைக்காட்சி விளம்பரங்களையும் மட்டும் பார்த்து ஏமாந்துவிடாதீர்கள். இது நீங்கள் உருவேற்கும் காலம். உங்கள் இதயமாகிய பொன்பூமியில் எதை விதைத்தாலும் நன்கு விளையும். களையெடுப்பது சுலபமல்ல. நிதானமாய் இருங்கள். இன்று உங்கள் சிந்தனைகளும் கணிப்புகளும் உணர்ச்சிவசம் நிறைந்தவையாயிருக்கும். வளர்ச்சியும் முதிர்ச்சியுந்தான் பகுத்தறிவுத் திறனைப் பெருக்கும் (எபி 5:14).

எது முக்கியம் என்றும் நாம் கவனிக்கவேண்டும். என்றுமில்லாத அளவு படிப்பில் போட்டி பெருகியுள்ள இக்காலத்தில், மாலை வேளைகளில் விளையாடக்கூட நேரமில்லை என்றிருக்கும்போது, மாணவர் தங்கள் பொன்னான நேரத்தைத் தொலைக்காட்சிப் பெட்டிக்குமுன் வீணடிப்பதெப்படி? வெளிவேலை செய்வோர் தேவனுக்கு முன் காத்திருக்கவும், அவரது திருவசனத்தைத் தியானிக்கவும், அவருக்காய்ச் சாட்சிபகர வெளிச்செல்லவும் நேரமேயில்லை என்று அங்கலாய்க்கும்போது, திரைப்படங்கள் பார்க்க நேரமெங்கே? கிறிஸ்தவச் சீடத்துவத்தில் நேரத்தைப் பற்றிய உக்கிராணத்துவம் அதிமுக்கியமானது.

திரைப்படத்தைக் குறித்த கேள்விக்குச் சுலபமாக ஆம் அல்லது கூடாது என்று பதில்சொல்லிவிட முடியாது. ஆனாலும், எல்லாவற்றிற்கும் மேலோங்கி நிற்கும் வேதத் தத்துவம் ஒன்றுண்டு. அதாவது, ''எல்லாவற்றையும் சீர்தூக்கிப் பாருங்கள்; நல்லதைப் பிடித்துக்கொள்ளுங்கள்; தீதானதாய்த் தோன்றும் எல்லாவற்றையும் விட்டு விலகுங்கள். கடவுள்தாமே உங்களை முற்றிலும் தூய்மையாக்குவாராக!'' (1 தெச 5:21-23).

## ୨୪. விளையாட்டுப் போட்டிகள் நேர வீணடிப்பா?

மாணவர் நடுவில் திருப்பணியாற்றுபவர்களிடம் இக்கேள்வி அடிக்கடி கேட்கப்படுகிறது. இரட்சிக்கப்பட்டவுடன் சில வாலிபர் தங்கள் ஓய்வு நேரங்கள், மாலை வேளைகள் யாவற்றையும் ஜெபம், வேத ஆராய்ச்சிக் கூடுகைகள், மற்றும் இதுபோன்ற ஆன்மீகக் காரியங்களில் செலவிடத் தொடங்குகின்றனர். மற்றும் சிலருக்கு விளையாட்டுகள், போட்டிகள் ஆகியவற்றை விட்டுவிடுவது கடினமாயிருக்கிறது. நாளாவட்டத்தில், ஆன்மாவுக்காக நேரம் செலவழிப்பதற்குப் பதிலாக விளையாட்டுகளில் ஈடுபடுவது நேர வீணடிப்போ என்று இரண்டாம் வகுப்பினருக்கு ஒருவிதக் குற்றவுணர்வு ஏற்படுகிறது. இக்கேள்விக்குத் திருமறையிலிருந்து பதிலுண்டா?



விளையாட்டுப் போட்டிகளை நேரடியாக வேதம் ஊக்குவிக்காவிடினும் இவைகளை அது எங்கும் கண்டனம் செய்வதில்லை. கிரேக்க நாட்டிலும் ரோம் நகரிலும் நடந்த பொது விளையாட்டுகளிலிருந்து பல எடுத்துக்காட்டுகளைக் கையாண்டு புதிய ஏற்பாட்டு ஆக்கியோன்கள் ஆன்மீகக் கருத்துக்களை விளக்கியுள்ளனர். சிலம்பம், குத்துச்சண்டை, ஓட்டம் போன்றவற்றை அப்போஸ்தலன் பவுல் குறிப்பிட்டுள்ளான் (எபே 6:12; 1 தீமோ 6:12; 2 தீமோ 4:7; 1 கொரி 9:24-27). மற்ற அப்போஸ்தலரும் விளையாட்டுப் போட்டிகளின் பதங்களைப் பயன்படுத்தியுள்ளனர் (1 பேது 1:4; எபி 12:1,2; யாக் 1:12). மோசே ஒரு சிறந்த குத்துச்சண்டை வீரனாயிருந்திருக்கவேண்டும் (யாத் 2:11,12). மலையேறுவதிலும் அவன் வித்தகன். குறிவைத்து எய்வதில் தாவீது தலைசிறந்தவன். ஆட்டிடையனாய்த் தனது இளம்பருவத்தில் அவன் இக்கலையில் தன்னைப் பயிற்றுவித்திருப்பான் (1 சாமு 17:20,40,48-50).

விளையாட்டுப் போட்டிகள் அவற்றில் கலந்துகொள்வோருக்குப் பல நன்மைகள் அளிக்கின்றன. ஒரு நல்ல விளையாட்டு வீரன் உடற்கட்டுப்பாட்டைக் கற்றுக்கொள்கிறான். இது கிறிஸ்தவ வாழ்விற்கு எவ்வளவாய்த் தேவை! (1 கொரி 9:24-27). சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படிவது அடுத்த காரியம். கிறிஸ்தவ ஊழியத்திலும் ''என்ன'' என்பதைவிட ''எப்படி'' என்பதுதானே காரியம்? (2 தீமோ 2:5; 1 கொரி 3:10). வேறெங்கும்விட விளையாட்டுகளில்தான் நாம் குழுவுணர்வைக் கற்றுக்கொள்கிறோம். கிறிஸ்தவ வட்டாரங்களில் இதற்குத்தான் பஞ்சம்! சலிக்காது தாக்குப்பிடித்து முயற்சிப்பது விளையாட்டுத்துறையில் உருவாகும் இன்னொரு அருங்குணம் (எபி 12: 1,2; அப் 20:24). விளையாட்டு வீரர் எப்பொழுதுமே பதக்கத்தின்மீது கண்ணை வைத்திருப்பார்கள். அதைவிடக் குறைவானதெதுவும் அவர்களைத் திருப்திப்படுத்தாது. இந்த நோக்கு திருச்சபையில் இல்லாததாலேயே, உன்னதமானவருக்கு உசிதமானதைச் செய்யும் கிறிஸ்தவர் இன்று மிகச் சிலர்.

விளையாட்டுகளிலும் போட்டிகளிலும் கலந்துகொள்ள வாலிபரைத் திருச்சபைகளும் திருச்சங்கங்களும் ஊக்குவிக்கவேண்டும். ஆவியால் நிறைந்த மருத்துவர் பிற மருத்துவரைவிடச் சிறந்தவராயிருப்பார்; ஆவியால் நிறைந்த பொறியியலர் பிற பொறியியலரை

விடச் சிறந்தவராயிருப்பார்; அப்படியே ஆவியால் நிறைந்த விளையாட்டு வீரர் பிற விளையாட்டு வீரரைவிடச் சிறந்தவராயிருக்க முடியும் என நான் உறுதியாய் நம்புகிறேன். கர்த்தருடைய கரம் தீர்க்கன் எலியா மீது வந்தபோது அவன் அரசன் ஆகாபின் இரதத்தை விட வேகமாக ஓடவில்லையா? (1 இரா 18:44-46). ஆவியானவர் சுவிசேஷகன் பிலிப்புவை உந்தித் தள்ளியபோது அவன் வேகமான எத்தியோப்பிய இரதத்தையும் முந்த முடியவில்லையா? (அப் 8: 29,30). அது ஒரு காட்டோட்டம்! சர்வவல்ல தேவ ஒத்தாசையுடன் கிறிஸ்தவ விளையாட்டு வீரர்கள் கிறிஸ்தவரல்லா விளையாட்டு வீரர்களைவிடப் ''பத்து மடங்கு'' சமர்த்தராயிருக்கமுடியும் (தானி 1:20). முடியாதா? (ரோ 9:16). ''என் தேவனாலே ஒரு மதிலைத் தாண்டுவேன்'' என்று தாவீது மார்தட்டினான் (சங் 18:29). உயரம் தாண்டுவோர், இதை நினைவிற்கொள்ளுங்கள்!

ஒலிம்பிக் போட்டிகளிலிருந்து பல்லாண்டுகள் இந்தியா வெறுங்கையாய்த் திரும்ப வந்திருக்கிறது. ஏதோவொரு வெள்ளிப் பதக்கம் அல்லது வெண்கலப் பதக்கம் பெற்றுவிடுவது இவ்வளவு பெரிய நாட்டின் அவமானத்தை அகற்றிவிடாது. இந்தியக் கிறிஸ்தவ இளைஞர் இச்சவாலைச் சந்தித்து இந்நிந்தையை நீக்கிவிட முன் வருவார்களா? வேறு யாரால் இது முடியும்? கிறிஸ்தவ விளையாட்டு வீரர் தங்கள் விசுவாசத்தைச் சாட்சியாய்ப் பகிர்ந்துகொண்டால், அது இன்றைய இளைய தலைமுறையை எவ்வளவாய்ப் பாதிக்கும்!

இந்தியக் கிரிக்கெட் உலகு இன்று எத்தனை அவமானத்திற்குள்ளாகிவிட்டது! பண ஆசைக்கும் ஊழலுக்கும் மரித்த ஆட்டக்காரரே இனி நாட்டின் பெயரைக் காப்பாற்ற முடியும். கிறிஸ்தவ வாலிபரே, இச்சவாலைச் சந்திப்பீரா?

கல்வித்துறையிலுள்ள கடும்போட்டியின் காரணத்தினால் தங்கள் பிள்ளைகள் படிப்பைத் தவிர வேறெந்தப் பயிற்சிகள், நிகழ்ச்சிகளிலும் பங்கு பெறுவதைப் பெற்றோர் ஊக்குவிப்பதில்லை. இதனால் இளைஞருடைய முழுமையான வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படும். இளைஞன் இயேசு ''ஞானத்தில்'' மட்டுமல்ல, ''வளர்த்தியிலும்'' விருத்தியடைந்தாராம் (லூக் 2:52). வாலிபரின் பலத்தை நன்மை பயக்கும் உடற்பயிற்சி, விளையாட்டுகள் போன்றவற்றில் செலவழிக்க வழி வகுக்காவிடில், அது பாவக் காரியங்களுக்குள் பாய்ந்தோடிவிடும்.



மாணவப் பருவத்தில் நான் இலக்கியப் பேச்சுப் போட்டிச் சங்கம், தேசிய மாணவர் படை, சாரணர் அணி, பள்ளி விழா நாடகங்கள் போன்றவற்றில் தீவிரமாய் ஈடுபட்டேன். இவை ஒன்றுமே எனது இன்றைய ஊழிய மற்றும் தலைமைப் பொறுப்புகளுக்குப் பயனளிக்காது போகவில்லை. ஆனால் படிப்பில் முதன்மையாயிருக்க அதிக சிரத்தை எடுத்துக்கொண்டதால் நான் போதுமான நேரம் விளையாட்டு மைதானத்தில் செலவிடவில்லை. இன்றுவரை எனக்கு நீந்தக் கூடத் தெரியாதுபோயிற்று!

சமநிலை எய்தும்படி இளைஞரை நான் அறிவுறுத்துகிறேன். படிக்க ஒரு நேரமுண்டு, சும்மாயிருக்க ஒரு நேரமுண்டு; ஜெபிக்க ஒரு நேரமுண்டு, விளையாட ஒரு நேரமுண்டு. எந்தவொன்றையும் அசட்டை செய்யவேண்டாம்; அளவுக்குமீறிச் செய்யவும் வேண்டாம். நல் வாழ்த்துக்கள்!

## 95. கொடி வணக்கம் சரியா?

சில ஆண்டுகட்குமுன் ஒரு கூட்டக் கிறிஸ்தவர்கள் தேசியக் கொடிக்கு வணக்கம் செலுத்த மறுத்தது பெரும் பிரச்னையைக் கிளப்பியது. ஆனால் இக்குழுவினர் கிறிஸ்தவத்தின் முக்கிய வரிசையைச் சாராத தவறான வினோதக் கொள்கையினர் என விளக்கப்பட்டபோது புயல் அமர்ந்தது. இப்படியிருப்பனும், தேசியக் கொடிக்கு வணக்கம் செலுத்துவது விக்கிரகாராதனை இல்லையா எனக் கேள்வியோடிருக்கும் நல்ல விசுவாசிகள் பலருண்டு.

“Salute” அல்லது ''வணக்கம்'' என்ற சொல்லுக்கு ''மரியாதையுடன் கூடிய வாழ்த்து'' என்றே பொருள். இந்தியாவில் நாம் ஒருவரையொருவர் சிரந்தாழ்த்தி அல்லது கரங்கூப்பி வாழ்த்துகிறோம். இவ்விதப் பாவனைகள் கலாச்சாரத்தைச் சார்ந்தவை. இது தொழுகை அல்ல. கொர்நெலியுவோ வாழ்த்துதல் பாவனைக்கும் மிஞ்சி பாதத்தில் ''விழுந்து பணிந்து'' கொண்டதாலேயே பேதுரு அவனைத் திருத்தினான் (அப் 10:25,26). அப்படியே அந்த மூன்று எபிரெய வாலிபர் செய்ய மறுத்தது ராஜா நிறுத்தின ''சிலையைப் பணிந்து'' கொள்ளவே (தானி 3).

கிறிஸ்தவர்கள் தேசிய வெறி (nationalism) அல்ல, தேசப்பற்று (patriotism) உள்ளவர்களாயிருக்கவேண்டும். தேசப்பற்று என்றால் நாட்டை நேசித்து அதின் நலனுக்காய் நம்மை அர்ப்பணிப்பதாகும். இதைத் திருமறை ஒருபோதும் எதிர்ப்பதில்லை. ரோம அரசு அஞ்ஞான மார்க்கத்தைச் சேர்ந்ததாயிருந்தாலும் அப்போஸ்தலன் பவுல் தனது ரோமக் குடியுரிமையைக் குறித்துப் பெருமிதம் கொண்டிருந்தான் (அப் 22:25-29). உலகெங்கும் சிதறடிக்கப்பட்ட யூதர் தங்கள் நாட்டைக் குறித்தே ஏங்கிக்கொண்டிருந்தனர். தனது நாட்டை ஒரு யூதன் எவ்வளவாய் நேசித்தான் என்பதைச் சங்கீதம் 137இல் வாசியுங்கள். எருசலேம் அவனுக்கு ''முக்கியமான மகிழ்ச்சியாகவும்'' ''வலது கை'' போன்று பிரியமானதாகவுமிருந்தது (வச 5,6). பரத்திலிருக்கும் நமது நித்தியக் குடியுரிமை இகத்திலிருக்கும் நமது இன்றையக் குடியுரிமையை ரத்து செய்வதில்லை. மற்றபடி நாம் ''உலகத்தைவிட்டே'' ஓடிவிடவேண்டியதிருக்குமே! (1 கொரி 5:10). தேசியக் கொடி தேசத்தைக் குறிக்கிறது. நாம் கொடிக்கு வணக்கம் செலுத்தும்போது நாட்டின் மீதுள்ள நமது பாசத்தையும் மரியாதையையும் வெளிப்படையாய் அறிக்கையிடுகிறோம்.

மேலை நாடுகளில் தேசியக் கொடியை ஆலயத்தினுள்ளேயே வைக்கும் பழக்கமுண்டு. இது முற்றிலும் சரியே. ''அதிகாரங்கள்'' யாவும் தேவனால் அல்லவோ நியமிக்கப்பட்டிருக்கின்றன! (ரோ 13:1). சுதந்திர தினம் மற்றும் குடியரசு தினத்திலாவது நாட்டுக் கொடியை நமது ஆலயக் கோபுரங்களின் உச்சியில் அல்லது ஆலய வளாகங்களில் ஏற்றினாலென்ன? ஆலயத்தில் நாட்டுக்காக ஜெபிக்க சிறப்பாராதனை ஒன்று நடத்தலாமே. இது நாட்டின் சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து உத்தமமான குடிகளாகத் திகழும்படி நமது அர்ப்பணிப்பைப் புதுப்பித்துக்கொள்ள ஒரு வாய்ப்பாய் அமையும். பொது விடுமுறையான இவ்விரு நாட்களில் நாம் முகாம்கள் போன்ற சிறப்பு நிகழ்ச்சிகள் நடத்தினால் கொடியேற்றி, நாட்டுக்காய் ஜெபித்து, தேசியக் கீதம் பாடிக் கூட்டத்தைத் துவங்கலாம்.

இந்தியாவின் எழுப்புதலுக்காகவும் நற்செய்திப்பணிக்காகவும் நாட்டின் முக்கிய நகர்களில் சுதந்திர தினம், குடியரசு தினம் ஆகிய நாட்களில் உபவாச ஜெபங்கள் நடத்தும் குழுக்களுக்காகத் தேவ



னைத் துதிப்போம். பவுலைப் பொறுத்தமட்டில், இதுவே நமது ஜெபப் பட்டியலில் முதலிடம் வகிக்கவேண்டும் (1 தீமோ 2:1,2).

உலகிலேயே மார்க்க பக்தி அதிகமான நாடு இந்தியாதான். இன்னும் பல வகைகளில் இந்நாடு இணையற்றது. இத்தனை மொழிகளும் கலாச்சாரங்களும் வேறெங்குண்டு? நாட்டின் பிரமாண்டமான மக்கள் தொகையை இறையரசுக்காய் ஆதாயப்படுத்தக்கூடிய பெரிய மக்கள் கூட்டங்களாய்ப் பார்ப்போம். *''பரலோகத்தை இந்தியர்கள் நிரப்புவார் துதியுங்கள்''* என்று எமில் ஜெபசிங் அண்ணன் தீர்க்க தரிசனமாய்ப் பாடினார்கள்! நாடெங்கும் ஊழல்களும் கலவரங்களும் நிறைந்திருக்கின்றனவென்பது உண்மைதான். எந்த நாட்டில்தான் இவை இல்லை? நமது நாட்டைக் குறித்துச் சாதகச் சிந்தை கொள்வோம்.

அடுத்த கொடியேற்று விழாவை ஆவலோடு எதிர்நோக்குங்கள். நமது நாட்டுக்கொடி எளிமையானது, ஆனால் கவர்ச்சியானது. அறியாமையினால் ஏற்படும் அவமரியாதையை அகற்ற நமது கொடியின் வண்ணங்களின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்வோம். மேலுள்ள காவி நிறம் வீரத்தையும் தியாகத்தையும் குறிக்கும். வெள்ளையானது உண்மை, தூய்மை, எளிமை ஆகியவற்றைக் குறிக்கும். தாது வளம் நிறைந்த நமது செழிப்பான நாட்டைப் பச்சை நிறம் குறிக்கும். 24 ஆரங்களுள்ள சக்கரம் முன்னேற்றத்தையும் உத்வேகத்தையும் குறிக்கும். கொடிக்கு வணக்கம் செலுத்தும்போது இவ்வுயரிய பண்புகளுக்கு உங்களை மறுபடி அர்ப்பணியுங்கள். அப்பொழுது தேசம் ஆசீர்வதிக்கப்படும், தேவன் ஆராதிக்கப்படுவார்.

## 96. யாருக்கு ஓட்டு?

ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் தேச பக்தி இருக்கவேண்டும். அரசியல் சம்பவங்களைக் கண்டும் காணாமல் இருக்க முடியாது. யார் ஆண்டால் என்ன எனும் மனப்பான்மை கூடாது. ''என் மக்கள்மீது வரும் பொல்லாப்பை நான் எப்படிப் பார்க்கக்கூடும்?'' என்ற எஸ்தரின் ஆவி நம்மைப் பிடிக்கட்டும் (எஸ்தர் 8:6).

நமது முதற்கடன் ஜெபமே. அரசியலுக்குப் பின்னணியில் காணக் கூடா சக்திகள் பலவுண்டு. நாட்டின் இன்றைய நெருக்கடி ஓர் ஆன் மீகப் போராட்டமே. எனவே விண்ணப்பங்களையும் ஜெபங்களையும் வேண்டுதல்களையும் துதிகளையும் ஏறெடுக்காது இனி நமது நாட் டில் கலகமில்லாத அமைதி வாழ்வு சாத்தியமில்லை (1 தீமோ 2:1,2).

தேர்தல் வேட்பாளர் அத்தனை பேருக்காகவும் ஜெபியுங்கள். நாட்டி லுள்ள கோடிக்கணக்கான வாக்காளர்களை தேவன் தொடும்படி விண் ணப்பியுங்கள். கீழ்வரும் குறிப்புகளை நினைவில் வைத்து மன்றா டுங்கள்—

**நீதி:** ஊழலும் தன்னலமுமற்ற தலைவர்கள் தேவை. அவர்கள் நேர்மைக்கும் உண்மைக்கும் பெயர்பெற்றிருக்கவேண்டும். அரசிய லில் இதெல்லாம் சாத்தியமல்ல என்போம். ஆனால், ''நீதி நாட்டை உயர்த்தும்; பாவமோ எந்த மக்களுக்கும் இகழ்ச்சி'' எனத் திருமறை அழுத்திக் கூறுகிறது (நீதி 14:34). வேறு வழியில்லை.

**மதச்சார்பின்மை:** சொந்த விசுவாசத்தைப் பயிற்சிக்கவும், பறை சாற்றவும் மதச் சுதந்திரம் நமது சாசனத்தில் உண்டு. ஆனால் இவ் வுரிமை கொஞ்சம் கொஞ்சமாக வேரறுக்கப்பட்டு வருகிறது. எங்கும் சென்று எவருக்கும் நற்செய்தியை அறிவித்து, அவர்களைச் சீடராக்க இயேசு தந்த கட்டளைக்குக் கீழ்படியாது கிறிஸ்தவராயிருப்பது சாத்தி யமோ? (மத் 28:19,20).

**எளியோர்க்குதவி:** நிலையற்ற ஆட்சியால் நாட்டின் பொருளா தாரமே பெரிதும் பாதிக்கப்படும். வறுமைக்கோட்டிற்குக் கீழிருப்போர் பெருகிக்கொண்டேயிருக்கின்றனர். அன்னாரது கூக்குரலைக் கேட்க எவருமில்லை. எளியோருக்கு இரங்கும் அரசைக் கடவுள் ஆசீர்வதிப் பார் (நீதி 19:17).

**நாட்டின் ஒருமை:** தனக்குதானே விரோதமாய்ப் பிரிந்திருக்கும் இராஜ்யம் நிலைநிற்காது என்றார் இயேசு (மாற் 3:24). இனவெறியை அறவே ஒழிப்பதற்குப் பதிலாக சில அரசியல்வாதிகள் அதைக் கிளப்பி விடுகின்றனர். எப்படியாவது ஆட்சியைப் பிடிக்கவேண்டுமென்பதே அவர்கள் நோக்கு. தென்னகத்திற்கும் வடமாநிலங்களுக்குமிடையே



பகைமை அதிகரித்துகொண்டேயிருக்கிறது. ''மனிதர்மீது பிரியம்'' என்பதே கிறிஸ்துமஸ் தரும் செய்தி (லூக் 2:14). நாட்டை ஒருங் கிணைத்து நடத்தும் தலைவர்கள் தேவை. கொலையும் உடற்சேத மும் போதாதா?

**சமூகச் சீர்திருத்தங்கள்:** தீண்டாமை, சிறுபிள்ளை மணம், வர தட்சணை வாங்குதல், உடன் கட்டையேறுதல், தேவதாசிப் பழக்கம், பெண்களுக்கெதிரான குற்றங்கள் இதுபோன்ற சமூகத் தீங்குகளால் நாடு பாதிக்கப்பட்டுள்ளது. சிங்கத்தைப்போல் துணிந்து இந்த அவ மானப் பழக்கங்களை எதிர்த்து ஒழித்து மக்களை இருளிலிருந்து வெளிக்கொணரும் தலைவர்கள் தேவை. பதவிக்கும் பணத்துக்கும் பண்பாடுகள் பலியாகிவிடக்கூடாது.

நாட்டின் நலத்திற்கு மேற்கூறியவை இன்றியமையாதவை. இது தவிர்த்து உங்களுக்குத் தோன்றுபவைகளையும் ஜெபக்குறிப்புகளாகச் சேர்த்து தேவனுக்குமுன் மன்றாடுங்கள். கூடி உபவாசித்து ஜெபி யுங்கள். சிங்காசனத்தில் இருப்பவர் நமது தேவன்தான்!

தேர்தல் ஆணையர் மற்றும் அனைத்து அதிகாரிகளுக்காக ஜெபி யுங்கள். வாக்குச் சாவடிகளில் முறைகேடுகள் நடக்காதிருக்க வேண் டுங்கள். சகலமும் நியாயமாய் நடக்கவேண்டும்.

ஜெபித்தால் மட்டும் போதாது. செயலில்லா விசுவாசம் செத்தது. ஒவ்வொரு கட்சியின் தேர்தல் அறிக்கையையும் கவனித்துப் படியுங் கள். அனுபவமும் முதிர்ச்சியுமுள்ளோரோடு கலந்துரையாடுங்கள். வாக்குவாதம் வேண்டாம். பொறுப்பற்ற அரசியல்வாதிகள் அள்ளி வீசும் தேர்தல் வாக்குகளை அப்படியே நம்பிவிடாதீர்கள். உரிமையும், பொறுப்பும் நிறைந்த தனி நபர் நீங்கள். சிந்தியுங்கள், ஜெபியுங்கள், வாக்களியுங்கள்!

ஜெய் ஹிந்த்!

## 97. கிறிஸ்தவர்கள் லாட்டரிச் சீட்டு வாங்கலாமா?

லாட்டரி என்பது சூதாட்டம்தான். அரசு நடத்தும் பரிசுச் சீட்டுத் திட்டங்கள் அதிகாரப் பூர்வமான சூதாட்டம், அவ்வளவுதான்! நிறைவான நீதி நெறிகளென்று நமது அரசுகளுக்கு ஒன்றும் கிடையாது. ஓர் அரசு சாராயக் கடைகளை அடைக்கும்; அடுத்த அரசு தனது ''மாண்புமிகு'' அமைச்சர்களைக் கொண்டே அக்கடைகளைத் திறக்கும்!

''சூதாட்டமானது கிறிஸ்தவக் கோட்பாட்டிற்கு முற்றும் முரணானது. சூதாட்டக்காரர் நாளாவட்டத்தில் மூடநம்பிக்கையினராகவே மாறுவர். தேவனது ஏகாதிபத்தியத்தை மறந்த அவர்கள் விதியின் விளையாட்டு என்பதை நம்பி எவ்வழியிலாவது அதைத் தங்களுக்குச் சாதகமாக்க ஓடி அலைவர்'' என்று *Moody Monthly* பத்திரிகையின் தலையங்கமொன்றில் வாசித்தேன்.

லாட்டரிகள் பேராசையைத் தூண்டிவிடும். சீக்கிரம் பணக்காரராகும் தத்துவத்தைக் குறித்துத் திருமறை கண்டிப்பாய் நம்மை எச்சரிக்கிறது. ''ஆரம்பத்தில் துரிதமாய்க் கிடைத்த சுதந்தரம் முடிவில் ஆசீர்வாதம் பெறாது'' (நீதி 20:21). ''உண்மையுள்ள மனிதன் பரிபூரண ஆசீர்வாதங்களைப் பெறுவான்; ஐசுவரியவானாகிறதற்குத் தீவிரிக்கிறவனோ ஆக்கினைக்குத் தப்பான்'' (நீதி 28:20). லாட்டரிப் பரிசு பெற்ற பலரது பரிதாபமான முடிவுகளைக் கவனிக்கும்போது இத்திருவசனங்கள் திரும்பத் திரும்ப நிரூபிக்கப்படுவதைக் காணலாம் (1 தீமோ 6:9,10). ஆனால் தேவன் ஒருவனைச் செல்வந்தனாக்கினால், அவர் அத னோடு வேதனையைக் கூட்டமாட்டார்! (நீதி 10:22).

துவக்கங்களைக் குறித்து எச்சரிக்கை! லாட்டரியில் பங்கேற்போர் பொதுவாக முதலில் ஒன்றிரண்டு சீட்டுகள்தான் வாங்குவர். ரூ.100/- அல்லது ரூ.1000/- விழுந்துவிட்டால் போதும்; இன்னும் கூடுதல் சீட்டுகளை வாங்கச் சோதனை தலைவிரித்தாடும். ஐயோ, கணவன்மாரும் தகப்பன்மாரும் லாட்டரிக்கு அடிமையாகிவிட்டதால் தின்னசோறு இல்லாது தவிக்கும் குடும்பங்கள் எத்தனை! பணமென்பது கடல் நீர் போன்றது; குடிக்க குடிக்கத் தாகம் கூடுமேயொழிய தணியாது.



லாட்டரிகள் லட்சங்களைக் கொள்ளையாடி ஒருசிலரை லட்சாதிபதிகளாக்குகின்றன. லாட்டரிச் சீட்டு வாங்குவோர் பெரும்பாலும் வருமானத்தில் நடுவகுப்பு அல்லது அதற்குக் கீழ்வகுப்பினரே. நாம் ஏழைகளின் தேவனை ஏளனப்படுத்தலாமா? (நீதி 22:16). தங்கள் கருப்புப் பணத்தை வெள்ளையாக்கவும் பணக்காரர் லாட்டரித் திட்டங்களைப் பயன்படுத்துகின்றனர்.

பரிசுச்சீட்டு விழுந்துவிட்டால் பாதியை ஆண்டவருக்குக் கொடுத்துவிடுவோமென்று சில கிறிஸ்தவர்கள் சப்பைக்கட்டு கட்டுவர்! பிரியமானவரே, அசுத்தமான பணத்தை தேவன் அருவருக்கிறார். பரிசுச்சீட்டில் விழுந்த பணமென்று யாராவது காணிக்கை கொண்டு வந்தால் பிரசங்கிமாரும் மேய்ப்பரும் அதை ஏற்றுக்கொள்ள கண்ணியமாக மறுத்துவிட வேண்டும்.

வரவு செலவு சமாளிக்க முடியாவிடில் கூடுதல் ஏதாவதொரு வேலை செய்ய முயற்சியுங்கள். செலவுகளை மாதத் துவக்கத்திலேயே திட்டமிடுங்கள். இறையரசையும் அவரது நீதியையும் முதலாவது தேடுங்கள். அன்றன்றுள்ள ஆகாரத்தையும், அதன்மீது ஆசீர்வாதத்தையும் தேவனிடம் கேளுங்கள். ''போதுமெனும் மனதோடுள்ள தேவபக்தியே மிகுந்த ஆதாயம். நாம் இவ்வுலகத்தில் கொண்டுவந்தது ஒன்றுமில்லை; இங்கிருந்து கொண்டுசெல்வது ஒன்றிமில்லையென்பதும் நிச்சயம். உண்ணவும் உடுக்கவும் இருந்தால் அதுவே போதுமென்றிருக்கக்கடவோம்'' (1 தீமோ 6:6-8).

## 98. கல்லூரிகளில் பணம் கொடுத்து இடம் வாங்கலாமா?

''எந்தவொரு கல்வி நிறுவனமும் மாணவரைச் சேர்க்கப் பணம் (Capitation fee) வாங்குவது சட்டத்தின்படி அனுமதிக்கப்படாதது'' என்று இந்திய உச்ச நீதிமன்றம் சமீபத்தில் அறிவித்துள்ளது. ''பணம் கொடுத்து இடம் வாங்கும் முறையானது பாரபட்சத்திற்கு வழிவகுக்கிறது. வசதியுள்ளோருக்கு இடம் கிடைத்துவிடுகிறது; எளியவரோ இடம் கிடையாது தவிக்கின்றனர். பணமில்லை என்ற ஒரே காரணத்தால் நன்கு படிக்கும் எளிய மாணவனுக்கும் வாய்ப்புகள் மறுக்கப்படு

கின்றன. பணக்காரனோ பணம் கொடுத்து நுழைந்துவிடுகிறான். இவ்வித நிலை அநியாயமானது, அயோக்கியமானது, அபத்தமானது'' என்றும் நீதிபதிகள் கூறியுள்ளனர். இந்தப் பணப்பறிப்புக்கு எப்பெயரிட்டாலும் இது ஒரு ''தீயமுறை'' என்று மன்றத்தில் முடிவுகட்டினர். சொந்த நிதியால் நடத்தப்படும் கல்லூரிகளுக்கு ஒரு சில மாநில அரசுகள் இவ்விதம் பணம் வாங்க அனுமதியளித்திருக்கலாம். ஆனால் கிறிஸ்தவர்கள் இந்த ''அதிகாரப்பூர்வமான லஞ்சத்திற்கு'' எதிராகக் குரல் எழுப்பவேண்டும்.

ஏராளம் பணம் கொடுத்து தொழில் கல்லூரிகளில் தங்கள் பிள்ளைகளைச் சேர்க்கும் பெற்றோர் தங்கள் குமாரர் குமாரத்திகளின் ஒழுக்க நெறிகளைச் சின்னாபின்னமாக்குகிறார்கள். இந்த இளைஞர்கள் ''பணம் பத்தும் செய்யும்'' என்ற உலகக் கோட்பாட்டில்தான் வளருவார்கள். ஆனால் உயர்வு உன்னதத்திலிருந்து வருமென்பதே திருமறைப் போதனை. நன்கு படிக்கும் ஆனால் எளிமையில் வாடும் மாணவர்க்கு இந்தப் பணக் கைமாற்றம் அநீதி செய்வதால் ஏழைகளின் தேவனது கோபம் பொங்கியெழுகிறது.

பணங்கொடுத்து இடம் வாங்கும் முறையானது பிற கேடுகளுக்கும் நடத்துகிறது. ஒன்று, மாணவனொருவன் பரீட்சையொன்றை நன்கு எழுதாவிடில் ''வெகுமதி'' எடுத்துக்கொண்டு விடைத்தாள்களைத் திருத்தும் ஆசிரியரைத் தொடர்வது. இதற்கும் பேரம் உண்டு. மட்டுமல்ல, இலட்சக்கணக்கில் பணத்தைக் கொட்டிய பெற்றோர் தங்கள் பிள்ளைகளின் திருமணத்தின்போது பெட்டிவைத்து அள்ளிவிட முயலுகிறார்கள். இவ்விதக் கைமாற்றங்களில் நடமாடுவது பெரும்பாலும் கறுப்புப் பணம்தான்.

பணத்தால் பிடித்ததைப் பணத்தால்தான் பாதுகாக்கவேண்டிவரும். நமது தேவன் நீதியுள்ளவர். தவறான, அநீதியான முறைகளில் பெற்ற நன்மைகளை அவர் ஒருபோதும் அங்கீகரியார். உங்கள் மகனோ, மகளோ பட்டம் பெற்றுவிடலாம்; நல்ல வேலையிலும் அமர்ந்துவிடலாம்; ஆனால் ''தேவனது'' ஆசீர்வாதம் எங்கே? தனது சுய பலத்தால் பெற்றெடுத்த இஸ்மவேலை தமது மீட்பின் வரிசையில் சேர்க்க மாட்டேனென்று தேவன் ஆபிரகாமுக்குச் சொன்னது நினைவில்லையோ?



பணங்கொடுத்து உள்நுழைந்து, பணங்கொடுத்து வெளிவரும் மருத்துவரும், பொறியியலரும் நோயாளிகளை எப்படிக் கவனிப்பாரோ, கட்டிடங்களை எப்படிக் கட்டுவாரோ, ஐயோ, நினைத்தாலே பயமாயிருக்கிறது!

நான் ஓர் எளிய குடும்பத்தைச் சேர்ந்தவன். புகுமுக வகுப்பில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றும் பண வசதியின்மையால் பெற்றோர் என்னைப் பொறியியல் கல்லூரிக்கு அனுப்ப முடியாது திகைத்தனர். எனவே பாலிடெக்னிக்கில் சேர நினைத்தேன். பாலிடெக்னிக் முதல்வரோ எனக்கு விண்ணப்பப்படிவம் தர மறுத்துவிட்டார். பொறியியல் கல்லூரிக்கே முயற்சிபண்ணு என்று சொல்லிவிட்டார். மனுச் செய்தேன். கிருபையாய் காரைக்குடி பொறியியல் கல்லூரியில் தேவன் இடம் தந்தார். பட்டம் பெற்றதும் குடும்பத்தின் பொருளாதாரப் பிரச்னையினால் அப்பா என்னை உடனே வேலையில் சேரச் சொன்னார்கள். எனக்கோ மேலும் படிக்க விருப்பம். எனவே Indian Institute of Technology, Madras; Indian Institute of Science, Bangalore; College of Engineering, Guindy ஆகிய தேசப் புகழ்பெற்ற மூன்று கல்லூரிகளுக்கும் மனுச்செய்தேன். சிபாரிசோ, காசோ ஒன்றுமின்றி மூன்றிலும் இடம் கிடைத்தது! மத்தேயு 6:33ஐ நினைவுகூர்ந்தேன்—இவைகளெல்லாம் ''கூடக்'' கொடுக்கப்படும்! படிப்பில் நான் பெற்ற ஆசீர்வாதம் பணத்தினாலுமல்ல, பலத்தினாலுமல்ல, அவரது கிருபையினாலேயே என்று அந்நாட்களைத் திரும்பிப்பார்த்து இன்று நான் தைரியமாய்ச் சொல்லமுடியும்.

தொழிற்கல்லூரியில் இடம் கிடைக்காவிடில் தங்கள் பிள்ளைகள் எதையோ இழந்துவிட்டனரென பெற்றோர் நினைக்கக்கூடாது. ஒவ்வொருவருக்கென்றும் தேவன் தனித் திட்டமொன்று வைத்திருக்கிறார். அதுவே மேலானது. உலக முறைகளுக்கு மறுப்புத் தெரிவித்து, தமது வல்லமையை வெளிப்படுத்த தேவனுக்கு வாய்ப்பு கொடுக்கும்படி பெற்றோரையும் பிள்ளைகளையும் வருந்திக்கேட்கிறேன் (2 நாளா 16:9).

## 99. கல்லறைகளைப் பார்த்துவருவது தவறா?

சில கிறிஸ்தவர்கள் தங்களது மரியாதையைச் செலுத்த தங்களுக்கு அருமையானவர்களின் கல்லறைகளுக்கு அன்னார் இறந்த நாட்கள் அல்லது முக்கிய தினங்களில் சென்றுவருவதுண்டு. மற்றவர்களோ அடக்க ஆராதனை முடிந்த பிறகு அப்பக்கமே திரும்புவதில்லை. தாங்கள் செய்வதுதான் சரியென்று சொல்லுவதற்கு அவர்கள் ''உயிரோடிருக்கிறவரை நீங்கள் மரித்தோரிடத்தில் தேடுகிறதென்ன?'' என்று இயேசுவின் கல்லறையினருகே நின்று சொன்ன தூதர்களின் வார்த்தைகளை மேற்கோள் காட்டுவர் (லூக் 24:5,6). அப்படியாயின், இந்த இரண்டாம் வகுப்பினர் ஏன் கிறிஸ்துவின் காலிக் கல்லறையைப் பார்க்க அவ்வளவு செலவழித்துப் பாலஸ்தீன நாட்டிற்குச் செல்லுகின்றனரென்பதுதான் எனக்குப் புரியவில்லை! அன்றாவது மகதலேனாள் மரியாளுக்கும் மற்றவர்களுக்கும் இயேசு உயிர்த்தெழுந்துவிட்டாரென்று தெரியாதிருந்தது. இன்றோ, அவர் உயிர்த்தெழுந்து 2000 ஆண்டுகளுக்கு மேலாகியும், மக்கள் அக்கல்லறையைக் காண விழைவது ஏனோ? இயேசுவின் கல்லறையென்று இன்னும் சில கல்லறைகளும் சொல்லப்படுகின்றன! இயேசுவின் உடல் வைக்கப்பட்டிருந்தது எந்தக் கல்லறையிலென்று நிச்சயமாய் யாருக்கும் தெரியாது!

இறந்துபோனவர்களின் நினைவாகக் கல்லறைகளுக்குச் சென்றுவருவதை திருமறை எங்கும் எதிர்த்துப் பேசவில்லை. பெந்தெகொஸ்தே நாளன்று கொடுத்த தனது பிரசங்கத்தில் தாவீதைக் குறித்துப் பேசுகையில் பேதுரு, ''அவனது கல்லறை இந்நாள்வரை நம்மிடமிருக்கிறது'' என்றான் (அப் 2:29). அப்படியானால் அவர்கள் அக்கல்லறையை ஒரு நினைவுச் சின்னமாகப் பாதுகாத்து வந்தார்களென்றுதானே பொருள்? ஆண்டுதோறும் கல்லறைக்கு வெள்ளையடிப்பதும் அக்கால வழக்கம் (மத் 23:27). சடலங்களுக்கு வாசனைப் பொருட்களை எடுத்துக்கொண்டு கல்லறைத்தோட்டம் செல்வது அன்றைய யூதப் பழக்கம் (லூக் 24:1). இந்தியாவில் நாம் பூக்களையும் ஊதுபத்திகளையும் எடுத்துச்செல்லுகிறோமல்லவா? கல்லறையைப் பார்த்துவரச் செல்வது தவறானால், குழிமேல் கட்டிடமே கட்டவேண்டியதில்லையே!

எங்கள் அப்பா தென் தமிழகத்திலுள்ள எங்கள் சொந்தவூர் நாசரேத்தில் அடக்கம்பண்ணப்பட்டிருக்கிறார்கள். அம்மா நாங்கள் 1971இலிருந்து வாழ்ந்துவரும் வேலூரில் அடக்கம்பண்ணப்பட்டிருக்கிறார்கள். அம்மா கல்லறைக்கு ஆண்டுக்கொருமுறை அல்லது இருதடவை சென்று வருகிறேன். நாசரேத் செல்லும் வாய்ப்பு கிட்டும்போதெல்லாம் அப்பா கல்லறையைப் பார்த்துவருவேன். இக்கல்லறைகளின் முன் நிற்கும்போதெல்லாம் என்னால் அழாமலிருக்க முடியாது. ஆனால் எனக்கும் என் தம்பிக்கும் பெற்றோர் எவ்வளவு செய்திருக்கிறார்களென்ற நினைவின் நன்றிக் கண்ணீரே அது (யோ 11:31,35,36). எங்களுக்கு அவர்கள் போதித்த உயரிய காரியங்களை நினைவுகூர்ந்து அவைகளைக் கடைப்பிடிக்கத் திரும்பவும் என்னை அர்ப்பணிப்பேன். தங்களது தலைப் பிள்ளையை இறையரசின் பணிக்காய்க் கொடுத்துவிட்ட அவர்களைப் போன்று பல பெற்றோரைத் தேவன் எழுப்பவும் ஜெபிப்பேன். அப்பம், ரசம் ஆகிய பௌதீகப் பொருட்கள் கர்த்தரைச் சிறப்பாய் ''நினைவுகூர'' நமக்கு உதவுவதுபோல, கல்லறை சந்திப்பு நமக்கு உள்ளுணர்வூட்டுகிறது. எனது பெற்றோரின் கல்லறைகளுக்குச் செல்லும்போதெல்லாம் அத்தோட்டங்களில் நித்திரை செய்துகொண்டிருக்கும் மிஷனரிகள் மற்றும் பரிசுத்தவான்களின் கல்லறைகளுக்கு முன்னதாகவும் சில நிமிடங்கள் செலவழிப்பேன். இங்கிலாந்தில் நான் பார்த்த அநேக இடங்களில் இன்னும் என் கண்ணை விட்டு அகலாது நிற்பது *மோட்சப் பிரயாணம்* எனும் காலம் போற்றும் நூலை எழுதிய ஜான் பனியன் மற்றும் எழுப்புதல் வீரன் ஜான் வெஸ்லி ஆகியோரின் கல்லறைகளே. என்னே ஊக்கம்! கல்கத்தாவிலுள்ள வில்லியம் கேரியின் கல்லறையைப் பார்த்துவந்தது என்றும் எனது நினைவில் பசுமையாய் நிற்கிறது.

கல்லறைத் தோட்டத்திற்குச் செல்லும்போது நாம் செய்யக்கூடாத சில காரியங்களுண்டு. □ இறந்தோருக்காய் நாம் ஜெபிக்கக்கூடாது. ''ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத்தீர்ப்படைவதும் மனிதருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது'' (எபி 9:27). இன்னொரு தருணம் கிடை

யாது. மரித்தோருக்காய் ஞானஸ்நானம் என்பது அப்போஸ்தலரின் செயல் முறையல்ல; தனது கருத்தை வலியுறுத்தப் பவுல் கையாண்ட ஓர் எடுத்துக்காட்டு, அவ்வளவுதான் (1 கொரி 15:29). □ இறந்தோரிடம் நாம் ஜெபிக்கக்கூடாது. இறந்தோரோடு எவ்விதத்திலும் தொடர்புகொள்ள முயலுவதை வேதம் வன்மையாய்க் கண்டிக்கிறது. ''உயிருள்ளவர்களுக்காய்ச் செத்தவர்களிடத்தில் விசாரிக்கலாமோ?'' (ஏசா 8:19இ). □ உணர்ச்சிப் பாங்கு (sentimentality) தவறல்ல; ஆனால் புதைக்கப்பட்ட இடத்திற்குப் புனிதத்துவம் கொடுப்பது பலவித விக்கிரகாராதனைப் பழக்கங்களுக்குள் நடத்தும். தீர்க்கன் எலிசாவின் எலும்புகளைத் தொட்டவுடன் மரித்தவன் ஒருவனின் உடல் உயிர் பெற்றது (2 இரா 13:21). ஆனால் தீர்க்கர்களிலெல்லாம் பெரியவனாகிய மோசேயை ஒருவருக்கும் தெரியாத இடத்தில் கடவுள் அடக்கம்பண்ணினார். ''இந்நாள்வரை ஒருவனும் அவன் பிரேதக் குழியை அறியான்'' (உபா 34:5,6,10-12). அபூர்வ சம்பவங்கள் வழக்கமாய் எதிர்பார்க்க வேண்டிய எதையும் போதிப்பதில்லை.

ஜான் வெஸ்லிக்கு இங்கிலாந்து திருச்சபை தனது கதவுகளை அடைத்தபோது அவர் தனது தந்தையின் கல்லறைமீது நின்று பிரசங்கித்தார். தேவன் கல்லான இருதயங்களையும் கல்லறைத்தோட்ட அடக்க ஆராதனைப் பிரசங்கங்களால் உடைத்திருக்கிறார்.

கல்லறைத் தோட்டங்களில் அசுத்தாவிகள் குடிகொண்டிருக்கு மென்பது ஓர் அஞ்ஞான நம்பிக்கை. கெர்கெசேனரும் கதரேனும் ''புறவினத்தாரின்'' பட்டணங்கள் (மத் 8:28; மாற் 5:1). இரவோ பகலோ எவ்வேளையிலும் கல்லறைத் தோட்டம் செல்ல யாரும் பயப்படவேண்டியதில்லை.

## 100. கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்தை இந்தியமயமாக்க வேண்டுமோ?

இந்தியாவில் கிறிஸ்தவமானது இன்னமும் வெள்ளைக்காரரின் மதம் என்றே கருதப்படுகிறது. கிறிஸ்தவரல்லாத நமது நண்பர்கள் நாம் கிறிஸ்து ஜெயந்தியை எப்படிக் கொண்டாடுகிறோமெனக் கவனிக்கும்போது ஆண்டுதோறும் அவர்களது இக்கருத்து வலுப்பெற்றே வருகிறது.



கிறிஸ்து கிழக்கிலோ மேற்கிலோ அல்ல, மத்திய கிழக்கில் பிறந்தார். இறைமகனின் பிறப்பை ஆயர்களுக்கு அறிவித்த தூதன் அது ''எல்லா'' மக்களுக்கும், யூதருக்கோ அல்லது குறிப்பட்டதொரு மக்களினத்திற்கோ அல்ல, நற்செய்தி என்று பறைசாற்றினான் (லூக் 2:10).

இந்தியாவிற்குச் சுவிசேஷத்தை முதலாவது கொண்டு வந்தது ஐரோப்பியரல்ல. இயேசுவின் பன்னிரு சீடரில் ஒருவராகிய தோமா என்பவர் முதல் நூற்றாண்டிலேயே இயேசு கிறிஸ்துவின் செய்தியோடு பாரதத்தில் நுழைந்தார். எனவே கிறிஸ்தவத்திற்கு இந்தியாவில் 2000 ஆண்டுகளுக்கும் கூடுதலான சரித்திரம் உண்டு. இப்படியிருக்க இந்தியக் கிறிஸ்தவராகிய நாம் கிறிஸ்துவின் செய்தியை இன்னும் மேற்கத்திய கலாச்சாரத்திலேயே பொதிந்து மக்களுக்குக் கொடுத்தால் அது பெரும் குற்றமாகும். கிறிஸ்துவின் சுவிசேஷம் கலாச்சாரங்களுக்கு அப்பாற்பட்டது. இந்தியப் பாணியில் கிறிஸ்துவின் பிறப்பைக் கொண்டாட இதோ சில வழிமுறைகள்—

கிறிஸ்துமஸுக்கு முந்திய நீண்ட ஆயத்தம் பாடல் பவனிதான். அவர்களுக்கு ஏற்கனவே தெரிந்ததைச் சொல்ல ஒவ்வொரு ஆண்டும் கிறிஸ்தவ இல்லங்களுக்கே செல்வானேன்? நமது சுற்று வட்டாரத்திலுள்ள கிறிஸ்தவரல்லாதோரின் இல்லங்களுக்கு அந்தந்த பிராந்திய மொழிகளில் பாடல்கள் பாடிப் பவனி (carols) சென்றாலென்ன? கிறிஸ்துமஸ் பாடல் பவனி கண்ணியமான பிச்சையெடுப்பு எனும் நிலைக்குச் சரிந்துவிட்டது! உறக்கத்திலிருக்கும் கிறிஸ்தவர்கள் உறங்கிக்கொண்டிருக்கும் கிறிஸ்தவர்களைத் தொந்தரவு செய்தல் என்பதே கிறிஸ்துமஸ் பாடல் பவனியைக் குறித்த எனது கணிப்பு. இந்திய ராகங்களில் பாடல்கள் பாடப் பயிற்சியெடுங்கள். சொற்கள் எளிதாகவும் தெளிவாகவும் இருக்கட்டும். நீங்கள் பவனியாய்ச் சென்று சந்திக்கும் ஒவ்வொரு கிறிஸ்தவரல்லா குடும்பத்திற்கும் கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டை அல்லது புதிய ஏற்பாடு ஒன்று அன்பளியுங்கள்.

கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டைகளை எத்தனை ''புறமதத்தினருக்கு'' அனுப்ப முடியுமோ அனுப்புங்கள். மேல்நாட்டு மரங்கள், இலைகள், காட்சிகளுள்ள படங்களைத் தவிர்த்திடுங்கள். எடுத்துக்

காட்டாக, பனி மான் படம் போட்ட வாழ்த்து அட்டைக்கு இந்தியா வில் ஏதாவது பொருளுண்டோ? இந்தியக் கலாச்சாரப் பின்னணியங் களில் வாழ்த்து அட்டைகள் வரைய கிறிஸ்தவ ஓவியர்களை அழைக் கிறேன். மெழுகுவர்த்திக்குப் பதிலாக குத்துவிளக்கு வரையலாம். அது இந்தியாவிற்குக் கூடுதல் பொருத்தமானது. அப்படியே வாழ்த்து வரிகளும் பிராந்திய மொழிகளில் இருப்பது மேல்.

கிறிஸ்துமஸ் அலங்கரிப்புகளிலும் மாற்றத்தைக் கொண்டுவரலாம். சவுக்கு மரக்கிளைகளைவிட மாவிலைத் தோரணம் இந்தியப்பாணிக் கேற்றது. மாவிலைகள் இந்துப் பண்டிகைகளோடு சம்பந்தப்பட்டவை என்று என்னிடம் சொல்லாதீர்கள். டிசம்பர் 25, கிறிஸ்துமஸ் தாத்தா, கிறிஸ்துமஸ் மரம் போன்ற மேற்கத்தியப் பாரம்பரியக் காரியங்கள் அஞ்ஞான மார்க்கத்தாரிடமிருந்தே தோன்றியவை என்பது உங்க ளுக்குத் தெரியுமா?

கிறிஸ்துமஸ் போட்டிகளில் கிறிஸ்தவரல்லாத சிறுவர் சிறுமி களைச் சேர்த்துக்கொள்ளுங்கள். கிறிஸ்துமஸ் மர விழாவில் அவர் களை ஒதுக்கிவிடாதீர்கள். தூதன் வெள்ளை வெளேறென்று இருக்கத் தேவையில்லை. அவன் ஆசிய பிரவுண் அல்லது ஆப்பரிக்கக் கருப்பு நிறத்திலும் இருக்கலாம். கூடாதா?

கிறிஸ்தவரல்லாதோருக்கென சிறப்பானதொரு கிறிஸ்துமஸ் ஆரா தனை நடத்த உங்கள் சபைப் போதகர் மற்றும் மூப்பரோடு உட்கார்ந்து பேசுங்கள். பாமாலைப் பாடல்களுக்குப் பதிலாக பஜனைப் பாடல்கள் பாட பாடகர் குழு பயிற்சியெடுக்கட்டும். இவ்வாராதனைக்குக் கிறிஸ் தவர் ஒவ்வொருவரும் கிறிஸ்தவரல்லாத ஒருவரையாவது அழைத்து வரவேண்டும். ஆராதனைக்கு முன்பும், பின்பும், ஆராதனை நடக்கும் போதும் கிறிஸ்தவர்கள் யாவரும் தங்களைக் கிறிஸ்தவரல்லாத விருந் தாளிகளுக்கு விருந்தோம்பிகளாய் நடத்திக்கொள்ளவேண்டும். ஆல யத்திற்குள் நுழைகையில் கூடியவரை காலணிகளைக் கழற்றிவிடுங் கள். தொழுகையகத்திற்குள் நுழையும்போது செருப்பு போட்டுக் கொண்டிருப்பதை கிறிஸ்தவரல்லாத இந்தியர் செரிக்க முடியாது. (சில வாழ்த்து அட்டைகளில் காண்கிறபடி சாக்ஸுக்குள் வெகுமதி களைப் போட்டு மேலே தொங்கவிடுவதெல்லாம் இந்தியக் கண் ணோட்டத்திற்கு அருவருப்பு!!!). கலாச்சாரங்களை மதிக்கவேண் டும்.



கிறிஸ்துமஸ் விருந்துக்கு கிறிஸ்தவரல்லாத உங்கள் அயலகத் தாரை அழையுங்கள். கிறிஸ்தவர்களென்றாலே பன்றிக்கறி சாப்பிட்டு, குடித்து, ஆடுகிறவர்களென்பதுதான் சில பகுதிகளிலுள்ள மக்களின் கருத்து! கிறிஸ்துவின் நாமத்தின்மீது நிந்தையைக் கொண்டுவந்துள்ள களியாட்டுகளிலிருந்து நாம் மனந்திரும்புவோம். உங்களுக்குப் பதில் செய்ய முடியாத எளியவருக்கு உணவளியுங்கள்.

கிறிஸ்துவின் சுவிசேஷத்தின் மேலிருந்த யூத ஆடையைப் பவுல் கழற்றியெறிந்தான். கிறிஸ்துவின் சுவிசேஷத்தின் மேலிருந்த லத்தீன் ஆடையை மார்ட்டின் லூத்தர் கழற்றியெறிந்தார். கிறிஸ்துவின் சுவி சேஷத்தின் மேலிருக்கும் ஐரோப்பிய ஆடையை இந்தியாவிற்காகக் கழற்றியெறியவேண்டியது நமது பொறுப்பு.

நான் இங்கு எழுதியவைகளில் சிலவற்றைப் பலர் ஒத்துக்கொள்ள மறுக்கலாம். ஆனால் நமது தனி வாழ்விலும் கூட்டு வாழ்விலும் இவ்விதப் புரட்சி மாற்றங்களை நாம் ஏற்படுத்திக்கொள்ளாவிட்டால் இன்னும் இரண்டாயிரம் ஆண்டுகள் கொடுக்கப்பட்டாலும் நமது சமுதாயத்தை நாம் அசைக்க முடியாதென்பதை மிஷனரிச் சிந்தை யுள்ள கிறிஸ்தவர்கள் ஒத்துக்கொள்வார்கள்.

(29ஆம் கேள்வி-பதிலையும் வாசியுங்கள்.)

